ஆதரவுடன் சீராட்டி

# ஆஸ்டர்மில்க்

பாலூட்டி...

உங்கள் ஆசைக் கண்மணியின் பாக்கியம்: ஆஸ்டர்மில்க் அளிக்கும் ஆரோக்கியம். காரணம், தாய்ப்பாலுக்கு நிகரானது ஆஸ்டர்மில்க். பரிசுத்தமான பாலிலிருந்து தயாரிக்கப்பட்டுள்ள ஆஸ்டர்மில்க், பாப்பாவின் பச்சிளம் ஜீரண சக்திக்கேற்பப் பிரத்தியேகமாகப் பக்குவப்படுத்தப்பட்டுள்ளது. தவிர, பற்களும், எலும்புகளும் திட வளர்ச்சி பெறுவதற்கான வைட்டமின் 'டி'யும் இரத்த சோகை தட்டாமல் காப்பதற்கான அயச் சத்தும் அதில் சிறப்புறச் சேர்க்கப்பட்டுள்ளன.




...தாய்ப்பாலுக்கு நிகரானது.

இலவசம்: 'ஆஸ்டர் மில்க் புத்தகம்' (ஆங்கிலப் பிரதி)... விரிவுமிக்க, குழந்தைப் பராமரிப்பு நூல்... தபால் செலவுக்காக 30 நயா பைசா தபால் வில்லைகள் இணைத்து எழுதுக: ஆஸ்டர்மில்க்' தபால் பெட்டி எண் 2420, சென்னை-2.

OS.9-X51-M. TM

# கல்கி



பட விளக்கம் 6ம் பக்கம் பார்க்க

## பொருளடக்கம்

சோபகிருது, ஆனி 2௳
ஜூன், 16௳ 1963



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.



மலர் 22 | தமிழ்த்திரு நாடுதன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 46

# பிரதமரின் பொறுப்பு

ராஷ்டிரபதி ராதாகிருஷ்ணன் அவர்களின் அமெரிக்கச் சுற்றுப் பயணம் ஒரு நல்ல சூழ்நிலையை உண்டாக்கி வருகிறது. ஸ்ரீ டி. டி. கிருஷ்ணமாச்சாரியார் அவர்கள் அமெரிக்க அரசியல் வட்டாரங்களில் ஓரளவுக்குச் சுமுகமான மனோபாவத்தை ஏற்படுத்தினார் என்றால் ராஷ்டிரபதி அவர்கள் அமெரிக்க மக்களிடமும் இந்தியாவின்பால் சகாய எண்ணத்தை உறுதிப்படுத்தி வருகிறார். இவ்விருவரின் அமெரிக்க விஜயத்தால் ஏற்பட்டிருக்கும் நல்ல விளைவுகளைக் கண்டு மகிழ்கிறோம்.

என்றாலும் இந்த மகிழ்ச்சி நிறைவுபெற வேண்டுமானால் இவ்விரு தலைவர்கள் அமெரிக்காவுக்குச் சென்றது மட்டும் போதாது. சில மாதங்களுக்கு முன்பு ராஜாஜி கூறியதுபோல் பிரதமர் நேருஜியே அமெரிக்காவுக்குச் சென்று, தற்போது ராஷ்டிரபதி மனம் விட்டுப் பேசியதுபோல உள்ளத்தைத் திறந்து பேசி, அமெரிக்காவுடன் நட்பு ஒப்பந்தம் செய்து கொண்டால்தான் அவர்களின் பரிபூரணமான சகாயம் கிடைக்கும்.

பேச்சளவில் 'நடுநிலைமை' 'கோஷ்டி சேராமை' என்றெல்லாம் சொன்னாலும் அமெரிக்காவின் சகாயம் நமக்கு அவசியம் என்பதை அரசாங்கம் அறிந்துதான் இருக்கிறது. நமது பொருளாதார இணைப்பு மந்திரியையும், ராஷ்டிரபதியையும் அமெரிக்காவுக்கு அனுப்பியிருப்பதற்கு இந்த உணர்வுதான் காரணம். அர்த்தமற்ற சங்கோசத்தை விட்டு இந்த உணர்வை இன்னும் திடமாகச் செயலில் காட்ட வேண்டும்.

அமெரிக்காவில் இந்தியாவைப் பற்றிச் சந்தேகங்கள் ஏற்படப் பிரதமரின் அந்நியக் கொள்கைதான் காரணம். 'நடுநிலைமை' என்று சொல்லிக்கொண்டே நேருஜி கம்யூனிஸ்ட் சக்திகளின் பக்கமாகச் சாய்ந்திருக்கிறார் என்பதாக அமெரிக்கப் பொதுமக்களுக்கும், சட்டசபை அங்கத்தினர்களுக்கும் சம்சயம் உண்டு. இதை அறவே நீக்கவேண்டுமானால் பிரதமர் அவர்களிடமிருந்து நேர்முகமாகவும் அவருடைய வாய்மொழியாகவும் உத்தரவாதம் வருவது அவசியம். 'இந்தியாவில் பிரதமர்தான் அரசாங்கக் கொள்கைகளை வகுப்பவரும், நிறைவேற்றுபவரும் ஆவார்' என்பது அமெரிக்காவுக்கு நன்றாகத் தெரியும். எனவே அவரே நட்புக் கரம் நீட்டினால்தான் அந்நாட்டு மக்களும் சட்டசபையினரும் நமக்குத் தாராளமாக உதவ முன்வருவார்கள். பொதுமக்களின் கருத்துக்கு விரோதமாகச் செல்ல இயலாத ஜனாதிபதி கென்னடி அவர்கள் அப்போதுதான் நம்முடைய ஆபத்தைத் தீர்க்க முனைந்து நடவடிக்கை எடுக்க முடியும்.

'அமெரிக்காவுடன் நாம் நல்லிணக்கம் பெற வேண்டும்; சீனாவை எதிர்க்க அதனுடைய ரத்தபந்துவான ருஷியாவை எதிர்பார்த்துப் பயனில்லை' என்பதே இந்தியப் பொதுமக்களின் ஏகோபித்த அபிப்பிராயம். இந்த அபிப்பிராயத்தை நம்முடைய அரசாங்கத்தின் தற்போதைய பிரதிநிதியாகிய நேருஜிதான் தெளிவாகவும் வலிவாகவும் அமெரிக்காவில் வெளியிட்டு, அம்மக்களின் ஆதரவைப் பெற்றுத்தர முடியும்.

இப்போது அமெரிக்காவில் நமக்குக் கிட்டியுள்ள ஆதரவு சற்றும் தளர்ச்சியுறாமல் பார்த்துக் கொள்வது நேருஜியின் கையில்தான் இருக்கிறது. தம்முடைய வழக்கப்படி இரண்டுங்கெட்டானாக அவர் ஏதும் சொல்லி அமெரிக்கர்களுக்கு எரிச்சலூட்டாமலிருக்க வேண்டியது அவசியம். ஓய்வு வேண்டியும், நாட்டின் அவசியங்களை முன்னிட்டும் அவர் அமெரிக்கா செல்ல இயலாதிருப்பினும், இப்போது தோன்றியுள்ள சுப சூசகங்களையேனும் தகர்க்காமல் ராஜநீதியுடன் விவேகமாக நடந்து கொள்வாராக!

குறைகளைச் சரிப்படுத்துகிறார்!

கட்டாய சேமிப்பு

குறைந்த சம்பளக் காரர்கள்

ஹிந்தி பேசாதார்

ஹிந்தி பேசுவோர்

சோஷலிஸ சமத்துவம்!

நல்லெண்ணம்

நன்கொடை மேகம்

# அருட்செல்வர் மறைந்தார்

கத்தோலிக்கத் தலைமை குருவாகிய போப் ஜான் அவர்களின் மறைவு உலகின் எல்லாப் பகுதி மக்களையும் துயரத்தில் ஆழ்த்தி யிருக்கிறது. காரணம், அவர் குறிப்பிட்ட ஒரு மதத்தினரிடம் மட்டுமின்றி மனித குலம் முழுமையிடமும் உள்ளன்பு பாராட்டி வந்ததுதான். சில காலத்துக்கு முன் அவர் வெளியிட்டிருந்த 'என்ஸைக்ளிகல்' ஸ்ரீமுகம் அவரது பரந்த மனிதாபிமானத்துக்கு ஒரு சான்றாகும். அணுகுண்டு சோதனைகளை நிறுத்த வேண்டும் என்றும் ஆயுத பரிகரணம் செய்யவேண்டும் என்றும் இந்த ஸ்ரீமுகத்தில் அவர் வல்லரசுகளைக் கேட்டுக் கொண்டிருந்தார். ராஜாஜி அமெரிக்காவிலிருந்து இந்தியா திரும்பும் வழியில், போப்பாண்டவரைச் சந்தித்த போது அணு ஆயுதக் கொடுமை பற்றிப் போப் அவர்கள் விசேஷ சிரத்தை காட்ட வேண்டும் என்று கோரினார். 'தகுந்த சமயத்தில் வேண்டியதைச் செய்கிறேன்' என்று அவரும் வாக்களித்தார். ராஜாஜியின் கோரிக்கை போப் அவர்களின் உள்ளத்தில் எவ்வளவு ஆழப் பதிந்து விட்டது என்பதை அவரது 'என்ஸைக்ளிகல்' அறிக்கையில் கண்டோம். குருஷேவும், கென்னடியும் போப் அவர்களின் அருளாணையை நிறைவேற்றினால் அவருக்கு என்றும் அழியாத ஒரு நினைவுச் சின்னத்தை ஏற்படுத்திய பெருமையைப் பெறுவார்கள்.



# என்ன சேதி?

**'கல்கி'யில் கருத்தரங்கு**

நம்முடைய வாழ்வு தாழ்வுகளை நிர்ணயிக்கும் ஒரு மாபெரும் பிரச்னை ஆட்சி மொழிச் சட்டம். பொது மக்கள் யாவரும் அதன் உட்கருத்துக்களையும் விளைவுகளையும் உள்ளபடி உணர்ந்து எதிர்காலத்தில் தங்களின் நலன்கள் பாதிக்கப்படாமல் காத்துக் கொள்ள வேண்டியது அத்தியாவசியமாகும். எனினும் மக்கள் இவ்வாறு ஆட்சி மொழிச் சட்டத்தின் முக்கியத்துவத்தை உணராதவாறு அரசினரும், அவர்களுக்கு உறுதுணையாக நிற்கும் சிலரும் பிரச்னையைக் குழப்பி வருகிறார்கள். 'தமிழா? ஆங்கிலமா?' என்ற ஒரு வாதத்தைக் கிளப்பி, ஹிந்தி ஏகாதிபத்தியத்துக்கு அடிகோலச் சிலர் முன் நிற்கிறார்கள். இக்குழப்பத்தை நீக்கி மக்களுக்கு இவ் விஷயத்தில் தெளிவு தந்து பொதுஜன அபிப்பிராயத்தை உருவாக்குவது தென்னாட்டின் எதிர்கால வாழ்வுக்கு ஜீவாதாரமாகும். இந்தப் பெரு நோக்குடன் அடுத்த 'கல்கி' இதழிலிருந்து ஆட்சி மொழி விஷயமாக நாட்டின் பேரறிஞர்களில் சுமார் இருபது பேர்களின் சீரிய கருத்துக்களையும், சிறப்புமிக்க யோசனைகளையும் நம் வாசகர்களுக்கு வழங்குகிறோம். 'இந்தியாவின் ஆட்சி மொழி: ஆங்கிலமா? ஹிந்தியா?' என்ற இந்தக் கருத்தரங்கில் பிரபல அரசியல் தலைவர்களும், சிந்தனையாளர்களும், கல்வித் துறை நிபுணர்களும், கலைஞர்களும், சமூக வாழ்வில் முக்கியத்துவம் வாய்ந்தவர்களும் பங்கு பெறுகிறார்கள். நேயர்கள் இந்த நல்ல வாய்ப்பைப் பூரணமாகப் பயன்படுத்திக் கொண்டு மக்கள் கருத்தை உருவாக்கிச் சிறுபான்மையினரின் உரிமையை வலுப்படுத்தி ஜனநாயகம் நிலை பெற உதவுவார்கள் என நம்புகிறோம்.



ஸ்ரீ ஏ. கே. ரங்கநாதம்

**வருந்துகிறோம்**

ஸ்ரீ ஏ.கே. ரங்கநாதம் அவர்களின் மறைவில் தமிழகம் தனது பழம் பெரும் தொழிலதிபர்களில் ஒருவரை, தர்மவான் ஒருவரை இழந்திருக்கிறது. என்ஜினியரிங் கண்ட்ராக்டராக இருந்த ஸ்ரீ ரங்கநாதம் ஓடுகள் தயாரிக்கும் தொழிலில் பல புதுமைகளைக் கையாண்டு பெயரும் புகழும் எடுத்தவர். மங்களூர் ஓடு என்று சொல்லப்படும் ரகத்தைத் தயாரிப்பதற்காக முதன் முதலில் கிழக்குக் கடற்கரையில் ஒரு தொழிற்சாலை நிறுவியவர் அவர். விவசாயத் துறையிலும் நவீன உற்பத்தி முறைகளை உபயோகித்துப் பயன் கண்டிருக்கிறார். தர்மத்தில் நன்னம்பிக்கையும் பெரியோர்களிடம் பக்தியும் கொண்டு வாழ்ந்த ஸ்ரீ ரங்கநாதத்தின் ஆன்மா உயர்கதி அடைந்திருக்கும் என்பதில் ஐயமில்லை.



# போகிறபோக்கில்

“இவ்வாண்டு முதல் மூன்று மாதத்துக்குள் 121 சர்க்கார் உத்தியோகஸ்தர்களுக்குத் தண்டனை விதிக்கப்பட்டிருக்கிறது. காரணம், இவர்கள் மீது லஞ்சக் குற்றம் இருந்ததுதான்'' என்று டில்லி அறிக்கை ஒன்று கூறுகிறது.

இந்த அதிகாரிகளெல்லாம் இப்போது தண்டனையை அனுபவித்துக் கொண்டிருப்பார்கள் என்பதில் ஐயமில்லை. இதில் சிலருக்கு வேலையே போய் விட்டதாம். இன்னும் சிலருக்குச் சம்பள உயர்வு வெட்டு, பதவி உயர்வு ரத்து முதலிய தண்டனைகள் வழங்கப்பட்டிருக்கின்றன.

இந்த அறிக்கை வெளியான அன்றே இன்னொரு அறிக்கையும் வந்திருக்கிறது. அதாவது திரு மாளவியா விவகாரத்தை விசாரிக்கும் நீதிபதியின் அபிப்பிராயம் ''கூடிய சீக்கிரத்தில்'' வருமென்று. அவர் அபிப்பிராயம் வந்ததன் பிறகு நடவடிக்கை எதுவும் இருக்குமா, இருந்தால் அதற்கு எத்தனை காலமாகும் என்பது தெரியவில்லை!

ஃ ஃ ஃ

போப்பாண்டவர் மறைவுக்கு அனுதாபம் தெரிவித்து கம்யூனிஸ நாடுகளும் செய்திகள் அனுப்பியிருக்கின்றன. நாத்திக நாட்டின் தலைவரான குருஷேவ் 'சமாதானத்துக்காகப் பாடுபட்டவர்' என்று போப்பாண்டவரைப் பாராட்டியிருக்கிறார்!

நாஸ்திக நாடுகளின் பாராட்டையும் பெற்ற போப் இவர் ஒருவர்தான் என்றால் மிகையல்ல!

இரண்டாவது உலக யுத்தத்தின் போது வாடிகனில் அப்போதிருந்த போப்பாண்டவரையும் ஸ்டாலினையும் சம்பந்தப்படுத்திய சம்பவம் ஒன்று நடந்தது.

யால்ட்டாவில் நேச நாட்டுத் தலைவர்கள் மந்திராலோசனை நடத்தினார்கள். அப்போது அமெரிக்காவின் தலைவரான ரூஸ்வெல்ட், ஸ்டாலினையும் சர்ச்சிலையும் பார்த்து: ''நமது முயற்சிகளைப் போப்பாண்டவரும் ஆதரிக்கிறார்'' என்றாராம்.

''போப்பாண்டவர் என்றால் யார்?'' என்றாராம் ஸ்டாலின்.

''வாட்டிகன் தலைவர்'' என்றிருக்கிறார் சர்ச்சில்.

''அப்படியானால் அவரிடத்தில் எத்தனை பட்டாளங்கள் இருக்கின்றன?'' என்று கேட்டாராம் ஸ்டாலின்.

இப்படியாகப் போப்பாண்டவர் பற்றி ஞான சூன்யங்களாக இருந்த கிரம்லின் தலைவர்களைத் தம் அன்பாலும் கருணையாலும் மாற்ற முயன்றவர் போப் ஜான். அவர் மறைவு உலகத்துக்கே ஒரு பெரிய நஷ்டம்.

## அமெரிக்காவில் நம் ஜனாதிபதி



ஜனாதிபதி ராதாகிருஷ்ணன் அவர்களுடைய அமெரிக்க விஜயம் பாரதப் பண்பாட்டை அவர்கள் அறிந்துகொள்ள வாய்ப்பளித்தது. ஜனாதிபதியின் அரிய உரைகளைக் கேட்டவர்கள் பிரமித்துப் போயினர். இதற்கொரு நல்ல சான்றாக அமெரிக்க ஜனாதிபதி கென்னடியே, “அவர் (டாக்டர் ராதாகிருஷ்ணன்) இன்று உலக விவசாய மகாநாட்டில் எவ்வித குறிப்புத்தாள்களுமின்றி அற்புதமான சொற்பொழிவாற்றினார்; கைகளை அசைக்காமலே மக்களின் வரவேற்பை ஏற்றுக் கொண்டார்; இறைச்சியைத் தொடாமலே மதிய சாப்பாட்டை முடித்துக் கொண்டார். இவ்வாறு பல அரிய பாடங்களை இன்று தொடர்ந்தாற்போல் அவரிடம் கற்றுக் கொண்டோம்'' என்று வியந்தார். பாரதப் பண்பை அமெரிக்காவில் நமது ஜனாதிபதி விளக்கும் அழகைக் கண்டு நம் தோள்கள் பூரிக்கின்றன.

## மிக நேர்த்தியான எம்ப்ராய்டரி!

# மெர்ரிட்*

## தையல் மெஷினில்
## மிகச் சுலபமாகச் செய்யலாம்!




**நீங்கள் கவனிக்கவேண்டிய மெர்ரிட்டின் தனிப் பெருஞ்சிறப்புகள்:**

■ [illegible] கட்டுப்பாடு இருப்பதால் மிக நேர்த்தியான எம்ப்ராய்டரி வேலைகளுக்கு மிகவும் ஏற்றது. மிகவும் சுலபமாக இதன் வேகத்தை கட்டுப்படுத்த முடியும். ■ மெல்லிய துணிகளையும் கனமான துணிகளையும் உறுதியாகவும் நேர்த்தியாகவும் தைக்க வல்லது. ■ கவர்ச்சியான தோற்றம். வசீகர மிக்க அமைப்பு. ■ மிகக்குறைந்த அளவு பராமரிப்பு. அடிக்கடி பழுதாகாது. ■ தயாரிப்பில் உள்ள குறைபாடுகளுக்கு ஸிங்கர் அளிக்கும் ஒரு வருட உத்தரவாதம்.

மிகச் சிறந்த ஸிங்கர் எண்ணெயையும் தையல் ஊசிகளையும் கேட்டு வாங்குங்கள்.

**மிகச் சுலபமான 'ஸிங்கர்' தவணைமுறை திட்டத்தில் 'மெர்ரிட்' தையல் மெஷினை இன்றே வாங்குங்கள்.**

...ஸிங்கரின்* தனியான சிறப்புகளுடன் தரம் குறையாது தயாரிக்கப்பட்டது.

விற்பனைக்குப் பின் உடனடியாக வழங்கப்படும் தகுந்த சேவை

மெர்ரிட் தையல் மெஷின் உங்கள் அருகாமையிலுள்ள ஸிங்கர் கடையிலும் அங்கீகாரம் பெற்ற ஸிங்கர் வியாபாரிகளிடமும் கிடைக்கும்.

S.G. I TAM.

*ஸிங்கர் தயாரிப்பு ஸ்தாபனத்தின் டிரேட்-மார்க்




## 10

நற்கதி கிடைப்பதற்கு உரிய மார்க்கம் மிக எளிதாக இருந்தும், அதைவிட்டு மக்கள் ஏன் தீய நெறியிலே சென்று நரகத்தில் அழுந்துகிறார்கள் என்று வருந்துகிறார் ஆழ்வார்.

நா,வாயில் உண்டே;
நமோநா ரணாஎன்று
ஓவாது உரைக்கும்
உரை உண்டே—

[ஓவாது—இடைவிடாமல் எப்போதும். உரை உண்டே—சொல்ல வேண்டிய மந்திரம் இருக்கிறது.]

கடவுள் கொடுத்த நாக்கு இருக்கிறது. அதை அசையச் செய்து 'நமோநாரணா' என்கிற எளிய மந்திரம் சொல்வதற்கு இருக்கிறது. இது காரணமாக,

மூவாத
மாக்கதிக்கண் செல்லும்
வகைஉண்டே

[மூவாத மாக்கதி—திரும்பி வருதல் இல்லாத நேர்வழி. மூவாத—மூப்பு அடையாத அதாவது இன்பத்திற்குத் திகட்டுதல் இல்லாத என்றும் பொருள் கொள்ளலாம். மாக்கதிக்கண்—சிறப்பான வழியிலே. செல்லும் வகை—செல்கிற உபாயம். உண்டே—இருக்கிறது.]

நாக்கினால் இந்த எளிய மந்திரத்தை ஓயாமல் உச்சரித்துக் கொண்டிருந்தால் போதும். நேரே நற்பதவிக்கு அழைத்துச் செல்லும் உபாயம் அது. அப்படியிருந்தும்,

என்ஒருவர்
தீக்கதிக்கண் செல்லும்
திறம்!

[என்—என்னே, என்ன வியப்பு! ஒருவர்—யாரேனும், அதாவது அற்ப அறிவு அடைந்தவரேனும். தீக்கதிக்கண்—தீயமார்க்கத்தில். செல்லும் திறம்—செல்லுகிற காரியம்.]

இவ்வளவு எளிதாக ஒரு நேர் வழி இருந்தும், அதை விட்டு விட்டுத் தீய வழியிலே செல்கிறார்களே, வேண்டுமென்றே கெட்டுப் போவதுபோல் துர்க்கதி அடையப் போகிறார்களே என்று வருத்தமும் வியப்பும் அடைந்து பாடுகிறார் ஆழ்வார்:

நாவாயில் உண்டே
நமோநா ரணாஎன்று
ஓவாது உரைக்கும்
உரைஉண்டே—மூவாத
மாக்கதிக்கண் செல்லும்
வகைஉண்டே என்ஒருவர்
தீக்கதிக்கண் செல்லும்
திறம்!

மோட்சத்தை அடைவது இவ்வளவு எளிதாக இருந்தும், மிகுந்த பிரயாசைப்பட்டுப் பாப மார்க்கத்தில் செல்கிறார்களே என்று மக்களின் அறியாமையைச் சுட்டிக் காட்டி உபதேசிக்கிறார் ஆழ்வார்.

இயற்கை எழில் பெற...

கலாநிகேதனின் சேலை; கத்தாரின் நகை

## எழிலுக்கு எழில் கூட்ட... லக்மே முகப் பவுடர்

சரும எழிலோடு நேர்த்தியாய் இணையும் 6 வித நிறங்களில் கிடைக்கும் பரிபூரணப் பவுடர்— முகத்திற்கு மெல்லிய மோகனத் திரையிட்டு, களங்கங்களை மறைத்துவிடுகிறது. மேனியெழிலோ பட்டுப் போன்ற மென்மையினைப் பெறுகிறது.

நேசுரல்-ராசேல்-கோல்டன் பீச்-ரோஸ் கோரல்-ஸன்டான்-க்ளோயிங் அம்பர்

# லக்மே




கடவுள் அவர்களைக் காப்பாற்றவில்லை. விமானத் தாக்குதலில் உயிர் தப்பியவர்களை பர்மா இந்திய எல்லையிலுள்ள ஒரு ஆஸ் பத்திரியில் கொண்டு வந்து சேர்த்திருக் கிறார்கள்.
மிஸ்டர் சுந்தரராமன்! உங்களிடம் எப்படிச் சொல்வது என்று...
26
சந்திரனே சாட்சி
கதை
கௌசிகன்
சித்திரம்
நானும் ஒரு டாக்டர் தான் கர்னல் சார்! என் நிலை எனக்குத் தெரியும்.


உங்களுடைய இடக் கையை வெட்டி எடுத்தால் தான்...
..நான் பிழைப்பேன். அவ்வளவு தானே? உங்கள் கடமையைச் செய்யுங்கள் டாக்டர்.


காயம் பட்டவர்களின் துன்பம் துடைக்க யுத்தத்தில் சேர்ந்ததற்கு எனக்குக் கிடைத்த பரிசு 'நொண்டி' என்ற பட்டம்...


நர்ஸ், என்னோடு வந்தவர்களில் இன்னும் யாராவது பிழைத்திருக்கிறார்களா?
சொல்லவே நெஞ்சம் நடுங்குகிறது டாக்டர். நீங்கள் அழைத்து வந்த 120. பேரில் 30. பேர்களைத் தான் எங்களால் கண்டு பிடிக்க முடிந்தது.


உயிர் பிழைத்தவர்களில் ஜெயராமன் என்ற இளம் போட்டோகிராபர் ஒருவர் இருக்கிறாரா? முகத்திலும் வலது காலிலும் பலமான கட்டுப் போட்டிருக்கும் அவர்.
இல்லை டாக்டர். தப்பியவர்களில் உங்களைத் தவிர ஆபீஸர் வேறு யாருமில்லை.


மிஸ்டர் சுந்தரராமன், ஒரு சந்தேகம்! உயிலைக் கொடுத்துச் சென்ற பின் நீங்கள் சேவியர் ஜோசப்டனுக்கு டெலிபோன் செய்தீர்களா!
இல்லவே இல்லை. அதற்கு அவசியம் இருக்கவில்லை. அவள் தன் உடைமைகளை விற்றுப் பணமாக்கிக் கொண்டு, குழந்தையுடன் வடக்கேயுள்ள தன் உறவினர்களுடன் வசிக்கப் போவதாக எனக்கு ஒரு கடிதம் வந்தது. அதன் பிறகு நான் எதற்காக....


லேடீஸ் அண்ட் ஜெண்டில்மென் ஆஃப் தி ஜூரீஸ், அண்ட் யுவர் ஆனர்! மோகனு தனபால் இருவரும் என் கட்சிக்காரருக்குச் சேர வேண்டிய உயிலை வஞ்சகமாகக் கைப்பற்றியுள்ளனர். அதை இங்கு தாக்கல் செய்ய உத்தரவிட வேண்டும்.


கனம் நீதிபதியவர்களே, ஜூரர்களே! இந்தக் கட்டுக் கதையை நீங்கள் நம்பக் கூடாது. என் கட்சிக்காரரிடம் பிரஸ்தாப உயில் எதுவும் கிடையாது. சாட்சி அற்புதமான கற்பனைத் திறம் படைத்தவர். அழகாக, உருக்கமாக, உண்மையேபோல ஒரு கதையை ஜோடித்து விட்டார். ஆரம்பத்திலிருந்து முடிவுவரை அது மோசக் கருத்துடன் பின்னப்பட்டது என்பதை நான் சொல்லாமலே அறிந்து கொண்டிருப்பீர்கள். இந்த மோசடி வழக்கைக் கனம் கோர்ட்டாரவர்கள் தள்ளுபடி செய்து தீர்ப்பளிக்கும்படி மறுபடி கேட்டுக் கொள்ளுகிறேன்.


கனம் நீதிபதியவர்களே எனக்குப் பேச அனுமதி வேண்டும்.
நீங்கள் யார்? இந்த வழக்கில் உங்களுக்கு என்ன தொடர்பு?
இவர் பெயர் சந்துரு. துப்பறியும் இலாகாவைச் சேர்ந்தவர்.
ஓ! நீங்கள் சொல்ல வந்ததைச் சொல்லலாம்.


பிரதிவாதி வக்கீல் தமது கட்சிக்காரரை உத்தமராக வர்ணிக்கிறார். அதுதான் முறை. இதை மோசடி வழக்கென்கிறார். ஆனால் நான் சொல்கிறேன், அவரது கட்சிக்காரர் மோசடியையே தமது தொழிலாகக் கொண்டவர் - பணத்துக்காக எதையும் - ஏன் கொலையையே கூடச் செய்யக் கூடியவர் - செய்தவர் என்று! அதை என்னால் நிரூபிக்கவும் முடியும்...!


ஆர்டர்...
ஆர்டர்...!

தொடரும்

# அறிவுக் கனலே

ரா. கணபதி 12

சின்னஞ் சிறு மாற்றுப் பெண் வீட்டுக்கு வந்ததிலிருந்து சந்திரமணிக்கு இன்பப் பொழுதாகச் சென்றது. சாரதாவை அலங்கரித்து அழகு பார்ப்பாள் சந்திரா. கூடவே அழவும் செய்வாள்.

'இன்னும் எத்தனை நாட்களுக்கு இந்தக் குழந்தையை இப்படி அலங்கரிக்க முடியும்? இந்த நகை நட்டுக்கள் எல்லாம் லாஹூராவின் வீட்டிலிருந்து இரவல் வாங்கியவை அல்லவா? கலியாணத்தின் போது போட்டுப் பார்ப்பதற்காக வாங்கிய ஆபரணங்களை இன்னும் திருப்பித் தராமல் வைத்திருக்கிறோமே. அவர்கள்தான் என்ன நினைத்துக் கொள்வார்கள்? அவர்கள் ஒன்றும் நினைத்துக் கொள்ளக் கூடாது என்பதற்காக நகைகளைத் திருப்பிக் கொடுத்து விடலாம் என்றாலோ, அப்போது இந்தப் பெண் என்னவெல்லாம் நினைத்துக் கொள்ளுமோ? பாவம், இதெல்லாம் தனக்கே தனக்கு என்று எண்ணித் தொட்டுத் தொட்டுப் பார்த்துக் கொண்டல்லவா இந்தக் குட்டி சந்தோஷப்படுகிறது? இதனிடம் எப்படி வாய் கூசாமல் 'நகையையெல்லாம் கழற்றித் தா' என்று கேட்பது?'

''ரகுவீரா, எங்களை ஏனடா இப்படித் தரித்திரத்தில் வாட்டி எடுக்கிறாய்?'' என்று வேதனைப்பட்டாள் சந்திரா.

''நீ வருத்தப்படாதே, அம்மா. நகைகளையெல்லாம் நான் அதனிடமிருந்து வாங்கித் தருகிறேன்'' என்றார் கதாதரர்.

சாரு தூங்கிக் கொண்டிருந்தது. தன் மகளிடம் போவது போல அவளை நெருங்கினார் கதாதரர். தமது மகளைத் தொடுவது போல அவளைத் தொட்டு ஒரு காதில் உள்ள குண்டலத்தைக் கழற்றினார். அவளுடைய சின்னஞ் சிறு



# அருட் புனலே!



முகத்தைத் திருப்பி, மறு பக்கத்தில் கன்னத்தில் அழுந்தி அடையாளம் செய்திருந்த இன்னொரு குண்டலத்தையும் கழற்றினார். இளசான கழுத்தைத் தூக்கிச் சங்கிலிகளைக் கழற்றினார். சாருவுக்குச் சற்றே தூக்கம் கலைந்தது. அவளைத் தட்டி நன்றாக உறங்கச் செய்தார் கதாதரர். மோதிரங்களைக் கழற்றினார். ஒவ்வொன்றாக இரவல் நகை எல்லாவற்றையும் எடுத்தாயிற்று. புஷ்பம் இல்லாமலே அழகாக இருக்கும் செடியைப் போலச் சாரு அந்த நகைகளைப் பற்றிக் கனவு கண்டபடி தூங்கினாள்.

சந்திராவின் கையில் அந்த நகைகள் கனமாக விழுந்தன; அவளது நெஞ்சம் கனத்தது.

''கதாயீ.....'' என்று அரற்றினாள்.

''வருத்தம் ஏன்?'' என்றார் கதாதரர்.

நல்ல அதிசயக் கணவர்! உலக இச்சைகளையெல்லாம் களையச் செய்து தமது மனைவியை சந்நியாசினியாக அல்லவா அவர் மாற்றப் போகிறார்? இந்த நகைகளைக் களைந்த நிகழ்ச்சி அதற்குப் பொருத்தமான முகவுரைதானே?

''அம்மா, அம்மா. எங்கேம்மா என்......?'' என்று உதட்டைச் சுளித்துக்கொண்டு வந்தாள் விழித்தெழுந்த சாரதா. கொழுகொழு வென்




றிருந்த கையைத் திருப்பித் திருப்பிப் பார்த்துக் கொண்டாள். கழுத்தைத் தடவிப் பார்த்துக் கொண்டாள்.

அந்த ஐந்து பிராயத்து மாநிறப்பெண்ணைச் சந்திரமணி வாரி மடியில் போட்டுக் கொண்டாள். அவளுடைய முதுகைத் தனது நரம்பு புடைத்த விரல்களால் தடவியபடியே ''சாருக் கண்ணு,

இந்த நகையெல்லாம் போனால் போகட்டும். கதாயி உனக்கு இதைவிட உயர்த்தியான நகை பண்ணிப் போடுவான்'' என்று ஆறுதல் கூறினாள்.

ஆம், கதாயி அவளுக்கு மிகமிக உயர்வான ஆபரணங்களை அணிவிக்கத்தான் செய்தார். மக்களை அன்பு செய்தல், ஆண்டவனைப் பக்தி செய்தல், தன்னைத் தியாகம் செய்தல் — இந்த மூன்றுக்கும் மேலாக எந்த அணி உண்டு? பொன்னில் இழைத்த மணியாக இந்தத் தத்துவ அணிகளில் பதிந்து சுடர் வீசப் போகிறாள் சாரதாமணி.

சுமார் இரண்டு வருஷங்கள் கமார்புகூரிலேயே இருந்துவிட்டார் கதாதரர். ஆவேசங்கள் எல்லாம் இப்போது பூரணமாக அடங்கி விட்டன. தனது செல்லப் பிள்ளை தன்னுடனேயே இனியும் இருக்க வேண்டும் என்றுதான் சந்திரா விரும்பினாள். ஆனால் கதாதரருக்கு அந்த வீட்டின் வறுமை தெரியாமல் இல்லை. கமார்புகூரில் அவருக்கென்ன தொழில் இடைக்கும்? தாம் தண்டச்சோறு சாப்பிட்டுக்கொண்டிருப்பதாக அவருக்குத் தோன்றியது. மீண்டும் தக்ஷிணேசுவரத்துக்கே புறப்பட்டார். தொழில் செய்ய மட்டுமில்லை — உயிர் வாழ்வதற்கே தக்ஷிணேசுவரம் தேவைப்பட்டது. கண்ணீரும் கம்பலையுமாக கதாதரரை வழியனுப்பி வைத்தது கமார்புகூர்.

பிரிந்திருந்து மீண்டும் பவதாரிணியிடம் சேர்ந்த கதாதரர் முன்னைப் போலவே மீண்டும் பக்தி ஆவேசமானார். 'முன்னைப் போல' என்று சொல்வது கூடத் தவறு. முன்னைவிட அன்பு வெறி மேலோங்கி விட்டது கதாதரருக்கு. இருளில் இருந்துவிட்டு ஒளிக்கு வந்தால் முதலில் ஒரேயடியாகக் கூசி விட்டுத்தானே பிறகு கண் பழக்கப்படுகிறது? அதேபோல ஒளியிலிருந்து இருளுக்கு வந்தாலும் முதலில் காட்சி என்பதே தெரியாமல், பிறகுதானே அந்த இருளில் பொருளைத் துழாவக் கண் பழகுகிறது? இருள் நிறமாயிருந்தும் ஒளி மயமான அம்பிகையை, ஒளிமயமாயிருந்தும் இருள் நிறைந்த வெளி உலகிலிருந்து திரும்பி வந்த கதாதரரின் மனசு முதலில் தாங்க வொண்ணாமலே திக்குமுக்காடியது. பட்டாசாரியர் 'குணமாகி'த் திரும்பிவிட்டார் என்று நினைத்த கோயில் சிப்பந்திகள் முன்பு அவர் இருந்ததே தேவலை போலிருக்கிறதே என்று எண்ண வேண்டியதாயிற்று.

பவதாரிணியைக் கண்டதும் மற்ற நினைவுகள் எல்லாம் கதாதரரின் உள்ளத்திலிருந்து அறவே விலகி விட்டன. பூஜையை அவர் ஏற்று நடத்த முடியவில்லை. அழுதும், சிரித்தும், தவம் புரிந்தும் அற்புத ஆராதனை புரிந்து வந்தார் அவர்.

இந்நாட்களில் கதாதரர் நாள் கணக்காகத் தம்மை மறந்து தவம் புரிந்து வந்தார். ஹடயோகமும் அப்பியசித்தார். அவருடைய சிகையைக் காகமும், குருவியும் குத்திக் கிளறி இரை தேடுவதையும் உணராமல் தேவியின் நினைவில் திளைத்திருந்தார். மதுரா நாதருக்கு இதையெல்லாம் காணக் காண அவரிடம் பக்தி மேலோங்கியது. பூஜை செய்யாவிடினும் இவர் தக்ஷிணேசுவரத்தில் இருப்பதே ஒரு வரப் பிரசாதம் என அவர் மதிக்கத் தொடங்கி விட்டார். கதாதரர் அம்பாளிடம் பக்தி செய்து அற்புத தரிசனம் பெற்றது போலவே, கதாதரர் செலுத்தும் பக்தியிடம் பக்தி செலுத்திய மதுரா நாதரும் அவரிடம் அற்புத தரிசனங்கள் பெற்றார்.

ஒரு நாள் தமது அறையை யொட்டிக் கிழக்கு மேற்காகச் செல்லும் வராந்தாவில் கதாதரர் உலவிக் கொண்டிருந்தார். ஆலயத்துக்கும் பஞ்சவடிக்கும் இடையே உள்ள இல்லத்தின் ஓர் அறையிலிருந்து மதுராநாதர் கதாதரரைப் பார்த்துக் கொண்டிருந்தார்.

கதாதரரையா?

கதாதரரைத்தானா?

அதோ, பட்டுக் கொசுவம் வருடப் பெயர்ந்து வரும் அந்தச் செந்தாமரைப் பாதங்கள்—அவை கதாதரருடையவையா?

பெருகும் கண்களைத் துடைத்துக் கொண்டு பார்த்தார் மதுராநாதர். மயிர்க்கூச்செடுத்தது அவருக்கு. குளிர் பரப்பும் அந்தத் துளிர்ப் பாதங்கள் சாக்ஷாத் சர்வேசுவரியுடையவை அல்லவா?

பாபம் மலிந்த இந்தப் பூவுலகில் பதிந்து வரும் அந்தப் பத்துப் பூவிரல்களும்—ஹம்ஸகதியைக் கற்றுக் கொண்டு தத்தி வரும் பத்துப் பூக்களும் — அந்தப் பூக்கள் பூத்த பசங் கொடியாகிய மேனியும், அந்தக் கொடியை மொய்க்கும் வண்டினங்களான குழலுமாக வருவது அன்னை பரமேசுவரியே அல்லவா?

இந்த அமிருதக் காட்சியைக் காண முடியாமல் இந்தக் கண்கள் ஏன் இப்படி உருகுகின்றன?

கண்களை மீண்டும் துடைத்துக் கொண்டு மதுரா நாதர் பார்க்கும் போது வேதங்கள் தேடிய அந்தத் திருப் பாதங்கள் வெண்ணெயாகத் துவண்டு திரும்பி எதிர்த்திசையில் நடந்தன.

என்ன ஆச்சரியம்!

சாந்தம் ததும்பும் செம்பொன் சந்தனத்து நிறவதனம்!





**K.T.R**

பொன்னுங்கண்ணித் தைலம்
சந்தனாதித் தைலம்
ஊதுபத்திகள்

K.T.R. வாசனாதி திரவிய சாலை, விஜயபுரம், திருவாரூர், தமிழ்நாடு

சென்னை நகர விநியோகஸ்தர்கள் : ஸ்ரீ ரகுநாத் ஏஜன்ஸீஸ் 35, மங்கபதி நாயக் தெரு சிந்தாதிரிப்பேட்டை, சென்னை-2

---



# தரத்தில் உயர்ந்தது...
# மின்சாரச் செலவு குறைவு



கன்ஸவர் அமைப்புள்ள கணேஷ் டிலைட் விசிறிகள் சிறிதும் சப்தமின்றி சுற்றுவதுடன் பல்லாண்டு காலம் பழுதடையாமல், சிறந்த உழைப்பளிக்கிறது. அதிகப்படியான காற்றோட்டத்திற்காக இந்த விசிறியின் பிளேடுகள் விஞ்ஞான முறையில் அமைக்கப்பட்டு, மிக துட்பமாக இணைக்கப்பட்டிருக்கின்றன.

## கணேஷ் டிலைட் விசிறிகள்

கணேஷ் பிளவர் மில்ஸ் கம்பெனி லிமிடெட்
64-65 நஜப்கர் ரோடு, புது டில்லி-15

JWT GF 2445 T
















"இத்தனை சுறுசுறுப்பாக நான் என்றுமே இருந்ததில்லை."




**BOURN-VITA**

சக்திக்கும்
வலிமைக்கும்

தயாரிப்பாளர்கள்:
Cadbury's

நீலோத்பல மொட்டுக்களாக விளங்கிய விரல்கள் புண்டரீக அரும்புகளாக வெண்மை வீசின. திருவடியை வருடிய கொலுசு நாகப் பாம்பாக மாறி, இன்னருள் என்ற அக்காரச் சாற்றில் உருவாகிய அந்தக் கரும்பு மூர்த்தியின் கணுவாகிய கணுக்காலைச் சுற்றிக் கொண்டது.

புலித் தோலுக்கு மேலே துலங்கிய பால் வெண் முதுகில் எது பாம்பு, எது சடை என்று தெரியாதபடி கருஞ் சுற்றைகள் புரள அதோ திரும்பிச் செல்வது —

ஆம், பராத்பரனான பரமேசுவரன் அல்லவா ?

'பரத்துக்கும் பரமாகிய — அப்பாலுக்கும் அப்பாலாகிய — ஈசன் இப்பாலுக்கும் இப்பால் இவ்வளவு அருகில் வந்து ஈனனை தனக்கு, தான் வேண்டாத போதே தரிசனம் தருவது என்ன அதிசயம்?' மதுராநாதரால் அதை நம்பவே முடியவில்லை.

இதென்ன பிரமையா? கனவா ? கற்பிதத் தோற்றமா?

அதோ பரமேசுவரன் வராந்தாவின் கோடி மட்டும் சென்று திரும்புகிறான்.

திரும்பும் போது மீண்டும் அம்பிகையாகி விட்டான்!

கதாதரர் வராந்தாவில் முன்னும் பின்னுமாக உலவும் போது ஈசுவரியின் முன் அழகையும், ஈசுவரனின் பின் அழகையும் மாற்றி மாற்றிக் கண்டு பரவசமுற்றார் மதுராநாதர்.

ஈசுவரனும், அம்பிகையும், ஆசாரியனும் ஒன்றே என்ற உண்மையை யாரும் கண்டறியாத விதத்தில் கண்டநுபவித்தார்.

இன்னது செய்கிறோம் என்றே தெரியாமல் கதாதரரை நோக்கி ஓடினார் மதுராநாதர்.

அவருடைய பாதங்களில் விழுந்து விம்மி வெடிக்கலானார்.

''பவதாரிணியையும், மகாதேவனையும் உங்களில் கண்டு கொண்டேன்'' என்று கூறி கதாதரரின் கால்களில் தலையைப் புரட்டிக் கொண்டார்.

கதாதரர் அவருடைய முதுகைத் தடவிக் கொடுத்தார்.

''எழுந்திருங்கள் மதுர்பாபு! இப்படி என் காலில் நீங்கள் வந்து விழலாமா? இங்குள்ள சிப்பந்திகள் உங்களை இந் நிலையில் கண்டால் என்ன நினைப்பார்கள்? ராணி ராஸமணியின் காதுக்கு இது எட்டினால் அவர் என்ன நினைப்பார்? நான்தான் ஏதோ மந்திர தந்திரம் செய்து உங்களை வசியம் செய்கிறேன் என்றல்லவா நினைப்பார்கள்? எழுந்திருங்கள், மதுர்பாபு, எழுந்திருங்கள்'' என்றார் கதாதரர் பரபரப்புடன்.



பாகவதர் கச்சேரியில் நீலாம்பரியை விஸ்தாரமாகப் பாடியதின் பலன்!

தம்மைக் காக்க வென்றே தெய்வம் ஒரு தேகத்தைத் தரித்து வந்து இந்தத் தரணியில் உலவுகிறது என்று நிச்சயம் பெற்றார் மதுராநாதர். இதன் பின்பு மதுராநாதர் கதாதரரைக் கடவுளாகவே மதித்து அன்பு செய்தார். 'உமையும் உமையொருபாகரும் ஏக உருவில் வந்திங்கு எமையும் தமக்கன்பு செய்ய வைத்தார்' என்று அநுபூதிமான் அபிராமி பட்டர் பாடிய அநுபவத்தைப் பெற்ற பாக்கியசாலி அல்லவா மதுராநாதர்?

கதாதரரை ஜான்பஜாரில் உள்ள தமது மாளிகைக்கு அடிக்கடி வரவழைத்து உபசரித்தார் மதுராநாதர். ஈடன் பூங்கா போன்ற இடங்களுக்கு கதாதரரைச் சவாரி அழைத்துச் சென்றார். பட்டாசாரியருக்குப் பயன்படாத தமது செல்வத்தால் என்ன பயன் என்றெண்ணி அவருக்கு வெள்ளியாலும், தங்கத்தாலும் ஆன தாலங்களையும் கோப்பைகளையும் பரிசளித்தார். அம்பிகை என்ற அமிருத தத்துவத்தை அன்பு என்ற கலத்தில் ஏந்தி அனவரதமும் புசித்து வந்த கதாதரர் மதுராநாதரின் பரிசுப் பொருள்களால் சிறிதும் பெருமைப்படவில்லை.

அந்தக் காலத்திலேயே தலா ஆயிரம் ரூபாய் பெறுமானமுள்ள மிகச் சன்னமான இருசால்வைகளைமதுராநாதர்கதாதர பட்டாசாரியருக்கு அளித்தார். அது ஹிதமாக உடம்பில் படிவதை கதாதரரும் ரசித்தார். குழந்தை மாதிரி அதைப் போர்த்திக் கொண்டு ஆனந்தமாக உலாவினார். திடீரென்று அவருடைய ஆனந்தம் தடைப்பட்டது. 'தேகத்துக்குச் சிறிதே சுகம் கிடைத்ததில் நான் ஏன் இவ்வளவு ஆனந்தம் காண்கிறேன்? யாரோ பரிசளித்த இந்தச் சால்வையைப் போர்த்திக் கொள்வதால் நான் ஏன் மற்ற ஏழைகளைவிடப் பெரியவன் போல ஓர் அபிப்பிராயத்தை

ஏற்படுத்த வேண்டும்? உண்மையாயும், அறிவாயும், இன்பமாயும் உள்ள சச்சிதானந்தப் பரம்பொருள் தவிர வேறு எதை எதையோ அளிக்கவல்ல சாதனங்களால் நான் ஏன் பூரிக்க வேண்டும்? சீ, ஏன் நான் இவ்வளவு மோசமானேன்?' என்று எண்ணினுர் கதாதரர். உடனே அந்த விலை உயர்ந்த சால்வைகளைப் புழுதியில் போட்டுப் புரட்டி விட்டுத் தம் பாட்டில் செல்லலானுர்.

பிரிதொரு சமயத்தில் மதுராநாதர் தமது சொத்து முழுவதையும் பட்டாசாரியருக்கு எழுதி வைத்து விட்டுத் தாம் தர்மகர்த்தாவாக இருந்து அதைப் பரிபாலனம் செய்ய எண்ணி, இந்த எண்ணத்தைக் கதாதரரிடம் வெளியிட்டார். அவ்வளவுதான்; கதாதரருக்கு எல்லையற்ற சீற்றம் உண்டாகிவிட்டது. மதுராநாதரை அடிக்காத குறையாக அவரிடம், ''என்னைச் சம்சாரியாக்கவா பார்க்கிறீர்கள்?'' என்று கூச்சலிட்டார்.

அந்தத் தியாகத்தைக் கண்டு அயர்ந்து போனுர் மதுராநாதர். கதாதரரின் அநுபவமும், தியாகமும் இவற்றுக்கு மேலாக இத்தனை அநுபவத்தைத் தாம் பெற்றிருப்பதில் சற்றும் அகந்தையின்றி அவர் குழந்தைபோல் இருப்பதும் மதுர்பாபுவை கதாதரரின் பரம பக்தராக்கிற்று. தெய்வத்துடன் பார்க்கும்போது மனிதன் மிகவும் எளியவன் என்பார்கள். ஆனுல் கதாதரரின் எளிமையைக் கண்ட மதுராநாதரோ, 'இத்தனை எளிமையாக எந்த மனிதனுலும் இருக்க முடியாது. இந்த எளிமையே தெய்வீகமானது. இத்தகைய எளிமை வாய்ந்த பட்டாசாரியர் தெய்வமே' என எண்ணலானுர்.

மதுராநாதரும், அவரது மனைவி ஜகதம்பாதாஸியும், ராஸமணியும், கதாதரரிடம் மிகவும் பக்தி கொண்டிருப்பதைக் காணக் காண, ராதா கோவிந்தனின் அர்ச்சகரான ஹலதாரிக்கு அசூயையும் ஆத்திரமும் பற்றிக் கொண்டு வந்தன. பைத்தியம் போல நடிக்கும் இந்த கதாதரர் ஏதோ மாய மந்திரங்கள் செய்து மதுர்பாபுவை வசியப்படுத்தி விட்டார் என்றே அவர் நினைத்தார். காரணம், அவரே இவ்வாறு மாந்திரீகங்கள் செய்து மதுர்பாபுவைக் கவர நினைத்ததுதான்.

ஹலதாரிக்கு இருந்த மந்திர சக்தி காரணமாக அவரை எதிர்க்கவே யாரும் பயப்பட்டார்கள். ஒரு நாள் கதாதரர் ஹலதாரியின் சாதனை முறையைப் பற்றிச் சற்றுத் தாழ்த்திப் பேசி விடவே ஹலதாரி அவரை ரத்தம் கக்கும்படி சபித்தார். கதாதரர் குடம் குடமாக ரத்தத்தைக் கக்கினுர். அன்று அகஸ்மாத்தாக தக்ஷிணேசுவரத்துக்கு வந்திருந்த ஒரு சாது கதாதரர் கக்கும் ரத்தத்தைக் கண்டு, ''இந்த ரத்தம் உங்களிடமிருந்து வெளிப்பட்டதே நல்லது. நீங்கள் தற்போது ஹடயோகம் செய்து வருகிறீர்களல்லவா? இதனுல் உங்கள் சுஷும்னு நாடியின் வாய் திறந்து கொண்டு உங்கள் தலைக்கு அதிகமான ரத்தம் பரவத் தொடங்கி விட்டது. இவ்வாறு நேரிட்டதால் உங்களுக்குக் கெடுதல் உண்டாகாமல் நல்ல வேளையாக இப்போது உங்கள் தொண்டையில் ரத்தக் குழாய் உடைந்து இவ்வளவு குருதி வெளியாகி விட்டது!'' என்ருர்.

ஹலதாரிக்குத் தம்முடைய சாபமும் வரமானதை எண்ணி எரிச்சல் எரிச்சலாக வந்தது.

கதாதரருடைய குழந்தைத்தனத்தைக் கண்டு அவரைப் பலவிதத்தில் புண்படுத்தி மகிழ்ந்தார் ஹலதாரி.

கதாதரரிடம் அவ்வப்போது அம்பிகையைக் குறைவுபடுத்திப் பேசி அவரைத் துடிக்க வைப்பது ஹலதாரிக்கு மிகவும் பிடித்த 'விளையாட்டு'.

ஒரு நாள் ஹலதாரி கதாதரரிடம், ''கன்னங் கரேலென்று, கத்தியும் கபாலமுமாக நிற்கும் காளி தமோ குணத்தின் சின்னம்'' என்று கூறி விட்டார்.

அதனைக் கேட்ட கதாதரர் காது கொப்புளித்தாற் போலத் துடிதுடித்துப் போய் விட்டார்.

'மெத்தப் படித்த இந்த ஹலதாரி சொல்வது மெய்தானே?' என்றுகூடக் குழந்தைப் பிள்ளைத்தனமாக ஐயம் கொண்டார். அந்த ஐயத்தைத் தீர்த்துக் கொள்ளவும் அம்பிகையிடமே ஓடினுர்—கண்ணும் கண்ணீருமாக.

''அம்மா, நீ இருள் குணத்தின் உருவமாமே, உண்மையா? இல்லாவிடில் நீ ஏன் கறுப்பாய் இருக்கிருய்? கோர ஆயுதங்களைத் தாங்கி யிருக்கிருய்?'' என்று கேட்டுக் கொண்டே பவதாரிணியின் சந்நிதிக்கு ஓடினுர். அது உண்மையாக இருந்து விடுமோ என்று அவர் உள்ளம் பட்டபாடு!

கண்ணீர் விட்டுக் கொண்டு கதறிச் சென்றவர் களித்துக் குதித்தபடி ஆலயத்திலிருந்து வெளியே வந்தார்.

''ஹலதாரி, ஹலதாரி! அம்மாவைத் தமோ குணம் என்ருயே, நிஜம்தான். ஆனுல் அவள் அதுமட்டுமில்லை. குணமற்ற அவள்தான் ஸத்துவம், ராஜஸம் தாமஸம் ஆகிய மூன்று குணங்களுமாக ஆகியிருக்கிருள்'' என்று ஆனந்தத்தில் மேல் மூச்சு கீழ் மூச்சு வாங்கக் கூறினுர். அந்தக் கணத்துக்கு ஹலதாரியின் அகக் கண்ணும் திறந்தது!

நிறமற்ற ஆகாயமே நமக்கு நீல மாகத் தோன்றுகிறது.

நிறமற்ற நீரானது கடலாகத் தேங் கிக் கிடக்கும் போது நீலமாகிறது.

எல்லையற்ற விபூதிகள் வாய்ந்த காளியும், கண்ணனும் கறுப்பாக இருப் பது இதே தத்துவம்தான். அருகில் சென்று கையில் எடுத்துப் பார்த் தால் நீர் வண்ணமற்றுக் காண்பது போல் காளியின் அருகில் சென்று விட்டவர்களுக்கு அவள் வெண்மையின் தூய்மை கூடியவள் என்று புரியும்.

ஒரு சமயம் மனமோகனமாக விளங் கும் வானம் பிரிதொரு பொழுதில் பயங் கரமாகவும் தோன்றுகிறது அல்லவா? அதே போல, சௌம்யமே உருவான ராஜேசுவரி, மக்களின் மனசில் படியும் தீமைகளை ஒழிப்பதற்காகக் காளியாகிக் கையில் ஆயுதங்கள் தாங்கி யிருக்கிறாள்; உள்ளத்துக்கு அறுவை சிகித்ஸை செய் யவே அவள் ஆயுதம் தரிக்கிறாள். ருத் திரனின் உடல் மீது அவள் ஆடுவதும், கையில் பிரம்மன் சிரசைக் கொய்து வைத்திருப்பதும் வெறும் தோற்ற மாகிய இந்த உலகின் ஆக்கல், காத்தல், அழித்தல் மூன்றையும் அழித்து அதற்கு மேம்பட்ட பிரம்ம நிலையில் அவள் இருப் பவள் — அந்நிலையைப் பிறருக்கும் அளிப் பவள் — என்பதைக் காட்டவேயாகும்.

இதை யெல்லாம் அம்பிகை கதா தரருக்கு மொழியால் சொன்னளோ, உணர்வால் அறிவுறுத்தினளோ நமக்குத் தெரியாது. ஆனல் கதாதரர் மொழி யால் இவ்வளவையும் சொல்லாமல் தமது உணர்வாலேயே ஹலதாரிக்கு இந்த உண்மையை உணர்த்தினர்.

அப்போதைக்கு கதாதரரின் மகி மையை உணர்ந்தாலும் ஹலதாரிக்கு அவரது பெருமையை முற்றிலும் புரிந்து கொள்ள முடியவில்லை.

தமக்குப் போட்டியாகவே அவர் கதாதரரைக் கருதிப் பல விதங்களில் அவரை ஹிம்சித்து வந்தார்.

பரிபூரணமான எளிமையையும் சம பாவத்தையும் பெறுவதற்காக இச்சம யத்தில் கதாதரர் ஏழை எளியவர்களின் எச்சிலையும், கழிவிடங்களையும் தாமே சுத்தம் செய்தார். இதை வைத்து கதாதரரைக் குத்திக் காட்டி அழ வைப் பார் ஹலதாரி.

எல்லாவற்றுக்கும் மேலாக கதாதர ரின் பரவச அநுபவங்கள் எல்லாமே அவரது கற்பனைதான்; அவருடைய சித்தத் தடுமாற்றத்தின் விளைவுதான் என்று ஒரு நாள் ஹலதாரி கூறி, கதா தரரை ஒரு கலக்குக் கலக்கி விட்டார். சிதறிய உள்ளத்தோடு அம்பாளிடம் ஓடினர் கதாதரர்.



'' ஏனய்யா? உங்க கார் ரோடில் ஓட்டிக் கொண்டு போகவே லாயக் இல்லாமலிருக்கிறது என்றீர்களே!''

'' ஆமாம்! அதனால்தான் பிளாட் பாரத்தின்மேல் ஓட்டிக் கொண்டு போகிறேன்!''

'' அம்மா! என்னை நீ ஏமாற்று கிறாயா? என் அன்பை நீ ஏற்று அருள் புரியாமல், நானாக உன் தரிசனத்தைக் கற்பனை செய்து கொள்ள விட்டு விட் டாயா? என் இதயம் கொள்ளாத அன்பை நீ நொறுக்கினல் நான் உன் னைச் சும்மா விடமாட்டேனடி!'' என்று அலறித் தீர்த்து விட்டார்.

அவரது முன்பு மூடு பனி போல ஒளித் திரை ஒன்று எழும்பியது. அதி லிருந்து ஸ்வர்ண காந்தி பொலியும் முனிவர் ஒருவரின் திவ்விய உருவம் எழுந்தது. திருமார்பைத் தடவித் தரும் தமது நீண்ட தாடி அசைய, அம்முனி வர் தமது உதடுகளைத் திறந்து, ''குழந் தாய், நீ பாவமுகத்தில் இரு'' என்று மும்முறை கூறினர்.

இன்பம்-துன்பம், பெருமை-சிறுமை, பொய்-மெய் என்ற எண்ணங்கள் எல்லா வற்றையும் உதறித் தள்ளி விட்டு, அந்த எண்ணங்களும் அவற்றைப் போல இன் னும் கோடானு கோடி எண்ணங்களும் எங்கு பிறந்தனவோ அந்த ஆதாரத் தைத் தேடி அதனில் உள்ளத்தை நிறுத் துவதுதான் பாவமுகம் என்பது.

முனிவர் கூறிய தட்சணமே கதா தரர் பாவமுகத்தில் ஆழ்ந்தார். எல்லை யற்ற சாந்தி பெற்றார்.

இன்னொரு முறையும் ஹலதாரியின் வார்த்தைகளில் கதாதரர் மனக் கசத் தளித்தார். அப்போது அம்பிகையே வேறொரு பெண் வடிவில் வந்து, 'பாவ முகத்தில் இரு' என்று ஆக்ஞாபித்தாள்.

எல்லா எண்ணமுமே பொய்யாகும் அந்த நிலையிலிருந்து கதாதரர் மீண்ட பின், 'வெறும் எண்ணமே' என்று ஹல தாரி கூறிய தமது தெய்வ தரிசனம் இக உலக நடப்புக்களைவிட எவ்வளவோ உண்மையானது என்பதை உறுதியாக உணர்ந்தார். (தொடரும்)




# நேபாளம்

தேவ தேவனுக்கு எத்தனையோ புத்திரிகள். அதில் அழகுக்கு இலக்கணமாக வாழ்ந்தவள் குமாரி. ஒரு சமயம் ஹிமயத்தின் சரிவுகளில் வாழ்ந்த மக்கள் நெறி பிறழ்ந்து ஆசாபாசங்களில் மூழ்கி, உண்மைக்கும் பொய்க்கும் பேதமறியாது உழன்றனர். தேவ தேவன் இந்த மக்களின் மதியீனத்தைக் கண்டு மனமிரங்கி நல் வழி காட்டத் தம் தூதுவர்களை அனுப்பினான். தூதர்களில் ஒருத்தியாகக் குமாரியும் வந்தாள். தேவ தேவனின் புத்திரியாக இருந்ததால் மானிடரில் உயர்ந்தவனான மன்னனுக்கு நல்லுபதேசம் செய்ய அவளை அனுப்பினார்கள்.

மன்னன் அருகே அமர்ந்த குமாரி, அவனுக்கு உண்மை என்றால் என்ன, பொய் என்றால் என்ன என்று உபதேசம் செய்துகொண்டிருந்தாள். ஆனால் மன்னன் மனம் அவள் உரைகளில் ஈடுபடவில்லை. அந்த அழகுக் குமரியின் கட்டுடல் அவனை ஆட்கொண்டது. உன்மத்தனான மன்னன் அவள் கரங்களைத் தொட எழுந்தான்.



இடப்பக்கத்தில் நீங்கள் காணும் நேபாளிகள் பொதி சுமப்பதில் வலப்பக்கத்திலுள்ள யாக் காளைகளுக்குச் சளைத்தவர்களல்ல. எண்பது பவுண்டு எடைவரையில் அனாயாசமாய்த் தூக்கிப் போவார்கள்! நேபாளத்தின் பூர்வ குடிகளான நேவார்கள் கட்டிடக் கலையிலும் சிற்பக் கலையிலும் பேரார்வம் கொண்டவர்கள். தனித் தனியாகத் தென் படுகிற மூன்று கூரைகளைக் கொண்ட மூன்று மாடிக் கட்டிடங்கள் நேவார் பாணியில் அமைந்துள்ளன. மேலே: துர்க்கபூஜை திருவிழாவின்போது சக்கர ராட்டினத்தில் அமர்ந்து சுற்றக் குழந்தைகளுக்குச் சந்தர்ப்பமே கிடைக்காது. பெரியவர்கள் இடம் தந்தால்தானே? நேபாளத்தில் பாலங்கள் மீதாகச் செல்வதென்பது சர்க்கஸில் உயரே கம்பிகள் மீது நடப்பது போன்ற கதைதான். கீழே: பௌத்த மதத்தைச் சேர்ந்தோர் பிரார்த்தனைச் சக்கரங்களைச் சுழற்றுகிறார்கள்.



தேவ தேவனின் குமாரிக்கு மன்னனின் உள்ளக்கிடக்கை தெரிந்து விடவே, ''மூடனே! என்ன காரியம் செய்யத் துணிந்தாய்?'' எனக் கேட்டுமறைந்துவிட்டாள். வெட்கத்தால் தலை குனிந்த மன்னன் பின்னர் தலைநிமிரவேயில்லை. குமரியின் கோபத்தைத் தணிக்கவும், மன்னிப்புப் பெறவும் மன்னனும் மக்களும் குமரியைத் தெய்வமாகக் கொண்டாடுகிறார்கள். இந்த நிகழ்ச்சி நடந்து மூவாயிரம் ஆண்டுகள் ஆகி விட்டன. எனினும் குமரி தெய்வ வழிபாடு இன்னும் நடக்கிறது நேபாளத்தில்!

ஐந்நூறு மைல் நீளமும் நூறு மைல் அகலமும் உள்ள நேபாளம் தமிழ் நாட்டைவிடச் சிறிது பெரிய நாடு. ஆயிரத்து ஐந்நூறு மைல் நீளமுள்ள இமய மலைத் தொடரின் மூன்றில் ஒரு பகுதி நேபாளத்தின் வடக்கே அரணாக அமைந்திருக்கிறது. தெற்கே மகாபாரத் சைவாலிக் ஆகிய மலைத் தொடர்களும் உள்ளன. இப்படி ஒரே மலைப்பாங்கான பிரதேசத்தில் மக்கள் தொகை குறைவாக இருப்பதில் அதிசயமென்ன? நேபாளத்தின் ஜனத்தொகை 84 லட்சம்தான்.

இவர்கள் சற்றுத் தாழ்வான மலைச் சரிவுகளில் அகலமான படிக்கட்டுகளைப் போல் வயல்வெளிகளை அமைத்து நெல் பயிரிடுகிறார்கள். அடிக்கடி இவர்களுக்குத் தொல்லை கொடுக்கிற மலேரியாவைத் தவிர, பக்கத்திலுள்ள அடர்ந்த வனங்களிலிருந்து திடீர் திடீரென்று சிறுத்தைகளும் காண்டாமிருகங்களும் கூட வெளிப்பட்டு இவர்களை ஹிம்சிக்கும். இவர்களும் போராடத் தயங்க மாட்டார்கள். ஆனால் கார்க்கோடகனைக் கண்டால் மட்டும் கையெடுத்துக் கும்பிட்டு விட்டுப் பேசாமல் அப்பால் போய் விடுவார்கள். அதுவும் இவர்களை அநாவசியமாய்த் துன்புறுத்தாமல் நெளிந்து சென்று விடும். பார்வைக்கு அது மறைந்ததும் அந்த நேபாளிகளின் தலை அவர்களையும் அறியாமல் தொலைவில் நெடிதுயர்ந்து நிற்கின்ற கௌரி சங்கர் மலையை நோக்கி உயரும். இறைவனுக்கும் தேவிக்கும் வாசஸ்தலமாக நேபாளியர் தேர்ந்தெடுத்த கௌரி சங்கர் ஆகிய இரு சிகரங்களை உடைய அம்மலையின் உச்சியை இன்றுவரை யாராலும் சென்றடைய முடிய வில்லை.

இந்தத் தேசத்தைப் பலர் கபளீகரம் செய்யாமல் தடுத்தது எவரெஸ்ட், தவளகிரி, அன்னபூர்ணா போன்ற சிகரங்களை உடைய மலைத் தொடர்கள்தான்; முன்னேற்றத்தைத் தடுத்ததும் இம்மலைகள்தான்; ஆனால் விமானப் பயணம் சர்வ சாதாரணமாகி விட்ட இந்நாளில் நேபாளம் வெளி உலகுடன் கொள்ளும் தொடர்பு அதிகமாகி வருகிறது.

காட்மாண்டுவுக்கருகிலுள்ள விமான நிலையத்தில் விமானம் வந்து இறங்கும். வேடிக்கை பார்க்கும் மலைவாசிகள் பலர் குழுமியிருப்பார்கள். அந்த விமானத்தில் வந்து இறங்குகிற புதிய ஜீப்பைப் பார்ப்பார்கள். அப்போது ஒருவன் தன் மனைவியிடம் கூறிக் கொண்டிருப்பது நம் காதில் விழும். ''பார்த்தாயா! இன்னும் கொஞ்ச நாட்களானால் அந்தக் குட்டிக்கும் இறக்கை முளைத்து ஆகாயத்தில் பறந்து சென்றுவிடும்!''

இப்படி நேபாளிகள் கூறுவதில் ஆச்சரியம் ஏதுமில்லை. ஏனென்றால், அவர்கள் மாட்டு வண்டியைப் பார்க்கு முன்னர் விமானத்தைக் காண்பவர்கள்! சாலைகளே இல்லாதபோது வாகனங்களை வைத்துக் கொண்டு அவர்கள் என்ன செய்ய? காட்மாண்டுவையும் பாட்னாவையும் எல்லைப்புறத்தில் உள்ள பீர்கஞ்ஜ் வழியாக இணைக்கும் சாலைகூடச் சமீப காலத்தில் போடப்பட்டதுதான். இதற்கு முன் அனைவருமே மலைச் சரிவுகளில் ஆபத்தான ஒற்றையடிப் பாதைகளில் நடந்தேதான் செல்வார்கள்.

மொத்தம் ஐம்பத்தெட்டு மைல் நீளத்துக்கு இரண்டு ரயில் பாதைகளும் நேபாளத்தில் உள்ளன. மலைப்பாங்கான இந்தப் பூமியில் ரயிலின் வேகம் மணிக்கு ஆறு மைல். ரொம்பவும் அவசரமென்றால் மணிக்கு எட்டு மைல்! ஆனால் பிரயாணிகளில் யாரும் அவ்வளவு வேகமாகப் போக விரும்புவதில்லை!

நேபாளத்தின் பூர்வ குடிகளான நேவார்களின் புகழ் ஓங்கியிருந்த காலத்தில் பிரிதிவி நாராயணன் என்ற பெயர் கொண்ட ஒரு கொள்ளைக் கூட்டத் தலைவன் 1768ல் நேபாளத்தின் தலைநகரான காட்மாண்டுவில் நுழைந்தான். அவன் காலடி எடுத்து வைத்த தினம் ஒரு புனிதமான தினம். நேவார் மக்கள் அந்தத் தினத்தில் கத்தியைத் தொட மாட்டார்களாம். எனவே, பிரிதிவி சுலபமாகத் தலைநகரை ஆட்கொண்டான். இப்படியாக நேவார் வம்சம் ஆட்சி பீடத்திலிருந்து அடிமை நிலைக்கு வீழ்த்தப்பட்டது.

பிரிதிவி நாராயணன் ஆட்சி அறுபது ஆண்டுகளுக்குத் தலை நிமிர்ந்து இருந்தது. பிறகு வந்த மன்னர்கள் சுகபோக வாசிகளாக ஆனார்கள். எனவே, அங்கு மற்றவர்கள் ஆதிக்கம் மிகுந்தது. மன்னர் கொலுப் பொம்மையாக மாறினார். மந்திரிகளே மகோன்னதத் தலைவர்களாக ஆனார்கள். இவ்விதமாகச் செல்வாக்குப் பெற்றவர்கள்தான் ராணாக்கள் என்று அழைக்கப்படுபவர்கள்.

ராணாக்களின் ஆட்சியை வர்ணிக்கவே இயலாது. அவ்வளவு கொடூர ஆட்சி. சுமார் 110 ஆண்டுகள் வரை ராணாக்களின் தர்பார்தான் நடந்தது.

பதின்மூன்று வருஷங்களுக்கு முன் ராணாக்களின் பிடியிலிருந்து தம்மை விடுவித்துக் கொண்டு மன்னர் புதுடில்லிக்கு ஓடிவந்துவிட்டார். இந்தியாவில் நேபாள விடுதலை ராணுவம் என்று நேபாள அகதிகள் (ராணாக்களிடமிருந்து தப்பி இந்தியாவுக்கு ஓடிவந்தவர்கள்) ஒரு ராணுவத்தைத் திரட்டினார்கள். இந்த ராணுவம் நேபாளத்தை நோக்கி முன்னேறியது. ஆனால் ராணாக்கள் ஒரு பெரும் படை கொண்டுவந்து இதை முறியடித்தார்கள். சிறிது காலத்துக்குப் பிறகு ராணாக்களுக்குள்ளேயே உருவான உட்பகை காரணமாக மன்னர் மீண்டும் அரியாசனத்தில் ஏறுவது சாத்தியமாயிற்று. ராணாக்களின் செல்வாக்கு மறைந்தது.

நேபாளத்திலிருந்து என்ன ஏற்றுமதி ஆகிறது என்றால் 'ஆட்கள்' என்பார்கள். பிரிட்டிஷ் ராணுவத்துக்கும் இப்போது இந்திய ராணுவத்துக்கும் கூர்க்கர் பட்டாளம் உண்டு. கூர்க்கர் சண்டையில் உலகப் புகழ் பெற்றவர்கள். இவர்கள் எங்கே சென்றாலும்


நான் எப்பொழுதும் சிறந்ததையே
உபயோகிக்கிறேன்
நான் தேர்ந்தெடுப்பது எவரெஸ்ட்
எளிதாக, நம்பகமாக உழைக்கிறது.
நியாயமான விலை
பூராவும் உத்திரவாதமுள்ளது
எடுப்பான தோற்றமுள்ளது
விற்பனைக்குப் பிறகு உடனுக்குடன் பராமரிப்பு கிடைக்கிறது.
EVEREST
EVEREST
EVEREST
எவரெஸ்ட் தையல் மெஷின்
தயாரிப்பாளர்கள்: சார்தா மெஷினரி கார்ப்பொரேஷன்
தலைமை ஆபீஸ்: 11, பூஸா ரோடு, புதுடில்லி-5,
பாக்டரி: ஸதர்ன் டிரங்கு ரோடு, குரோம்பேட், மதராஸ்.

# வனப்புக்கு ஒரு மலர்ச்சி

# மபத்லால் க்ரூப்

## வாயில்ஸ், லேநோஸ்




நியு ஷராக் (ஷராக்), அஹமதாபாத் • நியு ஷராக், நடியாத் ஸ்டேன்டர்ட், பம்பாய் • ஸ்டேன்டர்ட் (நியு சைனு) பம்பாய் ஸ்டேன்டர்ட், தேவாஸ் • ஸாஸூன், பம்பாய் • ஸாஸூன் (நியு யூனியன்) பம்பாய் • ஸூரத் காட்டன், ஸூரத் • மபத்லால் பைன், நவ்ஸாரி.

*Aiyars MGV. 3.*

ளுக்குப் பணம் அனுப்புவார்கள். இந்தப் பணத்தில் ஒரு பகுதி அரசாங்கத்துக்கு வரியாகப் போகும். இந்த வரிதான் நேபாள அரசாங்கத்தின் மொத்த வருமானத்தில் பெரும் பகுதி.

உலகத்திலேயே நேபாளம் ஒன்றில்தான் ஹிந்து ராஜ்யம் நடைபெறுகிறது. மாடுகள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு நடமாடுகிற தெய்வம். இதர மிருக ராசிகளும் அப்படியே. ஆண்டுக்கு ஒரு முறை மாட்டுக்கும் காக்காய்களுக்கும் நாய்களுக்கும் பூஜை போடுவார்கள். அடுத்தபடி சகோதர சகோதரிகளுக்கும் பூஜை. அதன் பிறகு பெற்றோர். இறுதியாகவே கடவுளுக்கு.

ஹிந்து மதத்துடன் பௌத்தமும் நேபாளத்தில் தழைக்கிறது. பிரசித்தி பெற்ற பௌத்த ஆலயமான ஸ்வயம்புநாத் தலைநகர் காட்மாண்டுவுக்கு அருகில் ஒரு குன்றின் மீது உள்ளது.

இன்றைய அரசர் மகேந்திராவும் அரசி ரத்னாவும் அரண்மனையை விட்டு அசையக் கூடா தென்கிற பண்டைக் காலச் சம்பிரதாயங்களுக்கு முழுக்குப் போட்டு விட்டுத் தங்கள் நாட்டை மட்டுமின்றிப் பாரதத்தையும் பல அயல் நாடுகளையும்கூடச் சுற்றிப் பார்த்து விட்டுத் திரும்பியிருக்கிறார்கள்.

1959-ல் நடைபெற்ற முதல் பொதுத் தேர்தலுக்குப் பிறகு 1960 டிசம்பரில் தகாத செயல்கள் ஏதோ நடப்பதாக மன்னருக்குச் சந்தேகம் எழவே அன்றைய முதன் மந்திரி கொய்ராலாவையும் மற்றவர்களையும் சிறையில் அடைத்துவிட்டுத் தாமே தேசத்தின் தலைமையை முழுமையாக ஏற்றுக் கொண்டார். இன்றைக்கும் உண்மையான அதிகாரங்கள் அனைத்தும் அரசரிடமேதான் உள்ளன என்றாலும் ஜனநாயகப் பண்புகள் வளரவும் இடமளித்திருக்கிறார். பஞ்சாயத்துகளும் அவற்றுக்குத் தலையாய சட்டசபையாக இயங்கக் கூடிய தேசிய பஞ்சாயத்தும் உருவாக அனுமதித்துள்ளார். 14 பேர்கள் அடங்கிய மந்திரி சபையின் தலைவர் டாக்டர் துளசிகிரி. முப்பத்தைந்து வயதே நிரம்பியவர். இன்றைய அரசரை ரோம் நகரின் கொடுங்கோலனை நீரோவுடன் முன்பொரு தடவை ஒப்பிட்டுப் பேசிய துளசிகிரி இன்று அதே மன்னரது மந்திரிசபையின் தலைவராக இருப்பது அதிசயமே என்றாலும் கொய்ராலா மந்திரி சபையிலும் பணியாற்றிக் கருத்து வேற்றுமை காரணமாக ராஜினாமா செய்தவர் இவர் என்பதும் கவனிக்கத்தக்கது.

நேபாள சரித்திரம் ஒரே போராட்டமயமாக உள்ளபோதிலும் உள்நாட்டுச் சண்டை பூசல்களுக்கெல்லாம் முடிவு ஏற்பட்டு இன்று நிலையான அரசாங்கம் ஸ்தாபிதமாகியிருப்பதாகத் தோன்றுகிறது. தேசத்தின் முன்னேற்றத்துக்கான பல ஆக்க வேலைகளும் நடைபெற்று வருகின்றன. கோஸி நதியின் கரைகளைப் பலப்படுத்துவதிலும் வேறு பல துறைகளிலும் பாரத அரசாங்கம் நேபாளத்துடன் ஒத்துழைத்து வருகிறது.

இவ்வளவெல்லாம் இருந்தும் பாரத - நேபாள உறவு அவ்வளவு திருப்தியளிப்பதாய் இல்லை. ஏனெனில் குருவுக்கு மிஞ்சிய சிஷ்யனாக, வல்லரசுகளிடையே உள்ள பனிப்போரைப் பயன்படுத்தி நாம் இருதரப்பினரிடமிருந்தும் ஐந்தாண்டுத் திட்டங்களுக்காகப் பல விதங்களில் உதவி பெற்றது போல் இன்று நேபாளமும் நடுநிலைக் கொள்கையைக் கையாண்டு, இந்தியா—சீனா ஆகிய இரு நாட்டவரிடமிருந்தும் உதவிகளைக் கோரிப் பெற்று வருகிறது. இது நாம் கற்றுக் கொடுத்த பாடமன்றி வேறென்ன?

சீனர்களின் ஒத்துழைப்புடன் காட்மாண்டுவில் பல தொழிற்சாலைகள் உருவாகி வருகின்றன. இவ் வருஷத்தின் ஆரம்பத்தில் சீன - நேபாள எல்லைக்கோடு ஒப்பந்தம் கையெழுத்தான பிறகு, சென்ற மாதத்தில் நேபாளத்தின் பல பகுதிகளைச் சீன சிப்பாய்கள் ஆக்கிரமித்துக் கொண்டது குறித்து அந்தப் பிரதேசங்களில் வாழ்ந்த நேபாளிகள் ரொம்பவும் துயருற்றார்கள். தங்கள் எதிர்ப்பையும் வருத்தத்தையும் தெரிவித்து மன்னர் மகேந்திராவுக்கு ஒரு மகஜரையும் அனுப்பி வைத்தார்கள்.

நேபாள சர்க்கார் சீனர்களிடம் மிகவும் ஜாக்கிரதையாகவே இருப்பார்கள் என்பதும் சீனரின் உதவியுடன் இபெத்திய தலைநகரமான லாஸாவையும் காட்மாண்டுவையும் இணைக்கிற வகையில் துரிதமாக அமைந்து வரும் பாதையில் செஞ்சீனத் துருப்பினரும் டாங்கிகளும் அணிவகுத்து வர அனுமதித்து விடமாட்டார்களென்பதும் உறுதி.

புதிய ஜேய்–பூவின் மென்மையும்,
புதுமலர்ச்சியும்,
மல்லிகையின் நறுமணமும் அளிக்கிறது.



TJY-55-TAM




டாடா தயாரிப்பு

✳ புதிய

மிதமிஞ்சிய மல்லிகை மணம்!

✳ புதிய

இளஞ் சிவப்பு நிறம்!

✳ புதிய

பளபளக்கும் 'ராப்பர்'!

# புதிய ஜேய்

அழகுசாதன சோப்.



# மூன்றாவது ராஜகுமாரன்

வெகு காலத்துக்கு முன்னல் ஓர் அரசர் வாழ்ந்து வந்தார். அவருக்கு மூன்று பிள்ளைகள். ஒரு சமயம் மூத்த ராஜகுமாரர்கள் இருவரும் பல ஊர்களைச் சுற்றிப் பார்த்து வீரச் செயல்கள் புரிந்து வருகிறோம் என்று தகப்பனரிடம் சொல்லி விட்டுக் கிளம்பினர்கள். ஆனல் வெகு நாளாகியும் திரும்பி வரவில்லை. கடைசி ராஜகுமாரன் மிகவும் அடக்கமானவன். அவனை எல்லாரும் அப்பாவி என்று கூடக் கூப்பிடுவார்கள். தன் அண்ணன்மார் களைத் தேடிக் கண்டு பிடித்து வரக் கிளம்பினன். கொஞ்ச நாளில் அவர்களைக் கண்டு பிடித்தான். நெறி கெட்டு முறை தவறி வாழ்ந்து வந்த அவர்களுக்கு நல்ல புத்தி சொல்லிக் கிளப்புவதற்குள் மூன்ருவது ராஜகுமாரனுக்குப் போதும் போதுமென்றுவி விட்டது.

அண்ணன்மார்கள் இரண்டு பேரும் தம்பியை ஏளன மாகப் பேசி நிந்தித்தார்கள். அவனுக்கு உலகத்தில் வாழவே தெரியாது என்று நையாண்டி செய்தார்கள். ஆனல் தம்பி அவர்களுக்கு எவ்விதப் பதிலும் கூற வில்லை. மூவரும் கிளம்பி வரும் போது வழியில் ஒரு பெரிய எறும்புப் புற்று இருந்தது. கோடிக் கணக் கான எறும்புகள் இங்குமங்கும் பரபரப்புடன் ஓடிக் கொண்டிருந்தன. வெள்ளை முட்டைகளை வாயில் கவ்வியபடி சாரி சாரியாக ஒரு பக்கத்தில் எறும்புகள் புற்றுக்குள் போவதும் வருவதுமாக இருந்தன. சிறிய குன்று போல் இருந்த அந்த எறும்பு நகரத்தை அழிக்க விரும்பினர்கள் அண்ணன்மார் இருவரும். அதைக் கண்ட தம்பி, ''அந்த அப்பாவி ஜீவன்களை ஒன்றும் செய்யாதே. அவைகளின் புற்றைத் தகர்ப்பதற்கு நான் அனுமதிக்க மாட்டேன்'' என்ருன்.

தம்பியின் பிடிவாதத்துக்காக அவர்கள் எறும்புப் புற்றை ஒன்றும் செய்யாமல் மேலே நடக்கலானர்கள்.

கொஞ்ச தூரம் போனதும் ஒரு ஏரியில் ஏராள மான அழகிய வாத்துக்கள் நீந்திக் கொண்டிருந் தன. முரட்டுக் குணம் படைத்த மூத்த ராஜ குமாரர்கள் இருவரும் அந்த வாத்துக்களில் சிலவற்றைப் பிடித்துக் கொன்று வாட்டி அதன் இறைச்சியைச் சாப்பிட விரும்பினர்கள். ஆனல் மூன்ருவது இளவரசன் அவர்கள் எண்ணத்துக்கு எதி ராக இருந்தான். அவைகளைக் கொல்லக் கூடாது என்ருன். தம்பியை மனதாரத் திட்டிக் கொண்டே மேலே நடக்கலானர்கள் இருவரும்.

ஒரு மரத்தின் கிளையில் ஒரு பெரிய தேன்கூடு தொங் கிக் கொண்டிருந்தது. தேனடையில் ஏராளமான தேன் சேர்ந்து போய்க் கீழே ஒழுகிக் கொண்டிருந்தது. கெட்ட குணம் படைத்த அவ்விருவரும் மரத்தின் கீழே நெருப்பை மூட்டிப் புகைத்துத் தேனீக்களை விரட்டி விட்டு அந்தத் தேனை அடைந்து விடத் திட்ட மிட்டனர். இந்தத் தடவையும் தம்பி, அவர்கள் அப்படிச் செய்யக் கூடாது என்று மன்ருடிக் கேட்டுக் கொண்டு தடுத்து விட்டான்.

அப்பாவித் தம்பியை வாயாரச் சபித்துக் கொண்டே நடக்கலானர்கள் அவ்விருவரும்.

மூவரும் ஒரு கோட்டையை வந்தடைந்தார்கள். அங்கு எல்லாம் விசித்திரமாக இருந்தன. லாயங்களில் இருந்த குதிரைகளெல்லாம் கற்சிலைகளாக இருந்தன. அந்தக் கோட்டையில் ஓர் உயிருள்ள ஜீவனைக்கூடக் காண வில்லை. மூவரும் அந்தக் கோட்டை முழுதும் சுற்றிப் பார்த்தார்கள். ஓர் அறையை மட்டும் மூன்று பூட்டுக்களைப் போட்டுப் பூட்டி இருந்தது. அதன் தாழ்ப் பாள் துவாரத்தின் மூலம் உள்ளே பார்த்தார்கள். அறையின் நடுவே மேஜையின் முன்னல் சோகை பிடித்த ஒரு சின்ன மனிதன் உட்கார்ந்திருந்தான். அவனை உரக்கச் சத்தமிட்டு அழைத்தார்கள். அவன் எழுந்து கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்தான். ஆனல் எதுவும் பேசவில்லை. மூவரையும் ஒரு கூடத்துக்கு அழைத்துப் போனன். அங்கு அவர்களை உட்கார வைத்து அறுசுவை உணவுகளைப் பரிமாறினன்.

மறு நாள் காலை அந்தச் சோகை பிடித்த மனிதன் மூத்த ராஜகுமாரனை ஓர் இடத்துக்கு அழைத்துக் கொண்டு போனன். அங்கு ஒரு பாறையில் மூன்று நிபந்தனைகள் எழுதி இருந்தன. அவைகளை நிறைவேற்றி ஞல் கோட்டையின் மீதுள்ள சாபம் நீங்கி எல்லாம் நேராகும் என்று குறித்திருந்தது. முதல் நிபந்தனை: கோட்டையை அடுத்த காட்டின் புல்வெளியில் இளவரசியின் முத்து மாலையின் முத்துக்கள் இறைந்து கிடக்கின்றன. மொத் தம் ஆயிரம் முத்துக்கள். ஆதவன் கிளம்பும் அதிகாலையிலிருந்து அவன் மலைவாயில் விழும்





மாலே வரை அந்த ஆயிரம் முத்துக்களையும் கண்டு பிடித்துப் பொறுக்க வேண்டும். ஒரு முத்து குறைவாக இருந்தாலும் இந்த முயற்சியில் ஈடுபட்டவர்கள் கற்சிலையாகி விடுவார்கள். முதல் இரண்டு ராஜகுமாரர்களும் தோல்வி கண்டு கற்சிலையானார்கள்.

மூன்றும் நாள் மூன்றுவது ராஜகுமாரனின் முறை. தனிப்போடு முத்துக்களைச் சேகரிக்க ஆரம்பித்த அவனுக்குத் தான் வெற்றி பெறுவோம் என்ற நம்பிக்கை ஏற்பட வில்லை. நண்பகலில் ஒரு கல்லின் மீது உட்கார்ந்து கண்ணீர் வடிக்கலானான். அப்போது எறும்புகளின் அரசன் அவன் முன் தோன்றினான். அவன் பின்னால் எறும்புக் கூட்டங்கள் சாரிசாரியாகக் கிளம்பின. கொஞ்ச நேரத்தில் ஆயிரம் முத்துக்களையும் கொண்டு வந்து அவன் முன் குவித்து விட்டன.

அடுத்த நிபந்தனை அரச குமாரிகளின் அந்தப்புரத்து அறைச் சாவி அங்குள்ள ஓர் ஏரியில் கிடந்தது. அதைத் தேடி எடுத்தாக வேண்டும். இளவரசன் ஏரிக்கரைக்கு வந்ததும் முன்பு அவனது கருணையால் காப்பாற்றப் பட்ட வாத்துக்கள் அங்கு தோன்றின. சாவியை எடுத்துக் கொடுத்தன.

மூன்றுவது நிபந்தனை கொஞ்சம் கடினமானது. அந்த அரண்மனையின் இளவரசிகள் மூன்று பேர். மூன்று பேரும் தூங்கிக் கொண்டிருந்தார்கள். பார்ப்பதற்கு மூவரும் ஒரே உருவ அமைப்புடன் காணப்பட்டார்கள். அதில் மன்னரின் அன்புக்குப் பாத்திரமான கடைசி இளவரசி யார் என்ப தைக் கண்டுபிடித்துச் சொல்ல வேண்டும். மூவரின் சாயலும் ஒரே மாதிரி இருந்தாலும் இந்த மாயத் தூக்கத்தில் ஆழ்வதற்கு முன்பு மூத்தவள் கல்கண்டுக் கட்டியைச் சாப்பிட்டுக் கொண்டிருந்தாள், இரண்டாமவள் பாயசமும், மூன்றுமவள் தேனையும் பருகிக் கொண்டிருந்தனர்.

நெருப்பில் பொசுங்குவதிலிருந்து தன்னைக் காப்பாற்றிய இளவரச னுக்கு உதவ ராணித் தேனீ ஓடோடி வந்தது. தூங்கும் மூன்று ராஜகுமாரி களின் இதழ்களிலும் போய் உட்கார்ந்து ருசி பார்த்தது. தேனருந்திய இளவரசியின் உதட்டை விட்டு அது எழுந்திருக்காமல் உட்கார்ந்திருந்தது. அதிலிருந்து மூன்றுவது இளவரசியை அவன் கண்டு கொண்டான்.

மூன்று நிபந்தனைகளிலும் வெற்றி கண்டதும் அந்தப் பாழ்பட்டுக் கிடந்த அரண்மனையும் ராஜ்யமும் தூக்கத்திலிருந்து விழித்துக் கொண் டது போல் புதிய சோபை பெற்றுப் பொலிவுடன் விளங்கின. கல்லாகிக் கிடந்த எல்லாம் அதனதன் உருவத்தையும் உயிரையும் பெற்றன. அப்பாவி என்று அலட்சியமாக மதிக்கப்பட்ட மூன்றுவது இளவரசன் அழகிற் சிறந்த மூன்றுவது ராஜகுமாரியை மணந்து கொண்டு அந்த நாட்டுக்கே மன்னனானான்.

('கிரிம்' சகோதரர்கள் சேக ரித்த தேவதைக் கதைகளின் தொகுப்பிலிருந்து எடுக்கப் பட்டது இந்தக் கதை.)



## முயன்று பாருங்கள் !

மேலே ஒரு படமிருக்கிறதே அது ஒரு பாதாளச் சிறையின் தரைப் படம். அங்கு ஒன்பது அறைகள் இருக்கின்றன. ஓர் சமயம் அதில் எட்டுக் கைதிகள் இருந்தார்கள். ஒரு அறை காலி. ஒரு நாள் சிறைச்சாலை வார்டன் கைதிகளை அதட்டி மிரட்டி உள்ளே அடைத் துப் பூட்டினார். அவர் பூட்டிய முறையில் கைதிகள் இருந்ததையே மேலேயுள்ள படம் காட்டுகிறது. ஆனால் முதல் அறையில் முதல் எண்ணுள்ள கைதியும் அதேபோல் வரிசைக் கிரமமாகவும் அவர்களை மாற்றி அடைக்க வேண் டும். ஒரு சமயத்தில் ஒரு கைதியைத்தான் வெளியே கொண்டுவரலாம். அந்தந்த அறையி லிருந்து வெளியே செல்லும் பாதை வழியாகத் தான் அவர்களைக் கொண்டு செல்ல வேண்டும். ஒரே சமயத்தில் ஓர் அறையில் இரண்டு கைதிகள் இருக்க முடியாது — கூடாது. இதற்கு உதவி யாகக் காலியாக இருக்கும் அந்த ஓர் அறை யைப் பயன்படுத்திக்கொள்ளலாம். எந்த முறை யில் அவர்களை வரிசைக் கிரமமாக மாற்றி அமைப்பதன் மூலம் அவரவர்களுக்கு உரிய அறை யில் மிகக் குறைந்த தடவைகள் அவர்களை நகர்த்தி அடைக்கலாம்?

விடை: இருபத்தி ஆறு தடவை கைதிகளை நகர்த்துவதன் மூலம் இதைச் செய்து முடிக்க லாம். முதல் எண்ணுள்ள கைதியைக் காலியான 9வது அறைக்கும் காலியாகும் அந்த 6வது அறை யில் 2ம் எண்ணுள்ள கைதி — இப்படியே வரிசை யாக முறைப்படி 3, 1, 2, 6, 5, 3, 1, 2, 6, 5, 3, 1, 2, 4, 8, 7, 1, 2, 4, 8, 7, 4, 5, 6.

# மாயா மச்சீந்திரா



"அலக் நிரஞ்ஜன்!" படத்தின்பெயரை விடப் படத்தில் திரு எம்.கே.ராதா கம்பீரமான தனிக் குரலில் கூவும் இந்தச் சிறு வாக்கியத்துக்கு முக்கியத்துவம் அதிகமாகிவிட்டது. 1939-ம் ஆண்டு இந்தப் படம் ஓடின மாதிரி மாயாஜாலங்களும், மந்திர தந்திரங்களும் நிறைந்த வேறு எந்தப்படமும் ஓடவில்லை என்றுசொல்லலாம். மந்திர தந்திரங்களைப் போலவே பாடல்களும் இந்தப் படத்தில் ஏராளம். "கோரக் நாத்" என்னும் வடநாட்டுக் கதையை ஆதாரமாகக் கொண்டது "மாயா மச்சீந்திரா".

மச்சீந்திரர் என்னும்குருநாதருக்குக் கோரக் நாத் சிஷ்யனாக வந்து உலக வாழ்வின் உண்மைகளைத் தெரிந்து கொள்ள விரும்புகிறான். மச்சீந்திரர் உலக வாழ்க்கையில் பிரவேசித்து வாழ்ந்து காட்டுகிறார். காமரூப தேச ராணியான ஊர்மிளா ஆண்வாடையே கூடாது என்றிருக்கிறாள்; அவளை மச்சீந்திரர் மந்திர ஜாலங்களால் வெல்கிறார். மச்சீந்திரரின் அழகுக்கு அடிமையாகிறாள் ராணி ஊர்மிளா. மச்சீந்திரரின் முக்கியமான மந்திரம் தான் "அலக் நிரஞ்ஜன்". அதை உச்சரித்துத்தான் அவர் சர்வகாரிய சித்தியடைகிறார்.

இந்தப் படத்தின் கதாநாயகனுகிய எம். கே. ராதாவைக் கண்டு பேசலாம் என்று அவர் வீட்டுக்குச் சென்றேன். அவர் நடிப்பில் மாத்திரம் உயர்ந்தவரல்ல; பண்பிலும் உயர்ந்தவர் என்று தெரிய வந்தது. அவர் சிறு வயது முதல் எத்தனையோ நாடகங்களில் நடித்து மேடைப் புகழ் பெற்றவர்; ஐம்பதுக்கு மேற்பட்ட படங்களில் கதாநாயகனுகவே நடித்துப் பெரும் புகழ் பெற்று விளங்குபவர். அவர் நடித்த முதல் தமிழ்ப் படம் "சதி லீலாவதி". இது அந்நாளில் ஒரு கலக்குக் கலக்கிவிட்டது. 'மாயா மச்சீந்திரா'வைத் தவிர ராதாவுக்குப் பெரும் புகழ் அளித்த வேறு சில படங்கள்: "அநாதைப் பெண்", "சந்திர மோகனு அல்லது சமூகத் தொண்டு", "சந்திரலேகா", "அபூர்வ சகோதரர்கள்". வசீகரமான வடிவமும், வாய்ப்பான தோற்றமும்உள்ள அவர் நடிக்கும் படத்துக்கு என்றுமே ஒரு தனிமதிப்பு உண்டு.

எம். கே. ராதா நீண்ட நாட்களாகப் பழகிய நண்பரைப் போல் மனம் விட்டுப் பழகினுர். என்னிடம் 'மாயா மச்சீந்திரா'வின்வசனத்தை எழுதிய மதிப்புக்குரிய தமது தந்தையார் மயிலை கந்தசாமி முதலியார் அவர்களைப் பற்றி மிகவும் பக்தியோடு குறிப்பிட்டு, "நாடகக் கலைக்காகவே வாழ்ந்த என் தகப்பனுர் நடிகர்கள் நல்லொழுக்கத்தோடு வாழ வேண்டும் என்பதிலும் அதிக ஆர்வம் காட்டினுர். மக்களின் வாழ்க்கையோடு நாடகங்கள் ஒட்டி நிற்க வேண்டும் என்று அரும்பாடுபட்டார். அந்த நாட்களில் நாடகங்கள் என்ருல் இரவு ஒன்பதரை மணிக்கு ஆரம்பமாகி ஒரு மணிக்குத்தான் முடிவடையும். மாலை 5-30 மணிக்கு மாணவர்களுக்காக 'மாட்டினி' காட்சி நடத்திய பெருமை என் தந்தையாரையே சாரும். 5-30 மணிக் காட்சிக்கு நிறைய விளம்பரத் தாள்கள் அச்சடித்துக் கல்லூரிகளுக்கெல்லாம் விநியோகம் செய்து மாணவர்களையெல்லாம் நாடகம் பார்க்கச் செய்தார். எல்லாம் பக்தி நாடகங்கள்; நீதியைப் புகட்டி, நல்லொழுக்கத்தை வளர்க்கும் நல்ல சமூக நாடகங்கள். என் தந்தையாரிடமே மாணவனுகப் பழக நேரிட்ட காரணத்திருல்தான் நடிப்போடு நல்லொழுக்கமும், பண்பும் பயில முடிந்தது.



கந்தசாமி முதலியார்

என் தகப்பனுர் எத்தனையோ நடிகர்களை முன்னணிக்குக் கொண்டு வந்தார். மதிப்புக்குரிய பெரிய நடிகர்களான பி.யூ. சின்னப்பா, எம். ஆர். ராதா போன்றவர்களெல்லாம் அவரிடம் பயின்றவர்கள்தான். நாடகங்களுக்குத் தனி மதிப்பு உண்டாக்குவதற்காக மாணவர்களுக்குப் பல பரிசுத் திட்டங்களுக்கும் ஏற்பாடு செய்திருந்தார்!" என்று கூறி ராதா சற்றுப் பழைய நினைவுகளில் ஆழ்ந்திருந்தார்.

"அலக் நிரஞ்ஜ'னைப் பற்றிக் கொஞ்சம் சொல்லுங்கள்!"

''மச்சீந்திராவுக்கும் சிஷ்யன் கோரக் நாத் தாக நடித்தவர் மகாராஜபுரம் கிருஷ்ண மூர்த்தி. நிறையப் பாடி நடித்திருக்கிறார்.''

''நீங்கள் உங்கள் சொந்தக் குரலில்தானே பாடினீர்கள்?''

''ஆமாம், ஸார். பதினைந்து பாடல்களுக்கு மேல் நானே பாடியிருக்கிறேன், ஸார். படம் முழுவதும் 'டிரிக் ஷாட்ஸ்' நிறைந்திருந்த தால் ஒவ்வொரு காட்சியிலும் ரொம்பவும் சிரமப்பட்டேன். அந்நாளில் இப்பொழுது இருப்பதுபோல் இவ்வளவு வசதிகள் இல் லையே! கட்டுக்காவல்களையெல்லாம் தாண்டிக் காமரூப தேச ராணியின் அரண்மனையில் நுழைந்ததற்காக மச்சீந்திராவுக்கு அதிசயத் தண்டனை விதிக்கப்படுகிறது. பெரிய பாறையை நடுவில் துளையிட்டு அவன் கழுத் தில் மாட்டி விடுகிறார்கள். வேதனைப்படுகிற மச்சீந்திரர் பின்னர் மந்திர சக்தியினால் அந்தப் பாறையைத் தூள் தூளாகப் பொடி செய்து விடுகிறார். இதற்கு இலேசான அட்டையில் பாறைபோல் வடிவம் கொடுத்து வர்ணம் தீட்டியிருந்தால் போதுமல்லவா? தயாரிப் பாளர் இதற்கு ஒப்புக் கொள்ளவில்லை. சிரமத் தைச் சகித்தபடியே மச்சீந்திரர் நிஷ்டையில் ஆழ்ந்து பாறையைத் தகர்த்து வெற்றி பெறு கின்ற காட்சி தத்ரூபமாய் அமைய வேண்டு மென்பதற்காகக் கனமான தேக்கு மரங்களை வட்டமாக இணைத்து மேலே பாறை மாதிரி வர்ணம் தீட்டி என் கழுத் தில் மாட்டி விட்டார்கள். அந்தக் காட்சி முடிவதற்குள் அந்தச் சக்கரம் என் கழுத் தைத் தாண்டி நெஞ்சில் அழுந்தி இறுக்க ஆரம்பித்து விட்டது. போதாக் குறைக் குத் தக்க தருணத்தில் பாறையை வெடித்துத் தகர்ந்து போகச் செய்கிற விசையில் ஏதோ பழுது நேர்ந்து விட்டது. கதையில் வருகிற மச்சீந்திராவுக்கு மந்திர சக்தி இருக்கலாம்; ஆனால் பாவம், இந்த எம். கே. ராதாவினால் என்ன செய்ய முடியும்?

''நான் மூச்சுத் திணறி மயங்கி விட்டேன். கண் விழித்துப் பார்த்த போது ஒருவர் விசிறிக் கொண்டிருந் தார். ஒருவர் தண்ணீர் தெளித்தார், முகத்தில். வேறு ஒருவர் சோடா வாங்கி வந்தார். அந்தக் காட்சி யின் பிற்பகுதியை அதாவது பாறை தகர்ந்து விழுகிற கட்டத்தை மீண்டும் படம் எடுக்க வேண்டியதாயிற்று. எனினும் பட்ட சிரமம் வீண் போக வில்லை என்பதைப் பின்னால் படத்தைத் திரை யில் போட்டுப் பார்த்துத் தான் தெரிந்து கொண்டு திருப்தி அடைந்தேன்!'' என்றார் ராதா.





ஒரு புராணப் படம். சிவநேசச் செல்வர் ஒருவர் சிவனடியார்களை ஆதரிக்கும் பண் புடையவர். சிவபெருமான் ஒரு சிவனடியா ராக அவரிடம் வந்து தங்குகிறார்; தம்மை மேற்படி செல்வர் அவமதித்து விட்டதாகக் குற்றம் சாட்டுகிறார். செல்வர் அவர் காலில் விழுந்து கதறுகிறார். சிவனடியார் அவரை உதைத்துத்தள்ளுகிறார். செல்வராக நடிப்பவர் பெரிய நடிகர். சிவனடியாருக்கு உண்மையில் அவருடைய தயவினால்தான் அந்தப் படத்தில் நடிக்கச் சந்தர்ப்பம் கிடைத்தது. ஆகவே அவரை உதைக்கத் தயங்கினார். டைரக்டர் மகா கோபக்காரர். நயமாகச் சொல்லிப் பார்த்தார். சிவனடியாருக்குக் கை, கால்கள் நடுங்கின. கடைசியில் ''இனி ஒத்திகை கிடையாது. நீ அவனை உதைக்கப் போகிறாயா இல்லை, நான் உன்னை உதைக்கட்டுமா?'' என்று கர்ஜித்தார். அவ்வளவுதான்... 'பமர்' என்று உதை விழுந்தது. காட்சி பிரமாத மாகப் படமாகியது!

திரு எம். கே. ராதா அந்நாட்களில் டைரக் டர்களுக்கு இருந்த மதிப்பையும் செல்வாக்கை யும் விளக்கவே மேற்கூறிய சம்பவத்தைச் சொன்னார்.

ஆனால் இன்றைக்கோ கேச அலங்காரம் செய்பவர் முதல் பாதக் குறடுகள் தயாரிப்ப வர்வரை, வசனகர்த்தா, உபநடிகர்கள்-சகலத் தையும் நிர்ணயிப்பவர்கள் சர்வ வல்லமை பொருந்திய பெரிய நடிகர்களே என்றும் இவர்களைச் சமாளிக் கிற சங்கடத்தை விடத் தமிழ்ப்படமே எடுக்காமலிருந்து விடுவது மேல் என்று ஹிந்தி மார்க்கெட் டில் புகுந்து விட்ட பிரபல தயாரிப்பாள ரைப் பற்றியும் அல் லவா நாம் கேள்விப் படுகிறோம்! —விஜயம்



# இமயத்தை வென்றவர்கள்





குறுகிய நோக்கம் கொண்ட குதர்க்கவாதி ஒருவன், ''எவரெஸ்ட் சிகரத்தை எதற்காக ஐயா, எட்டிப் பிடிக்க வேண்டும்?'' என்று கேட்டான், ஜியார்ஜ் லே மலோரி என்ற மலையேறும் நிபுணரை நோக்கி. ''எவரெஸ்ட் சிகரம் என்று ஒன்று இருப்பதனால்தான்'' என்று பதில் அளித்தார் அவர்.

ஆனால் இன்று எவரெஸ்ட் சிகரத்தை வெற்றி கண்டு பத்தாண்டுகள் ஆகி விட்டன. ஆகவே, இன்றைக்கு அந்தக் குதர்க்கவாதி, ''எவரெஸ்டைத்தான் ஒரு முறை எட்டிப் பிடித்தாகி விட்டதே, மறுபடியும் மறுபடியும் எதற்காக அதன் மீது ஏற முயலுகிறீர்கள்?'' என்று கேட்பான். அதற்கு இன்றைய மலையேறும் நிபுணர்கள், ''எவரெஸ்ட் சிகரம் இன்னமும் அங்கே இருந்து கொண்டிருப்பதால்தான்!'' என்று ஜியார்ஜினுடைய மறுமொழியையே சற்று மாற்றிச் சுலபமாகக் கூறி விடுவார்கள்.

1912 முதலே, அந்தப் பனிக் கோயிலை — இமாலயத்தை — அடைந்து வழிபட க்ஷேத்திராடனம் கிளம்பியவர்கள் பலர். பன்முறை முயன்று பார்த்தும் தோல்வியிலேயே முடிந்த காரியம் அது.

ஷெர்பா டென்ஸிங்கும் எட்மண்ட் ஹிலரியும் 1953ம் வருஷத்தில் முதன் முதலாக 29,028 அடி உயரமுள்ள உலகத்தின் கூரை மீது ஏறி நின்றார்கள்.

மனிதனுடைய நுண்ணறிவுக்கும், ஆற்றலுக்கும் சவால் விட்டதுடன் அவனுடைய

---

1. 1938ல் எவரெஸ்டை எட்டிப் பிடிக்க முயன்ற ஒரு கோஷ்டி. 2. பூமியில் கால் பாவியபடியே மனிதனால் எந்தளவு உயரம் செல்ல முடியுமோ அந்தளவு உயரம் சென்று திரும்பிய முதல் அமெரிக்கர் ஜிம் விட்டேக்கர். புறப்படும்போதே 'வெற்றிபெற்றே திரும்புவேன்' என்று உறுதிகூறிவிட்டுச் சென்ற தீரர். இவருடன் எவரெஸ்ட் சிகரத்தை அடைந்த நவாங்கோம்பு. ஷெர்பா டென்ஸிங் நார்கேயுடைய மருமகன். 3. ஸ்விட்ஸர்லாந்திலுள்ள ஆல்ப்ஸ் மலையில் தமது திறமையைக் காட்டுகிறார் டென்ஸிங். 4. சென்ற மாதம் அமெரிக்க கோஷ்டியின் முப்படைத் தாக்குதலுக்குப் பணிந்த எவரெஸ்ட் சிகரம். 5. வெண்பனிக் காட்டில் மலையேறும் வீரர்கள்.

ஆணவத்தை அடக்குகிற மாதிரியாக மௌனமாகச் சிரித்தபடி கம்பீரமாய் நின்று கொண்டிருந்த அந்தச் சிகரத்தில், வெள்ளிப் பனி மலையில் உலவி வந்ததன் மூலம் மனிதனுடைய தாபம் தீர்ந்ததும் பெருமிதம் பொங்கியதும் இயல்புதானே? பிரபஞ்சம் முழுவதிலுமிருந்தோர் ஒவ்வொருவரும் ஏதோ தாங்களே எவரெஸ்டின் உச்சியில் இருப்பதுபோலத் தான் குதூகலித்தார்கள். ஆகவே டென்ஸிங்கும் ஹிலரியும் அடைந்த பெருமிதம் உலகெங்கிலுமுள்ள மக்கள் சமூகமே கொண்ட பெருமிதத்தை விடச் சற்றுத்தான் அதிகமாக இருந்திருக்கும். தங்களுடைய பிரதிநிதிகளான சிலரது ஹிமாலயப் பிரவேசத்துக்கு அனுமதி அளித்து அனுக்கிரஹித்தமைக்காக ஆண்டவனுக்கு நன்றி கூறி வணங்கினர் மக்கள்.

இன்றைய பிரிட்டிஷ் மகாராணி இரண்டாம் எலிசபெத்தின் முடிசூட்டு விழாவின் போது வந்தது அந்த மகிழ்ச்சிகரமான செய்தி. அரசி ஆட்சிப் பொறுப்பேற்கும் தினத்தில் அவருக்கு அளிக்கப்பட்ட அருமையான பரிசாக பிரிட்டிஷ் குழுவின் அந்தச் சாதனையைப் போற்றினார்கள். இந்தப் பத்து வருஷங்களில் எத்தனையோ மாறுதல்கள். ஷெர்பா டென்ஸிங்இன்று தாத்தா டென்ஸிங்காக மாறிவிட்டிருக்கிறார். ஆனாலும் அவரது வாலிப முறுக்கும் இளமையான நெஞ்சமும்அப்படியேதான் இருக்கின்றன என்பதைச் சென்ற மாதம் வடக்கு வேல்ஸிலுள்ள ஸ்நோடான் என்ற மலையில் அவர் விறுவிறு வென்று உயரே ஏறிச் சென்ற வேகத்தைப் பார்த்துப் புரிந்து கொள்ள முடிந்தது. அங்கே இந்தப் பத்தாண்டு நிறைவு விழாவை அமைதியான சூழலில், அடக்கமான முறையில் எவரெஸ்ட் வீரர்கள் அறுவர், அந்தச் சிகரத்தைத் தாங்கள் முற்றுகையிட்ட போது தங்களுக்குத் தலைமை தாங்கி நடத்திச் சென்ற ஸர் ஜான் ஹண்டுடன் சேர்ந்து கொண்டாடினார்கள். பிரிந்தவர்கள் கூடினார்கள்; பேசி மகிழ்ந்தார்கள்.

சென்ற மாதத்தில் அமெரிக்கர்கள் எவரெஸ்ட் சிகரத்தின் மீது நடத்திய இருமுனைத் தாக்குதல் உலகமே போற்றத் தக்க விதத்தில் நல்ல பலனை அளித்தது. இந்த அதிசய நிகழ்ச்சியைப் பற்றி ஆரம்பத்திலிருந்து அறிய நாம் தென் துருவத்துக்கே செல்ல வேண்டும்!

''ஆறு வருஷங்களுக்கு முன் எட்மண்ட் ஹிலரியும் டாக்டர் க்ரிபித் பார்க்கும் அன்டார்டிக் ஆராய்ச்சிக்காகச் சென்றார்கள். கண்ணுக்கெட்டிய தூரம் வரையில் வெண்மையான பனிக் கட்டிகளைத் தவிர வேறு எதையுமே காண முடியாத ஒரு பிரதேசத்தில் ஹிலரியுடைய நினைவுகள் பின் நோக்கிச் சென்று இமயமலைச் சாரலில் இலைகளே தெரியாமல் பூத்துக் குலுங்கிய மரங்களடங்கிய வனங்களைச் சூழ்ந்து நின்றதில் வியப்பில்லை. அந்த எவரெஸ்ட் விஜயத்தின்போது தம்முடன் வந்த டாக்டர் க்ரிபித்தும் இதோ அருகிலேயே இருந்தார். இருவருமாக அந்தப் பயணத்தைப் பற்றிப் பேசினார்கள். ஊசி இலைக் காடுகளையும் இன்னும் மேலே பனி சூழ்ந்த பிரதேசத்திலும் 'பனிச்' சென்று சிரிக்கின்ற ஷெர்பாக்களின் இனிய சுபாவத்தையும் நினைவுகூர்ந்தார்கள்.

அதே சமயத்தில் க்ரிபித்துக்கு ஒரு விஷயம் புலனாயிற்று. இமயமலைச் சாரலில் 1953ம் வருஷத்துக்குப் பின் பலர் ஏறிச் சென்றிருந்த போதிலும் விஞ்ஞான ரீதியான ஆராய்ச்சிகளுக்கு இன்னமும் நிறைய இடம் இருப்பதை அவர் கண்டார். உடல் நலம் குன்றாமல் மனிதன் மிக மிக உயரமான இடங்களில் நீண்ட நாட்கள் வசிக்க முடியுமா? அவ்வாறு நீண்ட நாட்கள் வசித்தால் அந்தச் சூழ்நிலைக்கு ஏற்ப மனிதனுடைய உடலில் என்னென்ன மாறுதல்கள் உண்டாகும்? அப்படி உண்டாகிற மாறுதல்களின் பயனாக மனிதன் பிராணவாயுவை உடன் எடுத்துச் செல்லாமலே பல்லாயிரம் அடி உயரமுள்ள மலைச் சிகரங்களுக்குச் செல்ல முடியுமா? இந்த விஷயங்கள் குறித்தும் இன்னும் பல பிரச்னைகள் பற்றியும் இமயமலைச் சாரலில் ஆராய்ச்சிகள் நடத்தினால் அது விண்வெளிப் பயணம் செய்யவிருந்த கிளென், கார்பெண்டர் ஆகியோருக்கும்கூடப் பேருதவியாயிருக்கும் என்பது தெளிவாயிற்று.

ஒரு சில மாதங்களுக்குள், 'வோர்ல்ட் புக் என்ஸைக்ளோபீடியா' என்ற கலைக் களஞ்சிய ஸ்தாபனம் இவர்களுடைய கருத்தை அறிந்து கொண்டு உதவ முன் வந்தது. வாஷிங்டனில் உள்ள தேசிய பூகோள சங்கம் தங்களுடைய பிரதிநிதியாக பாரி பிஷப் என்பவரை அனுப்பி வைக்கத் தீர்மானித்தது. இந்தச் சங்கம் 1963ல் எவரெஸ்ட் சிகரத்தை அடைய முயலுவதாக அப்போதே திட்டமிட்டிருந்தது. அதற்கு முன்னோடியாக இந்த இமாலயப் பயணத்தில் பிஷப் கலந்துகொள்வது அனுகூலமாயிருக்கும்.

ஆக, விஞ்ஞானிகளும், மலை ஏறும் நிபுணர்களுமாய் இருபத்திரண்டு பேர்கள் நேபாளத்தின் தலைநகரமான காட்மாண்டுவில் கூடினார்கள். ஐந்நூறு கூலியாட்கள் தலைக்கு அறுபது பவுண்டு எடையுள்ள விஞ்ஞான உபகரணங்களையும் மலையேறுவதற்கான சாதனங்களையும் சுமந்து கொண்டு கிளம்பினார்கள்.

இப்பயணத்தில் இவர்களுக்கு ஏற்பட்ட விசித்திரமான அனுபவங்கள் எத்தனையோ. ரத்தத்தை உறிஞ்ச ஒட்டிக்கொள்கிற அட்டைகளைப் பிடுங்கி எறிந்தபடியே ஐயாயிரம் அடி வியர்க்க விறுவிறுக்க, இறைக்க இறைக்க ஏறினால் நாலாயிரம் அடி கீழே இறங்க வேண்டியதாக இருந்தது. மெல்ல மெல்ல நாட்கணக்கில் நடந்து பனி மூடிய பிரதேசத்தை அடைந்தார்கள். இங்கே வந்த வழியை மறந்து விடாதிருக்கவும் ஆபத்தான இடங்களைப் பின்னால் வருவோருக்குச் சுட்டிக் காட்டவும் ஆங்காங்கே சிவப்புக் கொடிகளை நட்டுக்கொண்டு மேலும் முன்னேறினார்கள். இன்னும் உயரே சென்றபின், மரத்தின் குறுக்கு வெட்டுத் தோற்றத்தில் உள்ள வட்டக் கோடுகள் ஒவ்வொரு வருஷத்திய வளர்ச்சியையும் அறிவிப்பது போல் இங்கேயும் பத்தங்குல உயரத்துக்குப் பாளம் பாளமாக வருஷா வருஷம் பனிக்கட்டியின் உயரம் அதிகரித்துக் கொண்டே போயிருப்பதைப் பார்த்தார்கள். யுத்த காலத்துக்கு முன் எவரெஸ்டை எட்டிப் பிடிக்க முயன்று தோல்வியுற்ற ஒரு குழுவினர்

பின்னும் விட்டுச் சென்ற பிராணவாயுக் கலசம் ஒரு பௌத்தக் கோயிலில் சேமக்கல மாகப் பயன்பட்டுக் கொண்டிருந்தது! இன்னும் மேலே இருபதாயிரம் அடி உயரத்தில் தலையை வலிக்க ஆரம்பித்தது; உடல் சோர்வுற்றுக் களைத்தது; வயிற்றைக் குமட்டியது; பசி பறந்து போயிற்று. தூக்க மருந்து உண்டா லொழிய உறக்கம் வரவில்லை. தூங்கிக் கொண்டே யிருக்கையில் பல விநாடிகளுக்கு மூச்சே நின்று விடும்! திடுமென விழித்துக் கொண்டு மூச்சுக் காற்றுக்காகப் போராட வேண்டியிருந்தது. தொண்டை வறண்டது; இருமலினால் நெஞ்சு வலித்தது. அந்தவ உயரத்தில் காற்றின் அடர்த்தி கம்மியான தால் சூரிய ஒளியிலுள்ள 'அல்ட்ரா வயலெட்' கதிர்களின் சக்தியை அக்காற்றினால் போது மான அளவுக்குக் குறைக்க முடிய வில்லை. கடல் மட்ட நிலையில் இல்லாத தொல்லை இது. இதனால், துணியினால் மூடப்பெறாத உடலின் பல பாகங்கள் தீயில் வெந்தது போல் சிவந்து விட்டன. ஓரிடத்தில் திடீரென்று நில நடுக்கம் போன்ற பயங்கரமான சத்தம் கேட்டு அவர்களையெல்லாம் மெய் சிலிர்க்க வைத்தது. எங்கோ தொலைவில் பிரம் மாண்டமான பனிக் கட்டிப் பாறைகள் மலைச் சாரலில் சரிந்து விழுகின்ற ஓசை! தூரத்தில் நுண்ணிய துகள்களாகப்பொடியுண்டு தெறித் துச் சிதறுகிற பனியையும் காண முடிந்தது.

ஆங்காங்கே செங்குத்தான பாறைகள் எதிர்ப்பட்டன. அவற்றில் துளைகளைச் செய்து வளையங்களை முடுக்கி அவற்றில் கனமான கயிற்றைக் கொடுத்து வாங்கி உடலைச் சுற்றிக் கட்டிக் கொண்டும் நூலேணிகள் கோடரிகள் இவற்றின் உதவியுடனும் மெல்ல மெல்ல முன்னேறினார்கள்.

மக்காலு எனப்படும் 27,824 அடி உயர முள்ள சிகரத்தின் உச்சியை பிராண வாயுக் கலசங்களின் உதவியின்றியே அடையப் பிரயத் தனப்பட்டார்கள். இங்கேதான் அவர்களுக்கு முதன்முதலாக ஓர் அதிர்ச்சி ஏற்பட்டது. 19,000 அடி உயரத்தில் ஹிலரிக்கு இலேசான நெஞ்சு வலி உண்டாகவே அவர் திரும்பி விட் டார். மற்றவர்கள் மேலும் முன்னேறினார்கள். உச்சியை அடைய முந்நூற்றுஎழுபது அடிகளே பாக்கி இருக்கும் போது பீடர் மல்கிரு என்ப வர் நுரையீரலில் ரத்தம் கட்டிக் கொண்டு அடைக்கவே சுருண்டு விழுந்து விட்டார். அடுத்த பத்து நாட்களில் அவரைக் கண்ணும் கருத்துமாய்ப் பாதுகாத்துக் கீழே அழைத்து வந்தார்கள். ஹெலிகாப்டரில் காட்மாண்டு போய்ச் சேர்ந்தார் பீட்டர்.

குளிரினால் கருகிப் போன பீட்டரின் இரண்டு கால்களையும் கைவிரல்கள் பலவற் றையும் டாக்டர் வெட்டி எடுத்துவிட வேண் டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டு விட்டது. அப்படி யிருந்தும் ஆபரேஷன் நடந்து முடிந்த பிறகு பீட்டர் சொன்னார்: "செயற்கைக் கால் களுடன் மலையேறிப் பார்க்க வேண்டும், எப்படி இருக்கிறதென்று!"

இரண்டாவது முறையாக 1956ல் எவ ரெஸ்டை வெற்றி கண்ட ஸ்விஸ் நாட்டவ ருக்குப் பிறகு சென்ற மாதம் முப்படைத் தாக் குதல் நடத்தி மூன்றிலும் ஜெயக் கொடி



"என்னிடம் 'முடியாது' என்கிற பேச்சே கிடையாது! என்னால் செய்ய முடியாது என்று நீ நினைக்கிற ஏதாவது ஒன்றைச் சொல்லு பார்ப்போம். அதைச் செய்து காட்டுகிறேன்!"

"டிபன் பில்லை இன்றைக்கு உன்னால் கொடுக்க முடியுமா?"

---

நாட்டி, 'ஹாட்ரிக்' செய்த பெருமையைத் தட்டிக் கொண்டு போன அமெரிக்கக் கோஷ்டி யினருக்கும் மேலே கூறியது போன்ற விசித்திர அனுபவங்கள் பல ஏற்பட்டிருக்கும் என்பதில் சந்தேகமில்லை.

வாஷிங்டனில் உள்ள தேசிய பூகோளச் சங்கத்தின் (National Geographical Society) ஆதரவில் இந்தியாவின் வடக்கெல்லைக்கு வந்து சேர்ந்த இவர்களது எவரெஸ்ட் பிரயாணத்தின் கடைசிக் கட்டத்தைப் பற்றிய கதையை-இருமுனைத் தாக்குதல் பற்றிய வர லாற்றை சமீபத்தில்தான் நேயர்கள் தினப் பத்திரிகைகளில் பார்த்திருப்பார்களாதலால் அதைப் பற்றி அதிகமாக ஏதும் சொல்ல வேண்டிய அவசியமில்லை.

வெற்றி வீரராய்த் திரும்பிய பாரி பிஷப் குறிப்பிட்ட ஒரு வேடிக்கையான நிகழ்ச்சி யைப் பற்றி மட்டும் இங்கே கூறுவோம். மலை ஏறுபவர்களெல்லாம் தாடி வளர்த்துக் கொள்வது சகஜமாகி இருக்கிறது. ஏன், ஒரு நியதியாகவே இருந்து வருகிறதென்றும் சொல்லலாம். 27,450 அடி உயரத்தில் பாரி பிஷப்பும் லூதர் ஜெர்ஸ்டாடும் தாங்கள் அமைத்திருந்த கூடாரத்தில் 'காஸ்' அடுப்பில் சமைத்துக் கொண்டிருக்கையில் திடுமென 'காஸ்' தீப்பிடித்துக் கொண்ட தாம். கூடாரமே பற்றிக் கொள்கையில் அவர்களுடைய தாடி மீசை யெல்லாம் எரி யாமல் இருக்குமா?

இப்படி சிறிதும் பெரிதுமான எத் தனையோ அபாயங்களைக் கடந்து மலை ஏறுவ தில் வெற்றி பெற, 'சதா மூளையைப் பயன் படுத்திக் கொண்டே யிருக்க வேண்டும்!' என்றார் பாரி பிஷப் தமது மண்டையை ஒரு விரலால் தட்டிக் காட்டியபடியே.

கடவுளின் அருளும் தேவைதான் என்று கட்டிக் காட்ட நமக்குத் தோன்றுகிறது. ஏனெனில், 'அன்று இரவு திறந்தவெளியில் நாங்கள் படுத்துக் கிடந்த போது, முதல் நாள் பகல் நேரத்தில் வீசிய காற்றெல்லாம் அடியோடு நின்று போய்ச் சூழ்நிலை நிச்சலன மாக இருந்ததால்தான் நாங்கள் உயிருடன் திரும்பினோம்' என்றும் பிஷப் கூறுகிறாரே!

# பொன் விலங்கு

## இருபத்து மூன்றாவது அத்தியாயம்

மல்லிகைப் பந்தல் கல்லூரியின் ஒவ்வொரு நாள் அநுபவமும் சத்தியமூர்த்தியின் வாழ்க்கையில் விரைவாகவும், புதுமையாகவும் திருப்பங்களை உண்டாக்கின. அஞ்சாமையையும், நேர்மையையும் பக்கபலங்களாகக் கொண்டு வலது காலை முன் வைத்து எப்போதும் போல் தடையில்லாமல் நடந்து கொண்டிருந்தான் அவன். மற்றவர்களுடைய சூழ்ச்சியையும், வஞ்சகத்தையும் பொய் புனைசுருட்டுகளையும் புரிந்து கொள்கிற போது அவனுக்கும் கூட மேலே நடக்கத் தோன்றாமல் மெலிந்து நலிந்து சில கணங்கள் தயங்கி நிற்கத் தோன்றும். அப்படி நலிந்து மனம் வருந்தும் வேளைகளில் நவநீத கவியின் அற்புதமான கவிதை ஒன்றை நினைவுகூர்வது அவன் வழக்கம். பக்குவமான நல்ல மனிதனுடைய சராசரி உள் மனத்தின் அந்தரங்கமான ஏக்கங்களும், தாபங்களும், தாகங்களும் சுயமாக ஒலிக்கிற நல்ல கவிதைகளை அந்தத் தலை முறையில் நவநீத கவி ஏராளமாகப் பாடியிருந்தார். அவற்றில் சத்திய மூர்த்தி அடிக்கடி நினைவு கொள்கிற கவிதை இது:



இதய மலர்ப் பொழிலில் எண்ணங்கள் மலர்ந்திருக்க
எண்ண மலர்க் குவையில் ஏடெழுதும் கவியிருக்க
கண்ணும் மனமும் பசித்திருக்கக் கண்டவுலகில் பொய்யிருக்க
எண்ணுமெழுத்தும் சலித்திருக்க ஏதோ நலிந்திருந்தேன்
என்னுள் மெலிந்திருந்தேன்........... ........... ........

சொல்லிப் புரிய வைக்க முடியாத நுணுக்கமான வேதனைகளின் போதெல்லாம் சத்தியமூர்த்திக்கு இந்தப் பாட்டு நினைவில் தோன்றி யிருக்கிறது. 'கண்ணும் மனமும் பசித்திருக்கக் கண்டவுலகில் பொய்யிருக்க' என்ற வரிகளை வாய்க்குள்ளேயே முனகிப் பார்த்துக் கொண்டாலும் — அப்படித் திரும்பத் திரும்ப முனகு வதில் கூட 'இதுதான் உண்மை' என்று உண்மையை ஞாபகப்படுத்திக் கொள்கிற சுகம் இருந்தது. நல்ல கவிதைகளை இரசிக்கிற சுகத்திலிருந்தும்கூட ஒருவன் தைரியசாலியாகவும், இலட்சிய வாதியாகவும் இருக்க முடியும். சில கவிகளுடைய பாடல்கள் தலை முறை தலைமுறைகளாகப் பெருகி வாழ்கிற ஒரு வீர பரம் பரையையே படைத்துக் காத்திருக்கிறது. அதைப் போல் ஓர் இலட்சியவாதியின் மனத்துக்கு ஆறுதல் தருகிற உட்குரல் இந்தப் பாடலில் இருப்பதை உணர்ந்



நீங்கள் பொலிவுடனிருக்க சார்மிஸ் உபயோகியுங்கள்!

# புதுமை பெறுக...
# இதம் பெறுக...
# நளினமாய் இருங்கள்
# நாள் முழுதும்!

குளுமையையும், புத்துணர்ச்சியையும் அளிக்கும் சார்மிஸ் டால்கம் பவுடர் நீங்கள் நாள் முழுதும் நளினமாயிருக்க உதவுகிறது. உன்னத மனோரம்மிய மணம்கொண்ட சார்மிஸ் உங்களுக்கு சுகத்தையும் புத்துணர்ச்சியையும் அளித்து, உங்கள் அழகை நன்கு சோபிக்கச் செய்கிறது!

# சார்மிஸ்

உன்னத, மனோரம்மிய மணத்துடன் கூடிய டால்கம் பவுடர்

திருக்கிறான் அவன். இந்தச் சில நாட்களில் அவனுடைய வாழ்வில் எத்தனை எத்தனையோ புதிய சம்பவங்களும் புதிய அநுபவங்களும் நேர்ந்திருந்தன. பொறுமையால் வருகிற புகழையும், புகழால் வருகிற பொறாமையையும் மல்லிகைப் பந்தல் கல்லூரியில் மாறி மாறிச் சந்திக்கத் தொடங்கியிருந்தான் அவன். அவன் எவ்வளவோ மறுத்தும் கேட்காமல் பூபதி அவனை உதவி வார்டனாக நியமித்திருந்தார். மாணவர்களிடம் அளவற்ற பெருமதிப்பை அடைகிற ஆசிரியன் நிர்வாகிகளுடைய பகைமையைச் சம்பாதித்துக் கொள்ளுவதும், நிர்வாகிகளிடம் அளவற்ற பெருமதிப்பை அடைகிற ஆசிரியன் மாணவர்களுடைய பகைமையைச் சம்பாதித்துக் கொள்ளுவதுமேதான் பெரும்பாலான கல்லூரிகளிலே வழக்கமாக இருக்கும். இரு சாராருடைய மதிப்பையும் பெறுகிற ஆசிரியனைப் பார்த்தால் எல்லாருக்கும் வியப்படையத் தோன்றும். அதோடு பொறாமைப்படவும் தோன்றும். இதற்கு யாரும் எப்போதும் விதிவிலக்கு இல்லை.

கல்லூரி திறந்த இரண்டாவது வாரமோ, மூன்றாவது வாரமோ ஒரு நாள், பத்து மணிக்கு மேல் ஐந்து நிமிடம் தாமதமாகக் கல்லூரிக்குள் நுழைந்திருந்தான் சத்திய மூர்த்தி. கல்லூரி முதல்வர் ஏதோ காரியமாக அல்லது ஒரு காரியமும் இல்லாமல் அறை வாயிலில் நின்று கொண்டிருந்தவர் அவன் உள்ளே தனியாக வருவதையும் பார்த்துக் கைக் கடிகாரத்தையும் பார்த்தார். இதையடுத்து அரை மணி நேரத்துக்கெல்லாம் கல்லூரி முதல்வரின் கையொப்பமிட்ட சுற்றறிக்கை ஒன்று எல்லா ஆசிரியர்களுக்கும் வந்தது. 'சில ஆசிரியர்கள் கல்லூரிக்குத் தாமதமாக வருவதையே ஒரு வழக்கமாகவைத்துக் கொண்டிருக்கிறார்கள் என்பதைக் குறிப்பிட்டு அதைத் தவிர்ப்பதற்காக இனிமேல் ஆசிரியர்கள் கையொப்பமிடும் நோட்டுப் புத்தகத்தில் கையெழுத்துடன் அதற்குக் கீழே வந்த நேரமும் குறிப்பிட வேண்டும்' என்று அந்தச் சுற்றறிக்கையில் கண்டிருந்தது. ஐந்து நிமிடங்கள் தாமதமாகத் தன்னைப் பார்த்ததும் முகத்தில் கடுகடுப்போடு கடிகாரத்தைப் பார்த்துக் கொண்டே அவர் அறைக்குள் நுழைந்ததையும் அதற்கடுத்த முப்பதாவது நிமிடத்தில் மேற்படி சுற்றறிக்கை வந்ததையும் பார்த்த போது முதல்வர் தன் மேல் 'கறு' வைத்துக் கொண்டு பகைமை செலுத்தி வருகிறார் என்பதைச் சத்திய மூர்த்திக்கு நன்றாகப் புரிய வைத்தன! 'உதவி வார்டன்' ஒருவர் அவசியமில்லை என்பதாகவும், அப்படியே அவசியமாக இருந்தாலும் புதிதாக வந்திருக்கிற ஓர் இளம் விரிவுரையாளரை அதற்கு நியமிக்க வேண்டாம் என்றும் முதல்வர் நிர்வாகியிடம் கடுமையாக எதிர்த்ததாகவும் அந்த எதிர்ப்பையும் மீறிக் கொண்டு பூபதி தன்னை உதவி வார்டனாக நியமித்ததாகவும் சத்தியமூர்த்தி கேள்விப்பட்டு அறிந்திருந்தான். இந்த நிகழ்ச்சிகள் எல்லாம் சேர்ந்து முதல்வரின் மனத்தில் தன் மேல் எவ்வளவு வைரத்தை ஏற்படுத்தியிருக்க முடியும் என்பதும் அவனுக்குத் தெரிந்துதான் இருந்தது. கல்லூரி முதல்வரின் சுற்றறிக்கைக்குப் பின்னர் எல்லா ஆசிரியர்களும் கையெழுத்துடன் வந்த நேரமும் குறிப்பிடுவது வழக்கமாக இருந்தது. சத்தியமூர்த்தியும் இரண்டு மூன்று நாட்கள் கையெழுத்துடனே நேரமும் எழுதினான். நான்காவது நாள் ஏதோ




ஒரு திட்டமான எண்ணத்துடன் அவன் நேரம் போடுவதை நிறுத்தி விட்டான். அன்று காலை பதினொரு மணி சுமாருக்கு ஆசிரியர் அறையில் உட்கார்ந்திருந்த சத்தியமூர்த்தியைத் தேடிக் கொண்டு கல்லூரி முதல்வரின் ஊழியன் (பியூன்) வந்து சேர்ந்தான். அவ்வாறு அவன் வருவதை ஒவ்வொரு விநாடியும் சத்திய மூர்த்தி எதிர்பார்த்துக் கொண்டுதான் காத்திருந்தான்.

"சார்! இதிலே நீங்க வந்த டயம் போடலியாம். போட்டு வாங்கியாரச் சொல்லி ஹெட்கிளார்க் கொடுத்தனுப்பிச்சாரு" என்று கையோடு கொண்டு வந்திருந்த அட்டெண்டன்ஸ் ரிஜிஸ்டரைச் சத்தியமூர்த்தியிடம் நீட்டினான் அந்த ஊழியன். உண்மையையும் நியாயத்தையும் காரணமாகக் கொண்டு எதிர்க்கவும் சமாளிக்கவும் நேர்கிற எந்த இடத்திலும் சத்தியமூர்த்தி சிறிதும் தலை குனியாமல் நிமிர்ந்து நின்றிருக்கிறான். இன்றும் அப்படி நிமிர்ந்து

நிற்கத் தனக்கு ஒரு சந்தர்ப்பம் வாய்ப்பதாகத்தான் அவனால் நினைக்க முடிந்தது.

"நேரம் குறிப்பிடுவதற்கில்லை என்று போய்ச் சொல்லு" என்பதாக அவன் உரத்த குரலில் பதில் கூறி ஊழியனை முகத்தில் அடித்தாற்போல் திருப்பி அனுப்பியபோது ஆசிரியர் அறையில் உட்கார்ந்திருந்த மற்ற ஆசிரியர்கள் ஏதோ பெரிய சண்டை வரப்போகிறதென்ற பொதுவான மகிழ்ச்சியுடனும், தணியாத பயத்துடனும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக்கொண்டனர். அவர்கள் எல்லோரும் மற்றவர்களுடைய பிரச்னைகளை வம்புத்தனமான மகிழ்ச்சியோடு இரசித்துச் சிரிப்பதில் ஒருவருக்கொருவர் சளைக்காதவர்கள் என்பது சத்தியமூர்த்திக்கு நன்றாகத் தெரியும். பட்டறையில் உலைக்களத்தில் சம்மட்டி அடிக்கிற சாதாரணத் தொழிலாளிகள்கூடத் தொழில் நிமித்தமாக ஏற்படும் சாதக பாதகங்களில் ஒன்றுபட்டுக் கூடி நிற்பார்கள். அதே சமயத்தில் படித்துப் பட்டம் பெற்று நாகரிகமாக உடையணிந்து நாகரிகமாகப் பேசித் திரிகிற புத்திமான்கள் அப்படி ஒன்றுபடாமல் ஒருவரைப் பற்றி ஒருவர் புறம் பேசுவதும், ஒருவருடைய வீழ்ச்சியில் மற்றொருவர் உள்ளூற மகிழ்வதுமாக மனத்தில் அநாகரிகமாகவும் உடம்பினால் நாகரிகமாகவும் வாழ்வதில் வெட்கப்படமாட்டார்கள் என்பதை அவன் அறிந்திருந்தான். முதுகெலும்பு இல்லாதவர்களைப் பற்றிக் கவலைப்படாமல் தன்னளவில் எந்த நிமிடமும் எதையும் நியாயமாக எதிர்கொள்ளத் தயாராக நிமிர்ந்து உட்கார்ந்திருந்தான் சத்தியமூர்த்தி. சிறிது நேரத்தில் கல்லூரி முதல்வர் தம்முடைய அறைக்குக் கூப்டனுப்புவார் என்று எதிர்பார்த்திருந்தான் அவன். ஊழியன் வந்து சென்றதும், சத்தியமூர்த்தி உரத்த குரலில் அவனுக்கு மறுமொழி கூறி அனுப்பியதும் ஆசிரியர்கள் அறையில் அசாதாரணமானதொரு மௌனத்தையும், வஞ்சகமான அமைதியையும் நிலவச் செய்திருந்தன.

சிறிது நாழிகையில் கல்லூரி முதல்வரே டக்டக்கென்று பூட்ஸ் ஒலிக்க நடந்து வந்து ஆசிரியர்கள் அறையில் படியேறி நுழைந்தார். ஒவ்வொரு படியாக மேலேறி அந்த பூட்ஸ் ஒலி அருகில் வர வரப் பயந்த சுபாவமுள்ள ஆசிரியர்களைச் சுற்றிலும் ஏதோ ஒருவிதமான அமைதி அதிகமாவது போலிருந்தது! அதன் பின்பு நடந்தவையெல்லாம் நாடகக் காட்சி போலிருந்தது. அறையில் நுழைந்ததும் எல்லோருடைய பார்வையிலும் படுகிறாற் போல முகப்பில் நின்றுகொண்டு, "மிஸ்டர் சத்தியமூர்த்தி! உங்களுக்குத்தான் ஒரு விஷயம் சொல்லிவிட்டுப் போக வந்தேன்.. இன்று அட்டெண்டன்ஸ் ரிஜிஸ்டரில் நீங்கள் நேரம் குறிப்பிடவில்லை. நியாயமாக நடந்துகொள்வதில் எல்லோருக்குமே கவனம் வேண்டும். சுயமரியாதையைக் காப்பாற்றிக்கொள்ள ஆசைப்படுகிறவர்களுக்கு நியாயத்தில் இன்னும் அதிகமான கவனம் வேண்டும்" என்று ஏதோ பேச ஆரம்பித்துச் சீறினார். சத்தியமூர்த்தி எழுந்து நின்று நிதானமாகப் பதில் கூறலானான்:

"நீங்கள் சொல்வதைச் சிறிதும் மறுக்காமல் அப்படியே ஒப்புக்கொள்கிறேன் சார்! மறந்துவிட்டதன் காரணமாகவோ அல்லது கவனக் குறைவாகவோ நேரம் குறிக்காமல் விடவில்லை. வேண்டுமென்றேதான் நேரம் குறிப்பதைக் கைவிட்டிருக்கிறேன். எல்லாரும் ஒன்றாகச் சேர்ந்து காப்பாற்றுகிறவரைதான் சார் நியாயத்துக்கு மரியாதை உண்டு. நீங்கள் எப்படி இருந்தாலும் நான் அதைப் பொறுத்துக் கொள்ள வேண்டும். ஆனால் நான் நியாயமாயிருக்க வேண்டுமென்று நீங்கள் எதிர்பார்ப்பதையும் சேர்த்து மன்னிக்கிற பொறுமை எனக்கு இருக்க வேண்டும் என்றால் அது எப்படி ஒழுங்காகும்? நீங்கள் சுற்றறிக்கை அனுப்பிய நாளிலிருந்து நானும் பார்த்துக் கொண்டு வருகிறேன். நாங்கள் எல்லோரும் வருகிற நேரத்தைக் குறிக்கிறோம். நீங்களும் உங்களுடைய துணை முதல்வரும், இன்னும் சில பேராசிரியர்களும் மட்டும் நேரம் குறிப்பதில்லை. நான் இரண்டு மூன்று நாள் இதைத் தொடர்ந்து கவனித்தேன். இன்றிலிருந்து என் கையெழுத்துக்குக் கீழேயும் நேரம் போடுவதை நிறுத்திவிட்டேன்."

"இருக்கலாம்! ஆனால் என்னைக் கேட்பதற்கு நீங்கள் யார்?"

"நான் யாரா? நான் உங்களுக்குக் கீழே பணி புரிகிறவன் என்பதே உங்களை இப்படிக் கேட்கப் போதுமான தகுதிதான் சார். 'என்னைக் கேட்க நீங்கள் யார்?' என்று மாணவர்களிடம் கூட ஆசிரியர்கள் கேட்க முடியாத கேட்கக் கூடாத காலம் சார் இது! யாரை ஆள்கிறோமோ அவர்களிடம் தான் அதிகப்பெருந்தன்மை காண்பிக்க வேண்டுமென்பது இந்த நூற்றாண்டின் இரகசியம் என்பதை ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள்."

"நிறுத்துங்கள்! நீங்கள் அதிகம் பேசுவது நன்றாயில்லை."

ஜூன் 7 உ முதல்

சென்னை

கெயிட்டி · பிரபாத்

புவனேஸ்வரி · நூர்ஜஹான்

மற்றும் தென்னாடெங்கும்....

கதை
அகிலன்

பாடல்கள்
கவிஞர்
கண்ணதாசன்
அ. மருதகாசி

இசை
K.V. மகாதேவன்

ஒளிப்பதிவு
W.R. சுப்பாராவ்

கலை
C.H.V. பிரசாத்ராவ்

எடிட்டிங்
K. துரைராஜ்

பாடல்கள்
ரீ ரிகார்டிங்
T.S. ரங்கசாமி

ஸ்டூடியோ
விஜயா · வாஹினி

ஸ்பைடர் பிலிம்ஸ்

# குலமகள் ராதை

திரைக்கதை, வசனம், டைரக்ஷன்

**A.P. நாகராஜன்**

SANDHYA MOVIES

ELEGANT



''இந்தக் கைங்கர்யக் கச்சேரியில் உங்கள் பாட்டுக் கச்சேரிக்கும் இடம் அளித்திருக்கிறோம். தேங்காய் மூடிக் கச்சேரிதான் என்றாலும் அவசியம் வந்து பாடவேண்டும். வரும்போது உங்கள் கைங்கர்யமாக இரண்டு தேங்காய் மூடிகளையும் வாங்கி வந்து விடுங்கள்.''

''பயப்படாதீர்கள் சார்! நான் பேசுவதாலோ, நீங்கள் கேட்பதாலோ மரியாதைக் குறைவு ஆகிவிடாது. இந்தக் கல்லூரி காலை பத்து மணிக்கு ஆரம்பம் என்று தெளிவாக எல்லோருக்கும் தெரியும். அப்படியிருக்கும்போது, நேரம் குறிப்பது எதற்கு? ஏதோ ஒருநாள் யாரோ இரண்டு விநாடி தாமதித்து வந்தால் அதற்காக எல்லோருமே தாமதமாக என்றைக்குமே வருவதாகப் பாவித்துக்கொண்டு நீங்கள் ஏன் சிரமப்படவேண்டும்?''

ஒன்றும் பதில் கூறாமல் கல்லூரி முதல்வர் சில விநாடிகள் ஆசிரியர் அறையில் இங்கும் அங்குமாக இரை தேடுகிற புலிபோல் நடந்தார். போவதற்கு முன் எல்லா ஆசிரியர்கள் பக்கமாகவும் திரும்பி, ''எனக்கென்ன வந்தது? உங்களுக்கு எல்லாம் விருப்பம் இல்லையானால் நாளையிலிருந்து யாரும் நேரம் குறிக்க வேண்டியதில்லை'' என்று வேண்டா வெறுப்பாகச் சொல்லிவிட்டுப் போனார் முதல்வர். அவர் இப்படி வந்து இரைந்துவிட்டுப் போன சிறிது நேரத்துக்குப் பின் தபால்காரர் சத்தியமூர்த்தியைத் தேடி வந்து ஸ்டாம்ப் ஒட்டாத கடித உறை ஒன்றை நீட்டிக் கட்டணம் வசூலித்துக்கொண்டு போனார். ஏதோ ஒரு நியாயத்துக்காகச் சத்தமிட்டுப் பேசிவிட்டு உட்கார்ந்திருந்த மறு கணம் ஸ்டாம்ப் ஒட்டாத கடிதத்தை வாங்க நேர்ந்ததும் அதை அனுப்பியது யாராயிருந்தாலும் கோபப்படுவதற்குரியவராகத் தோன்றியது அவனுக்கு. குழந்தைக் கையெழுத்தைப் போல் எழுத்துக்கள் மேலும் கீழுமாக வலித்துக்கொண்டு போகும்படி பென்சிலில் எழுதிய முகவரி. 'ஸ்டாம்ப்' ஒட்டாத தவறு தவிர அந்த முகவரியிலும் வேறு நாலைந்து தவறுகள் இருந்தன. சத்தியமூர்த்தி அவர்கள் — ஆசிரியர் காலேஜ் — மல்லிகைப்பந்தல் — என்று மட்டுமே முகவரி எழுதப்பட்டிருந்தது. அந்த ஊரில் ஒரே கல்லூரி மட்டுமே இருந்ததாலோ அல்லது ஆசிரியராக வேறு சத்தியமூர்த்தி இல்லாததனாலோ கடிதம் இலக்குத் தப்பாமல் வந்து சேர்ந்திருந்தது. முதல்வரிடம் சொற்போர் நடத்தி முடித்த வேகம் தணியாத மனநிலையில் பென்ஸிலில் எழுதிய முகவரியும், ஸ்டாம்ப் ஒட்டாத தண்டமும் மனத்தை உறுத்த, அதை எழுதியவர் மேல் கோபத்தோடு கடிதத்தைப் பிரித்தான் சத்தியமூர்த்தி. எவ்வளவுக் கெவ்வளவு கோபத்தோடு அந்தக் கடிதத்தைப் பிரித்தானோ, அவ்வளவுக் கவ்வளவு அநுதாபத்தோடும் மனநெகிழ்ச்சியுடனும் படிக்கவேண்டிய கடிதமாயிருந்தது அது. யாரிடமிருந்து வந்திருந்ததோ அவளிடமிருந்து இப்படி ஒரு கடிதத்தை இங்கே அவன் எதிர்பார்க்கவேயில்லை.

என்னைக் காப்பாற்றி ஆட்கொண்ட தெய்வத்தின் திருவடிகளில் அடியாள் மோகினி அநேக வணக்கங்கள். நான் என் மனத்தில் என்னென்ன நினைக்கிறேனோ அவற்றையெல்லாம் எப்படி எந்தெந்த வார்த்தைகளால் உங்களுக்கு எழுதலாமென்று தெரியாமல் ஏதோ கிடைத்த காகிதத்தில் எப்படியோ எழுதுகிறேன். என்னுடைய நிலைமை நாளுக்கு நாள் மோசமாகிக் கொண்டு வருகிறது. அம்மாவும் கண்ணாயிரமும் என் மனப் போக்கைப் புரிந்துகொள்ளாமல் என்னைப் பாடாய்ப் படுத்துகிறார்கள். என் மனமோ எதிலுமே இலயிக்கவில்லை. யார் யாரோ வருகிறார்கள், போகிறார்கள். நானோ, உங்களிடம் பறந்து வந்துவிடத் துடிக்கிறேன். இந்தக் காகிதம் சிறிசு. என் மனத்தில் நினைக்கிற எல்லாவற்றையும் இதில் நான் எழுதிவிட முடியாது. இதைவிடப் பெரிய காகிதத்தில்கூட அவற்றை எழுதிவிட என்னால் இயலாது. புஷ்ப மரத்தடியில் வீற்றிருக்கும் தெய்வத்துக்கு அர்ப்பணமாகும் பூவைப் போல் நான் தானகவே உங்களுக்குச் சமர்ப்பணமானவள். 'என் ஞாபகமாக இந்த மோதிரம் உங்கள் கையிலிருக்கட்டும்' என்று நான் உங்கள் கையில் அந்த மோதிரத்தை அணிவித்தபோது, 'ஞாபகம் இருபுறமும் இருக்க வேண்டும்' என்று பதிலுக்கு உங்கள் கைமோதிரத்தைக் கழற்றி

அணிவித்தீர்களே? அந்த ஞாபகம் உங்களுக்கு இருக்கா? இந்தக் கடிதத்துக்கு உங்களிடம் வந்து சேரும் சக்தி உண்டோ இல்லையோ? நான்பாட்டுக்குப் பைத்தியம் போல இந்தச் சிறிய காகிதத்தில் நுணுக்கி நுணுக்கி எழுதுகிறேன். இன்று சாயங்காலம் இந்தக் கடிதத்தை எழுதுவதற்கு முன் மீனாட்சி கோவிலுக்குப் போயிருந்தேன். அங்கே பிராகாரத்தில் சுற்றும்போது உங்கள் ஞாபகத்தினால் தனித்துப் போனேன். இதற்கு மேல் என்னால் ஒன்றும் எழுத முடியவில்லை. இந்தக் கடிதத்தை முடிக்கிறதுக்கு முன் என் வேதனையை உங்களுக்குச் சொல்வதற்கு நல்ல வாக்கியம் வேண்டுமென்று யோசித்து யோசித்துக் கடைசியில் கீழ்க்காணும் வாக்கியத்தோடு முடிக்கிறேன். 'உங்களுடைய வாத்தியம் — உங்களுக்குச் சமர்ப்பிக்கப்பட்ட வாத்தியம் வாசிக்க நீங்கள் இல்லாமல் தூசிபடிந்து போய் மூலையில் கிடக்கிறது' — இப்படிக்கு உங்கள் அடியாள் மோகினி.

இந்தக் கடிதத்தைப் படித்து முடித்தபோது மோகினியே அருகில் வந்து நின்றுகொண்டு மெல்ல மெல்ல விசும்பி அழத் தொடங்குவது போல் சத்தியமூர்த்திக்கு ஒரு பிரமை உண்டாயிற்று. பாரதியின் கடிதத்தைப் போல் ஆரம்பமும் முடிவும் நடுவும் ஒழுங்காக அமைந்து மயக்கிவிடுகிற தன்மை இதில் இல்லாவிட்டாலும் ஒரு பரிசுத்தமான மனம் துடிப்பது இதில் நன்றாகத் தெரிந்தது. திடநெஞ்சமுள்ள சத்தியமூர்த்தியையே, மௌனமாக அழச் செய்திருந்தது அந்தக் கடிதம். 'உங்களுக்குச் சமர்ப்பிக்கப்பட்ட வாத்தியம் நீங்கள் இல்லாமல் தூசி படிந்துபோய் மூலையில் கிடக்கிறது' என்ற கடைசி வாக்கியத்தை இரண்டு மூன்று முறை திரும்பத் திரும்பப் படித்தான் சத்தியமூர்த்தி. சின்னஞ்சிறு சந்தாகிய சங்கீத விநாயகர் கோவில் தெருவும், மீனாட்சி கோவில் கோபுரங்களும், தன் வீடும் அம்மாவும், அப்பாவும், தங்கைகளும், நண்பன் குமரப்பனும், ஞாபகம் வந்து மரத்தை வேரோடு பறிப்பதைப் போல் ஊர் ஏக்கம் நெஞ்சைப் பறித்தது. சில நாழிகை நேரம் உட்கார்ந்திருந்த இடத்தையும் சூழ்நிலையையும் கூட மறந்துபோய் ஊர் ஞாபகத்தில் ஈடுபட்டிருந்தான் அவன்; 'யாரோ ஒரு பெண்! எப்போதோ இரயிலில் சந்தித்த சந்திப்பு. அந்தச் சந்திப்புக்கு நிலையாக என்ன மதிப்பு இருக்கிறது?' என்று எண்ணி மோகினியை அவனால் மறந்துவிட முடியவில்லை. சித்திரா பௌர்ணமி இரவில் நிகழ்ந்த ஆண்டாள் நாட்டியத்திலிருந்து அவளுடனே தொடர்புடைய நிகழ்ச்சிகள் ஒவ்வொன்றாக ஞாபகம் வந்து அவனை ஆட்கொண்டன. முருகன் படத்திலிருந்து நழுவிக் கழுத்தில் விழுந்த மாலையோடு தன் தோள்களைப் பற்றிக்கொண்டு "இப்படியே இருங்கள்! இந்த மாலையைக் கழற்றாதீர்கள்! உங்களை இதே கோலத்தில் கண் நிறையப் பார்க்க வேண்டும் போல ஆசையாயிருக்கிறது" என்று கெஞ்சியதையும் ஞாபகப்படுத்திக்கொண்டான். மனம் இந்த ஞாபகத்தில் வேறெல்லாக் குழப்பங்களையும் மறந்து விட்டது. கல்லூரி முதல்வர் ஆசிரியர்கள் கையெழுத்துப் போடும் நோட்டுப் புத்தகத்தில் நேரம் குறிப்பிடாததற்காகச் சண்டைக்கு வந்ததையும், அதையொட்டி அவரும் தானும் காரசாரமாக விவாதம் செய்ததையும், என்றோ நடந்தது போல் மறந்திருந்தான் அவன்.

"கவலைப்படாதே! என்னுடைய வாத்தியத்தை மீட்டி இனிய பண்களை வாசிப்பதற்காக நான் ஒருநாள் வருவேன். அதுவரை பொறுத்திரு. உன் ஞாபகம் இல்லாத நேரமே கிடையாது. சில நாட்களுக்கு முன்பு இங்கே கல்லூரி மாணவர்களுக்காக 'ஷீ வாக்ஸ் இன் ப்யூட்டி' என்று ஓர் ஆங்கிலக் கவிதையை விளக்கி வகுப்பு நடத்தினேன். அந்த விரிவுரை தத்ரூபமாகவும், அழகாகவும் வாய்த்துப் பலருடைய பாராட்டைப் பெற்றதற்குக் காரணமாக என் மனத்திற்குள் தூண்டுதலாக இருந்து பேசியவள் நீதான் மோகினி" என்றெல்லாம் விவரித்து அவளுக்கு ஒரு பதில் கடிதம் எழுத எண்ணினான் சத்தியமூர்த்தி. ஆனால் எப்படி எழுதுவது? மோகினியின் தாயிடமோ, கண்ணாயிரத்திடமோ அந்தக் கடிதம் சிக்கினால் என்ன ஆவது? என்ற தயக்கமும் வழக்கம் போல் தோன்றித் தடுத்தது. அன்று வெள்ளிக்கிழமையாதலால் மறு நாள் சனியும் அதற்கு அடுத்த நாள் ஞாயிறும் விடுமுறைகளாக இருப்பதை உத்தேசித்துத் தாவர இயல் விரிவுரையாளர் சுந்தரேசன் ஊருக்குப் போய் வருவதாகச் சொல்லிக் கொண்டு மூன்று மணிக்கே புறப்பட்டிருந்தார். கல்லூரி எல்லைக்குள்ளே முதல்வருக்கும் அவனுக்கும் காரசாரமாக விவாதம் நடந்ததைப் பார்த்து மருண்டு போய் 'நமக்கேன் வம்பு?' என்று விலகி நின்று விட்ட

# நம்பிக்கைக்குப் பாத்திரமான 'டெட்டால்'

## இவரது உடல் சுகத்திற்கு

உங்கள் உடலை சுகாதாரத்துடன் வைத்துக்கொள்ள எப்பொழுதும் 'டெட்டாலை' கவலையின்றி உபயோகியுங்கள். 'டெட்டால்' உலகிலேயே மிகவும் நம்பிக்கைக்குப் பாத்திரமான கிருமிநாசினி. அது கிருமிகளைக்கொல்லுகிறது—மென்மையான சருமத்தையும் தசைகளையும் சிறிதும் பாதிக்காது. 'டெட்டால்' தொற்றுநோய் வராமல் உங்களைப் பாதுகாக்க உதவும். அசிரத்தையாயிருக்காதீர்கள்.

'ஸ்திரீகளின் நவீன சுகாதாரம்' என்ற இலவச நூலைப் பெற எங்களுக்கு எழுதுங்கள்.




'டெட்டாலை' குளிக்கும் நீருடன் கலந்து உபயோகித்தால் நறுமணத்துடன் உற்சாகத்தையும் கொடுக்கும். தொண்டைப்புண்களைத் தடுப்பதற்கு 'டெட்டால்' கலந்த நீர் கொப்பளிக்க உதவும். சிராய்ப்புகளிலும் வெட்டுக் காயங்களிலும் 'டெட்டாலை' உடனே உபயோகியுங்கள். தொற்றுதலை அது தடுப்பதற்கு உதவும்.

DL 5 அட்லாண்டிஸ் (ஈஸ்ட்) லிட். (இங்கிலாந்தில் இணைக்கப்பட்டது) JWTADL 4736



"இந்தப் பந்துக்கு எத்தனை பக்கங்கள்?"

"பந்தாச்சேடா! அதுக்கு ஏதடா பக்கம்?"

"அட அசடே! இருக்குடா! உள் பக்கம் வெளிப் பக்கம் என்று இரண்டு பக்கம் இருக்கேடா!"

அதே ஆசிரியர்கள் எல்லோரும் கல்லூரிப் பாட வேளை முடிந்து காம்பவுண்டைக் கடந்து வெளியே வந்ததும் அவனருகே நெருங்கி வந்து பாராட்டினார்கள். "என்ன இருந்தாலும் நீர் பெரிய துணிச்சல்காரர் ஐயா! மதுரைக்காரரோ இல்லையோ? சும்மா விட்டு விடுவீரா? இப்படி யாராவது புத்தி புகட்டினாலொழிய பிரின்ஸிபாலுக்குக் கொழுப்பு ஒடுங்காது! 'நாளையிலேருந்து கையெழுத்து மட்டுமே போட்டாலும் கூடப் போதும்' என்று முதலையே பணிந்து போகும்படி செய்து விட்டீரே ஐயா!" என்று சத்தியமூர்த்தியை நாசூக்காகக் கொம்பு சீவி விட்டார் ஒரு பேராசிரியர்.

"'யாரை அஞ்சுகிறோமோ அவர்களிடம்தான் அதிகம் பெருந்தன்மை காண்பிக்க வேண்டும் என்பது இந்த நூற்றாண்டின் இரகசியம்' என்று ஒரு போடு போட்டீரே; அந்த இடத்தில் ஒன்றும் பதில் சொல்லத் தோன்றாமல் முதலை அப்படியே அயர்ந்து போய் விட்டது" என்று புகழ்ந்தார் இன்னொருவர்.

"என்ன காரணத்தாலோ பிரின்ஸிபால் உங்களுக்கு அதிகமாகப் பயப்படுகிறாரே?" என்று மூக்கில் விரலை வைத்தார் வேறொருவர்.

"பயமுறுத்துவதற்கும் மிரட்டுவதற்கும் நான் செப்பிடு வித்தைக்காரனோ பில்லி சூனியக்காரனோ இல்லை. எனக்கு நியாயம் என்று தோன்றியதை நான் உரத்த குரலில் சொன்னேன். அந்தச் சமயத்தில் பேசாமல் இருந்த நீங்கள் எல்லாரும் இப்போது என்னைப் புகழ்வதைப் பார்த்து எனக்கே ஆச்சரியமாயிருக்கிறது. நல்லதை வெளிப்படையாக ஆதரிக்கவும், கெட்டதை வெளிப்படையாக எதிர்க்கவும் தெரியாமல் கல்லூரிக் காம்பவுண்டு தாண்டுகிற வரை ஒரு விதமாகவும், தாண்டி வெளியே வந்த பிறகு ஒரு விதமாகவும் பேசுகிற உங்களை எல்லாம் நான் எப்படி நம்ப முடியும்? நியாய உணர்ச்சியை இடத்துக்கேற்ப மறைத்துக் கொள்கிற கோழைத்தனம் படித்தவர்களிடமே இருப்பதை எப்படிப் பொறுத்துக் கொள்ள முடியும்?" என்று ஆத்திரத்தோடு அவர்களை எதிர்த்துக் கேட்டான் சத்தியமூர்த்தி. எதிலும் உண்மையாகவும், வெளிப்படையாகவும் இத்தனை அஞ்சாமையை ஒரு மனிதனோடு இணைத்துப் பார்க்க முடியாத அவர்கள் "இந்தப் பையன் அசட்டுத் தைரியம் பேசுகிறான். போகப் போக வாழ்வில் அதிகமாகக் கஷ்டப்படுவான்" என்று விலகிப் போய் வேறு விதமாக வேதாந்தம் பேசிக் கொண்டு சென்றார்கள்.

அன்று மாலை சில மாணவர்கள் சத்தியமூர்த்தியைத் தேடிக் கொண்டு அவனுடைய அறைக்கு வந்திருந்தார்கள். அந்த மாணவர்களையும் உடனழைத்துக் கொண்டு போய் எதிர்ப்புறம் ஏரிக் கரைப் புல்வெளியில் நீர்ப் பரப்பை ஒட்டினாற் போல் கரையோரமாக அமர்ந்து பேசிக் கொண்டிருந்தான் சத்தியமூர்த்தி. சங்க இலக்கியத்திலிருந்து 'ஸாமர் செட் மாம்' வரை அவர்கள் எந்தக் கேள்வியைக் கேட்டாலும் உற்சாகமாக விளக்கிப் பேசிக் கொண்டிருந்தான் அவன். நல்ல இசையரங்கில் கட்டுண்டு வீற்றிருக்கும் இரசிகர்களைப் போல் மாணவர்கள் தங்களை மறந்து ஈடுபட்டு அவன் கூறுவனவற்றைக் கேட்டுக் கொண்டிருந்தார்கள்.

அந்தச் சமயம் பார்த்து ஏரிக்குள் தன் தோழிகளோடு படகில் போய்க் கொண்டிருந்த பாரதி, சத்தியமூர்த்தி உட்கார்ந்திருந்த பக்கமாகப் படகைக் கொணர்ந்து நிறுத்திக் கொண்டு, "சார்! உங்களைத்தானே கூப்பிடுகிறேன்.. படகில் ஒரு ரவுண்டு சுற்றலாம் வருகிறீர்களா?" என்று இரைந்து சிரித்துக் கொண்டே கேட்டது அவனுக்குப் பிடிக்கவில்லை. தான் சுவாரஸ்யமாக ஈடுபட்டுப் பேசிக் கொண்டிருப்பதை அவள் அவமதிப்பதாக எண்ணிய சத்தியமூர்த்தி அவளையும் அவள் தோழிகளையும், 'சர்' என்று நீரைக் கிழித்துக் கொண்டு வந்து நிற்கும் விசைப் படகையும் முற்றிலும் கவனியாதது போலவே பராமுகமாக இருந்து விட்டான். (தொடரும்)

# உஜ்ஜயினி மகாகாளர்

தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்

"அதோ! வாரும் பிள்ளாய்! மகா ராஜாதிராஜனான விக்கிரமாதித்தனும் அவனது மதிமூகி மந்திரியுமான பட்டியும், இரண்டாயிர வருஷ காலம் இருந்து அரசாண்ட உஜ்ஜயினிப் பட்டணம் இதுதான். இங்குதான் பொன்னாலும், மணியாலும், முத்தாலும், பவளத்தாலும் அலங்கரிக்கப்பட்டதும், முப்பத்திரண்டு மோகனப் பதுமைகளாலும் சிறப்பிக்கப்பட்டதுமான அரியாசனம் இருக்கிறது. அந்த அரியாசனத்தில் வீற்றிருந்த குறைவற்ற புகழ் உள்ள குணாளன், காடாறு மாதம், நாடாறு மாதம் என இருந்து நாடு காத்த கோமகன், நான்கு வேதம், ஆறு சாஸ்திரம் பதினெண் புராணம், அறுபத்து நான்கு கலைகள், தொண்ணூற்றாறு தத்துவங்கள் எல்லாவற்றையும் கற்றுணர்ந்த மேதை, கூடு விட்டுக் கூடு பாயும் வித்தை, இந்திர ஜாலம், மகேந்திர ஜாலம் முதலிய ஜால வித்தைகள், காயசித்தி, அட்டமாசித்தி முதலிய சித்தி வித்தைகளையெல்லாம் கற்று, ஐம்பத்தாறு தேச ராஜாக்களையும் அடிமை கொண்டு வாழ்ந்த விக்கிரமாதித்தனைக் காணவா வருகிறாய்? அந்த மகாராஜனைப் பார்ப்பதற்கு முன் என்னை அறிமுகம் செய்து கொள்ள வேண்டாமா?" என்று கேட்டுக் கொண்டே வேதாளம் ஒன்று என் முன் வந்தது. என்னையா? கனவு கண்டீரா? அல்லது சித்தக் கோளாறு? என்றுதானே நினைக்கிறீர்கள்? இல்லை, நல்ல நினைவோடேதான் சொல்கிறேன். எனக்கு மட்டுமல்ல, இந்த உஜ்ஜயினி பட்டணம் செல்லும் அன்பர்களையெல்லாம் இப்படி வேதாளம் வரவேற்கும், கற்பனை உலகத்தில்தான். ஆம், அந்த விக்கிரமாதித்தன், பட்டி, வேதாளம் எல்லாம் இருந்து அரசாண்ட உஜ்ஜயினி பட்டணத்துக்கே செல்கிறோம் நாம் இன்று.

உஜ்ஜயினி செல்வதற்கு, பம்பாயிலிருந்து ஆக்ரா செல்லும் ரயிலில் ஏற வேணும். நாக்டா ஜங்ஷனில் இறங்கி ரயில் மாறி உஜ்ஜயினி சென்று வரலாம். இல்லை, சென்னையிலிருந்தே புறப்படுவதானால் தில்லி செல்லும் கிராண்ட் டிரங்க் எக்ஸ்பிரஸில் ஏறி போபால் ஜங்ஷனில் இறங்கி வண்டி மாறி உஜ்ஜயினி போய்ச் சேரலாம். இல்லை, காரிலேயே வட இந்தியா சுற்றுப் பிரயாணம் செய்பவர்களாக இருந்தால், அஜந்தாவிலிருந்து ஜாங்ஜாங்கன் போய், அங்கிருந்து இந்தோர் வந்து, அங்கு ஓரிரவு தங்கிச் சிரம பரிகாரம் செய்துகொண்டு அங்கிருந்து காரிலேயே நேர்வடக்கே முப்பத்திமூன்று மைல் சென்றாலும் உஜ்ஜயினி வந்து சேரலாம்.

உஜ்ஜயினி ஒரு பெரிய நகரம். அதன் ஜனத் தொகை ஆறு லட்சம். இன்று பொலிவிழந்திருந்தாலும், அன்று மிகவும் பிரசித்தி அடைந்த பட்டணமாக அல்லவா இருந்திருக்கிறது. இந்நகரின் சரித்திர ஏடுகளைப் புரட்டினால் எத்தனை எத்தனை கதைகளையோ அவை கூறும். விக்கிரமாதித்தன் காலத்தில் மாளவ நாட்டின் தலைநகரமாக விளங்கியிருக்கிறது; கி. மு. ஆறு முதல் நாலாம் நூற்றாண்டு வரை ஆம், கிட்டத்தட்ட இரண்டாயிரத்தைந்நூறு வருஷங்களுக்கு முன், இது அவந்தி நாட்டின் தலைநகரமாக இருந்திருக்கிறது. வடமொழி இலக்கியங்களிலும், தமிழ்க் காப்பியங்களான சிலப்பதிகாரம், யசோதர காவியம், உதயணன் பெருங் கதை என்னும் நூல்களிலும் இந்நகர வர்ணனை காணப்படுகிறது. பெருங் கதையில் பிரச்சோதனனுடைய ராஜதானியாக இந்த அவந்தி கூறப்படுகிறது. இங்கு நடந்த நீர் விழாவைப் பெருங் கதை சிறப்பாகக் கூறுகிறது. உதயணன் வஞ்சனையால் சிறையிலிருந்தது முதலாக வாசவதத்தையைத்



"நல்லகாலம் நான் தமிழ்நாட்டில் பிறந்தேன். ஜெர்மனியில் பிறந்திருந்தால் தவிக்கப் போயிருப்பேன்!"

"ஏண்டா?"

"ஏன்னா, எனக்கு ஜெர்மன் பாஷை பேசத் தெரியாதே!"

யானை மீது ஏற்றிக் கொண்டு சென்றது வரையில் உள்ள நிகழ்ச்சிகள் எல்லாம் இங்குதான் நடந்திருக்கின்றன. படை முதலிய அரண்களாலும், சிற்பச் செல்வங்களினாலும் செல்வ நிறைவினாலும் மேம்பட்டிருந்தது என்றும், அகநகர், புறநகர் என்று இரண்டு பிரிவாக இந்நகர் இருந்ததென்றும் இந்நகர மக்கள் முருகக் கடவுளை வழிபட்டார்கள் என்றும் பெருங்கதை கூறுகிறது.

ஆனால் இன்றோ தெருக்கள் எல்லாம் அசுத்தமாயும், வீடுகள் எல்லாம் பொலிவிழந்துமே காணப்படுகின்றன. நாம் இங்கு வந்தது தெருக்களையும், வீடுகளையும் காண்பதற்கல்லவே. முக்தி தரும் நகரங்கள் ஏழில் அவந்தியும் ஒன்று என்று படித்திருக்கிறோமே. ஆதலால் இங்குள்ள கோயில்களைக் காண அல்லவா வந்திருக்கிறோம்? ஆதலால் காரை நேரே மேற்கு நோக்கிச் செலுத்தி உஜ்ஜயினி மகா காளர் கோயில் வாயிலுக்கே செல்லலாம். விக்கிரமாதித்தன் கதையில் விக்கிரமாதித்தனுக்கு அருள் புரிந்தவள் ஒரு மகா காளி என்று படித்திருக்கிறேன். அத்துடன் எங்கள் திருநெல்வேலியில், உஜ்ஜயினி மகாகாளி என்னும் காளி கோயில் ஒன்றும் எங்கள் தெருவை அடுத்து இருக்கிறது. ஆதலால் உஜ்ஜயினியின் பிரதான தெய்வம் காளி என்றே எண்ணிக் கொண்டிருந்தேன். ஆனால், அங்கு சென்று பார்த்தால் அந்நகரின் பிரதான தெய்வம் மகா காளேசுவரர்தான் என்று கண்டேன். ஆகவே, நாம் முதலில் அம்மகா காளர் கோயிலுக்குச் செல்லலாம். கோயில் விஸ்தாரமான வெளிப் பிராகாரங்களுடன் அமைந்த பெரிய கோயில்தான். கோயிலின் பிரதான வாயில் வடக்கு நோக்கியிருக்கிறது. அதில் நுழைந்ததும் ஒரு பெரிய வராந்தா இருக்கிறது. அங்குதான் ஆதி கோயிலின் சிதைந்த சிற்பங்கள் பலவும் சேகரித்து வைக்கப்பட்டிருக்கின்றன: எல்லாம் கல்லில் செதுக்கிய சிற்பங்களாயினும் காலிழந்தும், தலையிழந்தும் கிடக்கும். இடை இடையே ஒன்றிரண்டு சிதையாமல் முழு வடிவுடனும் இருக்கும். இச்சிற்ப வடிவங்கள் சிறந்த அழகு வாய்ந்தவை என்று கூற இயலாது. ஆதலால் விறுவிறு என்று சுற்றிப் பார்த்து விட்டுக் கோயிலுக்கு நடுநாயகமாக இருக்கும் மகா காளர் சந்நிதிக்கே வந்து சேரலாம். இங்கு கோயில் வாயிலில் நீலகண்டேசுவரர் இருக்கிறார். இம்மகா காளர் கோயில் இந்தியாவில் உள்ள பன்னிரண்டு ஜோதிர் லிங்கங்களில் ஒன்று. இக்கோயில் ஐந்து அடுக்குகள் கொண்டது. மூன்று அடுக்குகளில் மூன்று லிங்க வடிவங்கள் இருக்கின்றன. பூமி மட்டத்துக்கு அடியில் இருப்பவர்தான் மகாகாளர். அவரே ஜோதிர் லிங்கர். படிகளின் வழியாய் இறங்கியே அவர் சந்நிதிக்குச் செல்ல வேணும். அங்கு எப்போதும் இருள் சூழ்ந்திருப்பதால் விளக்கு எரிந்து கொண்டே இருக்கும். அந்த மகா காளர் வழிபாட்டில் ஓர் அதிசயம், அவருக்குச் சமர்ப்பித்த எந்தப் பொருளும் நிர்மால்யம் ஆவதில்லை. அவற்றை எடுத்துத் திரும்பவும் அவருக்கே சமர்ப்பிக்கலாம். நாம் பூமாலை வாங்கிச் சென்றிருந்தால் அதை அவருக்கு அணிவித்துக் கற்பூர ஆரத்தி பண்ணி வணங்கி விட்டுத் திரும்பலாம். அவருக்கு மேலே பூமி மட்டத்திலே இருப்பவர்தான் ஓம்காரேசுவரர். அவருக்கு மேலே மூன்றாவது மாடியில் இருப்பவர்தான் நாகேசுவரர். எல்லாரும் லிங்கத் திருவடிவிலேயே இருக்கிறார்கள். இந்த மகாகாளர் இங்கு கோயில் கொண்டிருப்பதற்கு ஒரு கதை உண்டு. ஆதியில் அவந்தி நகரில் ஓர் அந்தணர் இருந்திருக்கிறார். பக்கத்தில் உள்ள மலைப் பிரதேசத்தில் தூஷணன் என்று ஒரு வேதாளம் இருந்திருக்கிறது. அது மக்களை மிகவும் கஷ்டப்படுத்தியிருக்கிறது. மக்கள் எல்லாம் அங்கிருந்த அந்தணரிடம் வந்து முறையிட்டிருக்கின்றனர். அந்தணர் பெரிய யாகம் ஒன்றைச் செய்து சிவனை நினைந்து வணங்கியிருக்கிறார். அவரது தபோவனத்தில் பூமியே வெடித்து மகா காளர் தோன்றியிருக்கிறார். தூஷணன் என்னும் வேதாளத்தையும் வதம் செய்திருக்கிறார். பின்னர் அந்த அந்தணர் வேண்டிக் கொண்டபடியே அங்கேயே கோயில் கொண்டிருக்கிறார். பூமி வெடித்துத் தோன்றியதனால்தான் அவர் இன்னும் பூமிக்கடியிலேயே வாழ்ந்து வருகிறார். இம்மகா காளர் கோயிலுக்குத் தென்புறம் ஒரு குளம் இருக்கிறது. நல்ல படிக்கட்டுகள் எல்லாம் கட்டி வைத்திருந்தாலும் தண்ணீர் சுத்தமாயில்லாமல் பாசி பிடித்தே கிடக்கிறது. இதனையே கோடிதீர்த்தக் குளம் என்கின்றனர்.

இந்தத் தீர்த்த மகிமையைப் பற்றியும் ஒரு கதை. இராவண யுத்தம் முடிந்து அயோத்தி திரும்பிய ராமனுக்குப் பட்டாபிஷேக ஏற்பாடுகள் நடக்கின்றன. சப்த தீர்த்தங்களிலிருந்தும் தீர்த்தம் கொண்டு வரும் பணியை அநுமனிடம் ஒப்புவிக்கிறார்கள். அவந்தியிலுள்ள ஸிப்ரா நதியில் தீர்த்தம் எடுக்க வருகிறான் அநுமன். அந்த ஆற்றங்

அருணகிரி விலாஸ்




சீயக்காய் பவுடர்

ARUNAGIRI VILAS SOAP NUT POWDER, KARAIKUDI.

---

tik-20

டிக்-20

மூட்டைப்பூச்சிகளைக் கொல்லுகிறது





டாடா-பைஸன் தயாரிப்பு

**புதியது**

# ப்ரோடெக்ஸ் ஒரு சர்வ-காரிய டால்க். அது குடும்பத்தினர் அனைவருக்கும் மிகச்சிறந்தது.







ப்ரோடெக்ஸ் ஒரு உயர்ந்த ரக, மனோரம்மிய நறுமணமுடைய, சர்வ-காரிய டால்க். எல்லாக் குடும்பத்தினருக்கும், குளித்தபிறகும், கோடைக்காலத்தில் குளிர்ச்சிக்கும் மிகச் சிறந்தது. ப்ரோடெக்ஸ் வாங்குங்கள்-மிக மிகப்பெரிய டப்பா-மிகமிகக் குறைந்த விலை.

## ப்ரோடெக்ஸ்

ஆல்-பர்ப்பஸ் டால்கம் பௌடர்

PTP-G-7-TAM.

கரையில் காகபுஜண்டி ரிஷி என்பவர் தவம் செய்து கொண்டிருக்கிறார். அநுமனது வரவால் அவரது தவம் கலைகிறது. அவரது தவ வலிமையால் இங்குள்ள தீர்த்தத்தை எடுத்துச் செல்ல இயலவில்லை அநுமனுக்கு. பின்னர் அநுமன் அந்த ரிஷியைப் பிரார்த்திக்க அந்த முனிவரும் அநுமன் எடுத்து வந்திருக்கும் மற்றத் தீர்த்தங்களில் கொஞ்சம் கொஞ்சம் அங்கே விடும்படி சொல்கிறார். அப்படியே செய்கிறான் அநுமனும். அதன்பின்தான் இங்குள்ள தீர்த்தத்தை எடுத்துச் செல்ல முடிந்திருக்கிறது அநுமனால். ராம பட்டாபிஷேகத்துக்கென்று எடுத்துச் சென்ற சப்த தீர்த்தங்களும் இங்கே ஒருங்குசேர்ந்த காரணத்தால் இந்தத் தீர்த்த கட்டம் பிரசித்தி அடைந்திருக்கிறது. சரும வியாதி உள்ளவர்கள் இதில் மூழ்கி எழுந்தால் அவர்களது வியாதி தீர்கிறது என்கின்றனர். இக்குளத்தின் மேலக் கோடியில் ராமர் சீதாலக்ஷ்மண சமேதராக எழுந்தருளியிருக்கிறார். அவருக்குப் பின்னால் அவந்திகா தேவியும் எழுந்தருளியிருக்கிறாள். குளத்தைச் சுற்றித் தரும சாலை கட்டி வைத்திருக்கிறார்கள். இக்குளத்துக்குப் படிக்கட்டுகள் தரும சாலை எல்லாம் கட்டியவர் மாதவ ராவ், விநாயக்ராவ் பேஷ்வா என்பவர்கள். மகா காளரது பழைய கோயிலைப் புதுப்பித்து அத்துடன் கூடிய புதிய கோயிலையும் கட்டியவர் ராமச்சந்திரா பேஷ்வா என்று சரித்திர ஏடுகள் பேசுகின்றன. ஆம், அல்டாமிஷ் என்னும் மகம்மதிய மன்னன் கோயிலை இடித்துத் தரை மட்டமாக்கி யிருக்கிறான். இன்று இருப்பது ராமச்சந்திர பேஷ்வா கட்டிய கோயிலே.

மகாகாளர் கோயிலை விட்டு வெளியே வந்து மேல வீதியில் சென்றால் அங்கு ஒரு விநாயகர் கோயில். மதுரை முக்குறுணிப் பிள்ளையாரைப் போல் பெரியதொரு வடிவிலே பிள்ளையாரைச் சுதையிலே அமைத்து வண்ணங்களையெல்லாம் பூசி யிருக்கிறார்கள். இக்கோயிலில் கண்டெலிகள் பல அங்குமிங்கும் ஓடிக் கொண்டே இருக்கின்றன. மகா காளரையும் அவரது சீமந்த புத்திரர் விநாயகரையும் வணங்கிய பின்னும் நம் உள்ளத்தின் அடித் தளத்தில் ஒரு குறை இருந்து கொண்டிருக்கும். ஆமாம். இந்த விக்கிரமாதித்த மகாராஜனுக்கு அருள் புரிந்த காளி கோயில் இன்று அங்கு இல்லாமல் இருக்குமா என்று எண்ணுவோம். அந்தக் காளியையே ஹர சித்தி தேவி என்று அழைக்கின்றனர். அக்கோயில் மகாகாளர் கோயிலுக்குத் தென் மேற்கே ஒரு மைல் தூரத்தில் இருக்கிறது. ஒரு நாள் சிவபெருமானும் காளி தேவியும் உடன் இருந்து உல்லாசமாகச் சொக்கட்டான் ஆடிக் கொண்டிருந்திருக்கின்றனர். அப்பொழுது நந்தி பெருமானை வாயில் காவலுக்கு நிறுத்தியிருக்கிறார். சண்டன் பிரசண்டன் என்ற இரண்டு அசுரர்கள் அங்கு வந்து நந்தியைத் தாக்கிச் சிவபெருமானும் காளியும் ஆடிக்கொண்டிருந்த ஆட்டத்துக்கு இடையூறு செய்திருக்கின்றனர். சிவபெருமான் வேண்டிக் கொண்டபடி காளியே அவ்வரக்கர்களை வதம் செய்திருக்கிறாள். ஹரனுடைய ஏவலால் அரக்கரை வதம் செய்த சித்தியை ஹர சித்தி என்றே அழைத்திருக்கின்றனர். இந்த ஹரசித்திதான் விக்கிரமாதித்தனது வழிபடு தெய்வம். அவனுக்கு எல்லா சக்திகளையும் அருளியவள். இக்கோயில் வாயிலில் இரண்டு தீபஸ்தம்பங்கள் இருக்கின்றன. கோயில் பிராகாரத்தில் சித்தவடம் என்னும் ஆலமரம் ஒன்றும் இருக்கிறது.



குட்டுக்காரர் : என்னைப் பார்த்து 'யாரு தெரியவில்லையே' என்கிறீரே! நான் உங்க வீட்டுக்கெதிரில் பதினைந்து வருஷமா சலூன் வச்சு நடத்தின்டிருந்தவன் ஐயா!

இந்த உஜ்ஜயினியைக் கிருஷ்ண பரமாத்மாவின் வரலாற்றோடு தொடர்புபடுத்தி ஒரு கதையும் இங்கு வழங்குகின்றது. கிருஷ்ணன், பலராமன், சுதாமர் மூவரும் சாந்தீப முனிவரிடம் குருகுல வாசம் செய்திருக்கின்றனர். அந்தச் சாந்தீப முனிவரின் ஆசிரமம் இந்த உஜ்ஜயினியில்தான் இருந்திருக்கிறது. கிருஷ்ணன் குருகுல வாசம் வருவதற்கு முன்னரே சாந்தீப முனிவரின் குமாரன் கடலில் விழுந்து மூழ்கி இறந்து போயிருக்கிறான். பஞ்சஜனன் என்ற அசுரனே அவனைக் கொண்டு சென்றிருக்கிறான். இப்படிச் சாந்தீப முனிவரின் மகன் இறந்து பன்னிரண்டு ஆண்டுகள் கழிந்திருக்கின்றன. கிருஷ்ணன் குருகுல வாசம் முடிந்து தன் ஊர் திரும்பும் போது என்ன குருதட்சிணையாக வழங்குவது என்று எண்ணியிருக்கிறான். முனிவர் தம் மகனைக் கொணர்ந்து கொடுக்கும்படி வேண்டியிருக்கிறார். அவர் விரும்பியபடியே கிருஷ்ணன் கடலுள் புகுந்து பஞ்சஜனன் என்ற அசுரனைக் கொன்று அவனையே ஒரு சங்காக்கி அச்சங்கால் வெற்றியை ஊதிக் கொண்டே திரும்பி முனிவரின் மகனைக் கொணர்ந்திருக்கிறான். அப்படி பஞ்சஜனனையே சங்காகக் கொண்டது காரணமாகவே பாஞ்ச ஜன்யம் என்னும் சங்கும் என்றும் நிரந்தரமாய்க் கிருஷ்ணன் கையில் இருந்து வருவதாயிற்று.

அட்டைப்படக் கதை



# இயற்கை வென்றது

எஸ். வி. எஸ்.

அந்த வீட்டுக்குள் நுழைந்ததும் நுழையாததுமாக "வாங்கோ, வாங்கோ மாமா! இப்பவாவது வழி தெரிந்ததா?" என்ற பதினேழு வயது மதிக்கத் தக்க கட்டிளம் காரிகை டைரக்டர் கோபாலனை வரவேற்றாள்.

"யார் இது? உஷாவா நீ?" என்று வியப்புடன் கேட்டார் கோபாலன்.

"ஆமாம் மாமா! உஷாவேதான். அதற்குள் என்னை மறந்து விட்டீர்களா?" என்றாள் அந்தப் பெண்.

"நான் இந்தப் பக்கம் வந்து கிட்டத்தட்ட மூன்று வருஷங்களாகிவிட்டதே அம்மா. அப்போது நீ சின்னஞ்சிறு பெண்ணாக இருந்தாய். இப்பொழுது நீ எப்படி வளர்ந்துவிட்டாய்? அடையாளமே தெரியவில்லையே... அப்பா இருக்கிறாரா?" என்றார்.

"ஓ! இருக்கிறார். கூப்பிடுகிறேன்" என்று சொல்லிவிட்டு உள்ளே ஓடினாள்.

உஷாவைப் பார்த்ததிலிருந்து இனம் புரியாத ஓர் எண்ணம் பளிச்சிட்டு, சிந்தனையைக் கிளறலாயிற்று. இந்தப் பெண்ணினுடைய முக ஜாடை யாரையோ நினைவு படுத்துகிறதே என்று யோசிக்கலானார்.

அதற்குள் அவர் நண்பர் திருவேங்கடம் தம் மகள் உஷாவுடன் கோபாலன் உட்கார்ந்திருந்த அறைக்கு, "என்னப்பா ஊரிலே தான் இருக்கிறாயா?...?" என்று கேட்டுக் கொண்டே வந்தார்.

"ஏன், இந்த உலகத்திலேதான் இருக்கிறாயா என்று நீ கேட்டால் கூட ஆச்சரியப்பட மாட்டேன்; வருத்தமும் படமாட்டேன். நான் என்ன செய்வது? உன்னைப் பார்க்க வர வேண்டும், வர வேண்டும் என்ற துடிப்புத்தான். ஆனால் இந்தச் சினிமா உலகில் மாட்டிக் கொண்டு எங்கே ஓர் ஊரில் ஓர் இடத்தில் குறியாக இருக்க முடிகிறது? ஊர் ஊராகச் சுற்றிக் கொண்டிருக்கிறேன். இன்றைக்கு எப்படியும் உன்னைப் பார்த்துச் சற்று நேரம் சினிமாக் குப்பையை மறந்து வேறு உலகத்தில் மனதை ஓடவிட வேண்டும் என்றுதான் இங்கே வந்தேன்" என்றார் கோபாலன்.

"சினிமா உலகை மறக்கணும்னு நீங்கள் கதைகள் எழுதப்படாதோ? முன்னே எவ்வளவு கதைகள் எழுதுவீர்கள். இப்ப ஒரு பத்திரிகையிலும் உங்கள் கதைகள் வருவதில்லையே, ஏன் மாமா?" என்றாள் உஷா.

கோபாலனுக்குத் தூக்கி வாரிப் போட்டது. "நீ என் கதைகளை அவ்வளவு படித்திருக்கிறாயா என்ன, அப்படியே? நான் இப்போது கதை எழுதிக் கிட்டத்தட்ட மூன்று வருஷங்களாகி விட்டனவே" என்றார்.

"எல்லாம் படித்திருக்கிறேன். உங்கள் கதாபாத்திரங்கள் எல்லாம் கூட ஞாபகம் இருக்கின்றன. சொல்லட்டுமா?"

"உஷா! நிறுத்து. அவன் சினிமா, கதை எல்லாம் மறந்து போகணும்னு வந்திருக்கிறான். அவனிடம் அவன் எழுதிய கதையையே சொல்லி 'போர்' அடிக்காதே!" என்றார் திருவேங்கடம்.

"அப்படியல்ல அப்பா. அவர் பல ஊர்களுக்குப் போகிறார். பலதரப்பட்ட மக்களைப் பார்க்கிறார். பலதரப்பட்ட வாழ்க்கை அனுபவங்களைக் காண்கிறார். அவற்றையெல்லாம் கலையாகச் சொல்லும் திறம் படைத்த அவர் சொல்ல வேண்டியது, எழுத வேண்டியது அவர் கடமை என்று சொல்ல வந்தேன்" என்றாள் உமா.

'கதை எழுதுவது தன் கடமை' என்று யாரும் கோபாலனுக்கு உபதேசம் செய்தது கிடையாது. உஷாவின் இந்தப் புதுக் கோணம் அவரை மெய்சிலிர்க்க வைத்து விட்டது.

இதைச் சொன்ன உஷா அடுத்த கணம் அங்கு நிற்கவில்லை; வெளியேறி விட்டாள். அன்று இரவு வெகு நேரத்துக்குப் பிறகு தம் அறைக்குத் திரும்பிய கோபாலின் உள்ளத்தில் உஷாவின் மொழிகள் எதிரொலித்துக்கொண்டே இருந்தன.

இரவு இரண்டு மணிக்கு டைரக்டர் கோபாலன் தம் படுக்கையிலிருந்து அலறிப் புடைத்துக்கொண்டு எழுந்தார். துர்ச்சொப்பனம் கண்டு விழித்தவர் போல் முகம் வெளிறிக் கிடந்தது. ''சுந்தரியின் முகத்தையல்லவா உஷாவின் முகம் ஒத்திருக்கிறது!'' என்று சொல்லிக்கொண்டே படுக்கையை விட்டு எழுந்தார். அருகில் இருந்த மேஜை மேலிருந்த கூஜாவிலிருந்து ஒரு டம்ளர் தண்ணீர் எடுத்துக் குடித்தார். மீண்டும் படுக்கையில் படுத்துக் கொண்டார். தூக்கம் வந்தால்தானே? சுந்தரியின் வாழ்க்கையைப் பற்றிய நினைவுகளே மீண்டும் மீண்டும் அவர் மனத்தில் சுழன்று வந்தன.

சுந்தரி சிறுமியாக இருந்தபோது, பள்ளிக்கூட ஆண்டுவிழா நாடகங்களிலும் நடனங்களிலும் பங்கு எடுத்துக் கொள்வாள். அப்போதெல்லாம் அவள் காண்பித்த நடிப்புத் திறமையைக் கண்டு ஊரே அதிசயப்பட்டது. பட்டிக்காடான ஊர்களில் இப்படியொரு காட்சியைக் கண்டால் ஊர் ஜனங்கள் சர்வ சாதாரணமாக, ''அவள் சினிமாவில் சேர்ந்து நடித்தால் இப்பொழுதுள்ள அத்தனை நடிகைகளும் பின்வாங்க வேண்டியதுதான்!'' என்று பேசத் தொடங்குவார்கள். அப்படியேதான் சுந்தரியைப் பற்றியும் பேசினார்கள். இது நடிப்புக்கலையில் அவளுக்கு இருந்த ஆர்வத்தை இன்னும் கொஞ்சம் அதிகமாக்கிற்று.

அந்த வருஷம் ஆண்டு விழாவின்போது சுந்தரியின் தந்தையாரின் நண்பர் கனகசுந்தரம் வந்திருந்தார். அவர் சென்னையில் பிரபல வியாபாரி. வியாபார விஷயமாகச் சுந்தரியின் தந்தையைக் காண வந்தவர் பள்ளி ஆண்டு விழாவுக்கும் அழைக்கப்பட்டார். ஆண்டுவிழாவில் சுந்தரியின் நடிப்புத் திறனைப் பார்த்து அப்படியே பிரமித்து உட்கார்ந்து விட்டார். அவர் புறப்படும் போது சுந்தரியின் தந்தை ஒரு வேண்டுகோள் விடுத்தார். ''உங்களுக்குச் சென்னையில் எவ்வளவோ செல்வாக்கு. என் மகள் சுந்தரி சினிமாவில் சேர்ந்து நடிக்க வேண்டும். தன் நடிப்புக் கலைக்கு அதிக வாய்ப்புக்கள் ஏற்பட வேண்டும் என்று விரும்புகிறாள். அதற்குத் தாங்கள்தான் உதவி செய்ய வேண்டும்!'' என்று வேண்டிக் கொண்டார்.

''உங்கள் மகளுக்கு அபாரமான நடிப்புத் திறமை இருக்கிறதென்பது வாஸ்தவம். ஆனால் அவளைச் சினிமாவில் சேர்க்க வேண்டும் என்று ஏன் விரும்புகிறீர்கள்? அந்த உலகம் ஒரே சேறும் சகதியும் நிரம்பியது. வேண்டாம்!'' என்றார் கனகசுந்தரம்.

''சேற்றில் செந்தாமரை மலர்வதில்லையா? அந்தச் செந்தாமரையில் சேறு ஒட்டிக் கொண்டா இருக்கிறது?'' என்றார்.

''இப்படிப் பேசினால் நான் என்ன சொல்வதற்கு இருக்கிறது?'' என்றார் கனகசுந்தரம்.

''அவளுடைய நடிப்புக் கலை குடத்துள் இட்ட விளக்காக அமைந்துவிடக் கூடாது. குன்றின் மேலிட்ட தீபமாக விளங்கச் செய்ய முயற்சி எடுத்துக் கொள்ள வேண்டியது தந்தையின் கடமை என்றே நினைக்கிறேன். அதனால்தான் தங்களை இவ்வளவு தூரம் வற்புறுத்துகிறேன்'' என்றார் சுந்தரியின் தந்தை.

''பார்ப்போம்'' என்று சொல்லி விட்டு நகர்ந்தார் கனகசுந்தரம்.

கீ கீ கீ

''என்ன ராகவன், இன்றைக்கு உன் மூளையைக் குடையும் விஷயம் என்ன?'' என்றார் திருவாளர் கனகசுந்தரம்.

இப்போது நீங்கள் சற்று ராகவனைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டும். ஸ்ரீமான் கனகசுந்தரம் தமது வியாபார விஷயங்களை யெல்லாம் முடித்துக் கொண்டு வீட்டுக்கு வந்தாரானால் பக்கத்து வீட்டு மாடியில் அறை எடுத்துக்கொண்டு குடியிருக்கும் ராகவனுக்குச் சொல்லி அனுப்புவார்.

ராகவன் கல்லூரியில் முதலாவதாகத் தேறிய புத்திகூர்மையுள்ள இளைஞன். எப்போது பார்த்தாலும் புத்தகமும் கையுமாக இருப்பான். புஸ்தகம் இல்லாதபோது சிந்தனையில் ஆழ்ந்திருப்பான். இல்லை, எழுதிக் கொண்டிருப்பான். குளித்தல் — உண்ணுதல்— நல்ல ஆடை அணிந்துகொள்ளுதல், நல்ல படி தலை வாரி சிங்காரித்துக் கொள்ளுதல் இவை எதிலும் பற்றில்லாதவன். பல விஷயங்களைப் பற்றி விசித்திரமான கருத்துக்கள் கொண்டவன். இதனால் இவனைச் சிலர் பைத்தியம் என்று ஒதுக்குவார்கள். ஆனால் ஸ்ரீமான் கனகசுந்தரம் மட்டும் தமக்கு ஒழிந்த நேரங்களில் ராகவனை அழைப்பித்து அவனது திடுக்கிட வைக்கும் கருத்துக்களைக் கேட்பதில் தனிஆர்வம் காட்டி வந்தார்.

ஒரு முறை ''என்ன ராகவன், சாப்பிட்டாயா?'' என்று ஸ்ரீ கனகசுந்தரம் கேட்டார்.

அதற்கு ராகவன், ''முந்தாநாள் நான் ஏதோ எழுதிக் கொண்டிருந்தேன். திடீர் என்று எனக்குப் பசித்தது. சிறுகுடல் பெருங்குடலைக் கவ்வித் தின்று விடும்படியான பசி. பார்த்தேன். இது இயற்கையின் சேஷ்டை. இந்தச் சேஷ்டைக்கு இடம் கொடுக்கக் கூடாது. பணிந்துவிடக் கூடாது என்று பல்லைக் கடித்துக்கொண்டு அரை மணி நேரம் எழுதிக் கொண்டிருந்தேன். பசி அடங்கிவிட்டது. அவ்வளவுதான் இரண்டு நாளாகிறது. நான் சாப்பிடவே யில்லை!'' என்றான்.

''லட்சணம்தான் போ!''

''இல்லை சார், மனிதனை இயற்கை ஒவ்வொரு தடவையும் ஆட்கொண்டு தன் வசப்படுத்திக் கொள்ளப் பார்க்கிறது. இயற்கை, மனிதனைச் சாதாரண விலங்காகவும், பசு, பட்சி, மரமாகவும் கருதி நடத்தப் பார்க்கிறது. விலங்கினங்களை ஆட்கொள்ளும் பசி, தாகம் முதலிய உணர்ச்சிகளை நமக்கு ஊட்டி, மனிதன் அறிவால் மனத்தால் உயர்வதைத் தடுக்கப் பார்க்கிறது! மனிதன் அதற்குப் பணிந்து போகக் கூடாது. அதனால்தான் இயற்கையிடம், 'நீ பிரயோகிக்கும் பசி என்னும் ஆயுதம் என்னை ஒன்றும் செய்யாது' என்பதைக் காண்பித்தேன்'' என்றான்.

''சரிதான் போ. இப்போது ஏதாகிலும் கொண்டு வரச்சொல்கிறேன், சாப்பிடுகிறாயா?''





"நமது வீட்டு வாடகையை என் தந்தை அனுப்பி விடுகிறார். என் மாமா சாப்பாட்டுச் செலவுக்குப் பணம் அனுப்பி விடுகிறார். என் சித்தப்பா மற்றச் செலவுகளுக்குப் பணம் அனுப்புகிறார். இன்னும் எதைப்பற்றி நீங்கள் கவலைப்பட்டுக் கொண்டிருக்கிறீர்கள்?"

"உங்கள் பெரியப்பா ஏன் நமக்குப் பணம் அனுப்புவதில்லை என்று யோசித்துக் கொண்டிருந்தேன்!"

"பேஷாக! எனக்குப் போராட்டம் எல்லாம் இயற்கையோடேயே தவிர மனிதப் பண்புடன் அல்ல. நீங்கள் அன்புடன் கொடுக்க முன்வருவதை என்னால் எப்படி மறுக்க முடியும்? 'அன்பு வாழ்க' என்று சொல்பவன் அல்லவா நான்!" என்றான் ராகவன்.

கனககந்தரத்துக்கு ராகவன் வார்த்தைகளிலும் நடத்தையிலும் ஏதோ ஆழம் காண முடியாத பேருண்மை பொதிந்து கிடப்பதாகத் தோன்றியது. அது இன்னது என்று புரிந்துகொள்ள முடியாமல் தவித்தார். இருப்பினும் இவன் கவனிக்கப்படவேண்டிய மனிதன் என்று கருதினார்.

இன்னொரு நாள் ராகவன் ஸ்ரீ கனககந்தரத்திடம் பேசிக்கொண்டிருந்தபோது மற்றொரு கருத்தை வெளியிட்டான்.

"ஒரு பசு மாட்டையும், கன்றுக்குட்டியையும் ஒரு கொட்டிலில் போட்டு, அரை நாளுக்கு அடைத்து வையுங்கள். பிறகு ஒரு புற்கட்டைச் சற்றுத் தூரத்தில் வைத்து விட்டுப் பசியோடிருக்கும் மாட்டையும் கன்றுக்குட்டியையும் அவிழ்த்து விடுங்கள். மாடு கன்றுக்கு முன்னால் தாவிச் சென்று தின்றுவிடும். ஆனால் மனித இனத்தில், பசியோடு ஒரு குழந்தையுடன் வரும் ஒரு தாய்க்கு ஒரு கவளம் சோறு கொடுங்கள்; தாய் சோறு முழுவதையும் தன் குழந்தைக்குக் கொடுத்து விட்டுத் தான் பசியோடு கிடப்பாள். இந்தத் தியாக உணர்ச்சி, இந்தத் தாய்ப் பண்பு, மனித இனத்திலன்றி வேறெங்கும் காண இயலாது. மனிதன் இன்னும் உயர வேண்டும் என்பதற்காகவே இறைவன் ஆறாவது அறிவாகிய பகுத்தறிவையும் தியாக உணர்ச்சியையும் வைத்தான். இறைவனோடு போட்டியிட்டு இயற்கை மனிதனை விலங்காகவே வாழ வைக்க விரும்புகிறது. இந்தச் சூழ்நிலைக்குப் பணியாமல் மனிதன் தேவனாக வாழ முயல வேண்டும்!" என்றான்.

இந்தக் கருத்து அவருக்குச் சற்று விளக்கம் தந்தது. இருப்பினும் 'இவன் என்ன மனிதன்?' என்ற சந்தேகத்தை எழுப்பியது. பார்ப்பதற்குப் பைத்தியமாகத் தோன்றவில்லை. இருப்பினும் ஓர் உருப்படியான வேலை வெட்டியில்லாமல் எத்தனை நாட்கள் சிந்தனைகளிலும் கருத்துக்களிலும் காலம் கடத்திக் கொண்டிருக்க முடியும் என்ற எண்ணம் அவர் உள்ளத்தில் உறுத்திக் கொண்டிருந்தது. இதை ஒருநாள் வெளிப்படையாகவே கேட்டு விட்டார்.

"நான் என்ன வேலை செய்யக் கூடாது என்று சொல்கிறேனா — இல்லை. மனிதப் பண்பை உயர்த்த உதவக் கூடிய என் கருத்துக்களைப் பிரபலப்படுத்தக்கூடிய வாய்ப்பளிக்கும் எந்தத் தொழிலையும் செய்யத் தயாராகத்தான் இருக்கிறேன். பாரதியார் சொன்னது போல் 'நிதம் சோறு தேடித் தின்னும் வேடிக்கை மனித'னாக நான் வாழ விரும்பவில்லை. அவ்வளவுதான்" என்றான்.

* * *

ஸ்ரீ ராம்லால் சேட், ஸ்ரீ கனககந்தரம் அவர்களுடைய பங்கு வியாபாரத்தில் நெருங்கிய தொடர்பு உள்ளவர். என்றாலும் சேட்டினுடைய வியாபாரம் அத்துடன் முடிந்து விடவில்லை. பம்பாய், கல்கத்தா முதலிய நகரங்களில் பல வியாபாரங்களில் ஈடுபட்டிருப்பவர். பல கம்பெனிகளில் பங்குதாரராகவும், டைரக்டராகவும் இருப்பவர். அவருக்கு ரொம்ப நாட்களாக சினிமா உலகில் புகுந்து விளையாட வேண்டும் என்று ஆசை. இதில் முழுக்க முழுக்கத் தமது பணத்தைப் போட்டு வேடிக்கை பார்க்க விரும்பவில்லை. வேறு யாரையாவது கூட்டுச் சேர்த்துக் கொண்டு ஆரம்பிக்க விரும்பினார். அதற்குக் கனககந்தரம் செட்டியார்தான் நல்ல புள்ளி என்று சேட் கருதினார்.

ராம்லால் சேட் இவ்விஷயத்தைப் பற்றிக் கனககந்தரத்திடம் பிரஸ்தாபித்தபோது, கனககந்தரம் அப்படியே பிரமித்துப் போய் விட்டார். "சேட்! இந்த விஷயம் சம்பந்தமாக நானே உங்களிடம் கேட்க வேண்டும் என்று நினைத்தேன். என் மனசு ஏற்கனவே உங்களுக்குத் தெரிந்தாற்போல் கேட்கிறீர்களே! எனக்கு ஆச்சரியம் தாங்க முடியவில்லை" என்றார்.

"நல்ல வேளை வந்திருக்கிறது என்று அர்த்தம், செட்டியார்!" என்றார் சேட்.

"நான் சமீபத்திலே சங்கரபுரம் போயிருந்தேன். அங்கே ஒரு பள்ளிக்கூட ஆண்டுவிழாவில் ஒரு பெண் ஒரு நாடகத்தில் பங்கெடுத்துக்கொண்டு நடித்தாள். பிரமாதமாக இருந்தது. அவள் தன் கலையை விருத்தி செய்துகொள்ள வேண்டும், சினிமாவில் நடிக்க வேண்டும் என்று விரும்புவதாக அவளுடைய தகப்பனார் கூறினார். என் பக்கத்து வீட்டில் ஒரு லட்சிய இளைஞன் இருக்கிறான். அவன் பலப் பல புதுமையான கருத்துக்களை உலகறியச் செய்ய வேண்டும் என்று துடித்துக் கொண்டிருக்கிறான். அதற்குச் சினிமாதான்

வீட்டிற்கு
ஒன்று
பிரயாணத்திற்கு
ஒன்று




தயாரிப்பு லைசென்ஸ் கெ.528A பேட்ச் தே. மார்ச்/ஏப்ரல் 1963

# கால்டெக்ஸ் முதல் சிகிச்சைப் பெட்டி

மோட்டார் வைத்திருப்போர்க்கு மலிவு விலையில் கிடைக்கும்

பெட்டி ஒன்றுக்கு ரு. 2.25 மாத்திரம்
(எல்லா வரிகளும் உள்பட)

மோட்டார் ஓட்டிகளுக்கான முதல் சிகிச்சைப் பெட்டியில்: [1] ஒரு 15 கிராம் ஐ.ஸி. ஐ.யின் "ஸாவ்லான்" கிருமி நாசினி பசை ட்யூப்; [2] ஒரு ஐ. ஸி. ஐ. "ஸாவ்லான்" கிருமி நாசினி திரவம் 15 மில்லி லிடர் குப்பி; [3] நான்கு 'ஆஸ்ப்ரோ' மாத்திரைகள் (நிக்கொலஸ் ஆப் இந்தியா லிமிடெட் கம்பெனித் தயாரிப்பு); [4] ஜான்சன் அண்டு ஜான்சன் தயாரிப்பு (Band Aids) ப்ளாஸ்திரி மூன்று; [5] சுத்தம் செய்யப்பட்ட பஞ்சு ஒரு பாக்கெட்; [6] 3 மீட்டர் நீளமும் 2.5 சென்டி மீட்டர் அகலமுள்ள காஸ் பாண்டேஜ் ஒரு பாக்கெட்; ஆகியவை அடங்கியுள்ளன.



உங்களுடைய நண்பன் கால்டெக்ஸ் டீலரைக் கேட்டுப் பெற்றுக் கொள்ளுங்கள்

## பாதுகாப்புக்காக சேமியுங்கள்

CAL. FA. 4. 63. G.




உடல் வளைவுகளுக்கேற்றப்போல் அமுக்கப் பட்ட ஆசனமும், முதுகுச்சாய்மானமும் மகிழ்ச்சியூட்டும் வசதியை அளிக்கக்கூடிய உருதியான எஃகு குழாயினால் செய்யப்பட்ட உலோகப் பாகங்களெல்லாம் வாட்டி வெடுக்கும் முறையில் எனாமல் பூசப்பட்டுத் துருப் பிடிக்காமல் செய்யப்பட்ட நாற்காலியை வாங்குங்கள்.

## சிறந்த தரத்தில் அடுக்கடுக்காக

- ஒவ்வொரு உலோகப் பகுதியும் 'பாஸ்பரைஸ்' செய்யப்பட்டது. துருப்பிடிக்காமல் வாட்டி எனாமல் பூசப்பட்டது.
- ஆசனம் மற்றும் முதுகுச் சாய்மானத்தின் அமைப்பு அதிக வசதியை அளிக்கிறது.
- ஈரத் துணியைக்கொண்டே துடைத்து எளிதில் சுத்தமாக வைத்துக்கொள்ளலாம்.
- மடக்குவதற்கு விசேஷ அமைப்பு.
- வழுக்கிவிடாத, தரையைக் கீறாத ரப்பர் அடிகள் கொண்டது.
- பல்வேறு வர்ணங்களில் கிடைக்கக் கூடியது.




ஆயிரம் காலம்
ஆள்வதற்கு



*தயாரிப்போர்:*
க்ரோம் லைட் (இந்தியா) பிரைவேட் லிட்.
*பி-35 இந்தியா எக்ஸ்சேஞ்சு ப்லேஸ், கல்கத்தா-1*

தக்க சாதனம் என்று நினைத்தேன். நீங்களே என்னை முந்திக்கொண்டு வந்து விட்டீர்கள்.''

''பேஷாக அவர்களை வைத்துக்கொண்டு முதலில் 'ஸிம்பிளா' ஆரம்பிப்போம்!'' என்றார் ராம்லால் சேட்.

ஃ ஃ ஃ

'கனகராம் பிக்சர்'ஸாரின் படம் என்றால் படித்த மக்களிடையே — தரமான ரசிகர்களிடையே-நல்ல பெயர் உண்டு. கனகராம் பிக்சர்ஸாரின் படம் என்றால் சிந்தனையைக் கிளறும் நவமான கருத்திருக்கும் என்று பேச்சு எங்கும் அடிபடும். பத்திரிகைகள் தரமான விமரிசனங்கள் எழுதும். அப்படி முதல் மூன்று படங்களிலேயே இந்த நல்ல பெயரைச் சம்பாதித்து விட்டார்கள். குமாரி சுந்தரியின் உன்னதமான நடிப்பைப் பத்திரிகைகள் பத்தி பத்தியாக வர்ணித்தன. டைரக்டர் ராகவனின் லட்சியக் கருத்துக்களுக்கும் உத்திகளுக்கும் ரஸிகர்கள் புகழ்ச்சியுரைகளை அள்ளி அள்ளி விட்டனர்.

ஆனால் சினிமா ஒரு நல்ல கலை; மக்களுக்குப் புதுக்கருத்துக்களைப் போதிக்க வேண்டுமென்று வந்தவர் அல்ல ராம்லால் சேட். சினிமா ஒரு தொழில், வியாபாரம், அதில் முதலீடு செய்தால் எத்தனை சத விகிதம் லாபம் வருகிறது என்று கணக்குப் போடுவது ராம்லால் சேட் ரத்தத்தில் ஊறிப்போன விஷயம். ஆகவே பங்காளிகளுக்குள் அடிக்கடி சச்சரவு ஏற்படுவதுண்டு.

''என்ன செட்டியார்! உங்க டைரக்டர் ராகவனை வச்சி படம் எடுத்தால் நாம் திவாலாக வேண்டியதுதான். போன படத்திலே இரண்டு பெர்ஸண்ட்கூடக் கட்டலியே. ஒவ்வொருத்தன் என்னடான்னு முறம் முறமாகப் பணத்தை அள்ளறான். படம் ஒவ்வொரு ஊரிலும் ஐம்பது வாரம் ஓடுது. நூறு வாரம் ஓடுதுங்கறான். நம்ம படம், பத்து வாரம் ஓடுவதற்கு ரொம்பப் பிரயத்தனம் செய்ய வேண்டியிருக்கிறது!'' என்றார் சேட்.

''பத்து வாரம் ஓடினாலும் நம்ம படம் தரமான படம் என்று எவ்வளவு பாராட்டைச் சம்பாதித்திருக்கிறோம்...'' என்றார் கனகசுந்தரம்.

''பாராட்டு யாருக்கு ஐயா வேணும்? பணமல்லவா வேண்டும். இந்த டைரக்டர் இருக்கிறவரைக்கும் பணம் வராதய்யா. சுந்தரியம்மா நல்லாத்தான் நடிக்கிறாங்க. அதோடு கூடக் கவர்ச்சி சேர்த்தால் அல்லவா படம் ஓடும். ஒரு தரம் பார்த்தவன் இரண்டு தரம் படத்தைப் பார்ப்பான்!''

செட்டியாருக்குச் சேட் என்ன சொல்கிறார் என்பது புரிந்துவிட்டது.

''அதற்கு இந்த டைரக்டர் ராகவன் ஒரு நாளும் அனுமதிக்க மாட்டார்'' என்றார் கனகசுந்தரம்.

''அதுதான் நானும் சொல்லுகிறேன். அவர் கையிலே கமண்டலமும், காஷாய உடையையும் கொடுத்து ஸ்டுடியோவை விட்டு வெளியே அனுப்பு ஐயா. நான் நல்ல டைரக்டரைக் கொண்டு வருகிறேன்.''



''நீ சம்பளம் கட்டா விட்டால் உன்னைப் பரீட்சையில் உட்கார விட மாட்டேன்!''
''பரவாயில்லே, சார்! நான் நின்று கொண்டே பரீட்சை எழுதுகிறேன்!''

''அப்படியானால் நானும் போக வேண்டியதுதான். என்னை வெட்டி விட்டுவிடுங்கள்!'' என்றார் கனகசுந்தரம். சேட் துணுக்குற்றார்.

ஃ ஃ ஃ

நடிகை சுந்தரியின் இல்லத்தில் எப்போதும் பத்திரிகை நிருபர்கள், பட முதலாளிகள், டைரக்டர்கள் என்று மாறி மாறி வந்து போய்க்கொண்டிருப்பார்கள். அவர்கள் எல்லாரும் கனகராம் பிக்சர்ஸ் தவிர மற்ற கம்பெனிகளிலும், மற்றப் படங்களிலும் சுந்தரியைப் பதிவு செய்துகொள்ள வருவார்கள். அவர்கள் எல்லாரும் ''நீங்கள் எங்கள் படத்தில் நடியுங்கள், அதிகமாகப் பணம் தருகிறோம். அதிகமாகப் புகழும் தேடித் தருகிறோம்'' என்றெல்லாம் ஆசை காட்டினார்கள். அவள் ராகவன் அன்றி வேறு யார் டைரக்ட் செய்யும் படத்திலும் நடிக்கத் தயாராக இல்லை என்று சொல்லி வந்தாள். ஆனால் அடி மேல் அடி அடித்தால் அம்மியும் நகரும் என்பார்கள். அதுபோல் சுந்தரியும் சற்று மனம் மாறி வேறு படங்களில் நடித்தால் என்ன என்று கருதியபோது கனகராம் பிக்சர்ஸாரில் பிளவு ஏற்பட்டு வருகிறது என்ற செய்தி வந்தது. சுந்தரியும் மற்றப் படங்களில் நடிக்க ஒப்பந்தம் செய்து கொண்டாள்!

டைரக்டர் ராகவன் முகத்தில் ஏமாற்றமே தாண்டவமாடியது. சுந்தரியைக் கொண்டு மனித சிந்தனை எட்டக்கூடாத நிலையெல்லாம் எட்டிப் பிடிக்கலாம் என்று கற்பனை செய்து கொண்டிருந்தார். இதற்குள் கனகராம் பிக்சர்ஸாரிடையே ஏற்பட்ட மனஸ்தாபங்களும், சுந்தரியின் போக்கும் அவரை மிகுந்த ஏமாற்றத்தில் ஆழ்த்தி விட்டன. சுந்தரி கூடப் பண ஆசை பிடித்துக் கீழ்த்தரமான படமெடுக்கும் முதலாளிகள், டைரக்டர்கள் கையில் சிக்கிவிட்டாளே என்ற தாபம் ஏற்பட்டது. அவள் மீதுகூட ராகவனுக்கு அவ்வளவு ஆத்திரமில்லை. இயற்கை தனக்கு எதிராக எப்படிச் சதி செய்கிறது, தன்னை எப்படி வீழ்த்துகிறது என்று நினைத்து நினைத்து இயற்கை மீது சீறி விழுந்தார். 'இவற்றையெல்லாம் விடப்



**வீட்டுக்காரர்:** திருடவா பார்க்கிறாய்? மரியாதையாக எல்லாத்தையும் வைச்சுட்டு ஓடிப் போய்விடு!

**திருடன்:** நியாய அநியாயத்தைக் கொஞ்சம் கவனியுங்க. உங்க வீட்டுப் பொருளை இன்னும் நான் தொடலே. இவை பக்கத்து வீட்டுக்காரருடையவை.

---

பாமர மக்கள் உன்னத லட்சியங்களை விட மிருகத்தனமான உணர்ச்சிகளுக்கு எவ்வளவு எளிதில் பணிந்து போய் விடுகிறார்கள். 'இந்த மக்களைப் பழி தீர்க்க வேண்டும்' என்று ஆத்திரம் பொங்கி வந்தது.

ஃ ஃ ஃ

ஒரு நாள் வெகு வேகமாக ராகவன் கனகசுந்தரம் இல்லத்துக்குச் சென்றார்.

"செட்டியார்! நான் என் லட்சியங்களை மூட்டை கட்டி வைத்து விட்டேன். ராம்லால் சேட் விரும்புவது போல் நூற்றுக்கு நூற்றைம்பது சத விகிதம் லாபம் தரக்கூடிய படத்தை எடுத்துத் தருகிறேன்! இன்று மார்க்கெட்டில் சுந்தரிக்குத்தான் மவுசு. அவளைக் கொண்டே எடுத்துத் தருகிறேன்" என்றான் ராகவன்.

"என்ன நீயா? சுந்தரியை வைத்தேயா எடுத்துக் தருகிறாய்?"

"ஆம், அவளே நடிப்பை மறந்து விட்டாளே? இனி என்ன....!" என்றார் ராகவன்.

ஸ்ரீமான் கனகசுந்தரத்துக்கு அப்போது பட்டிக்காட்டுப் பெண்ணாக, முகத்தில் எவ்வித ராக விகாரங்களற்ற பேதைப் பெண்ணாகத் தோற்றமளித்த சுந்தரியின் நினைவு வந்தது. அப்போது அவளுக்குச் செய்த எச்சரிக்கையும் நினைவுக்கு வந்தது. தந்தை சொல்லிய பதில் — சேற்றில் முளைத்த செந்தாமரை - சேற்றில் விழத் தொடங்கியிருப்பதை நினைத்துப் பரிதாபப்பட்டார். அதற்கு மேலாக ராகவனின் புதுப் போக்கைக் கண்டு திடுக்கிட்டார்.

ஆனால் இவற்றையெல்லாம் தடுக்கக் கூடிய திராணி அவருக்கில்லை. அவர் சுழலில் சிக்கியவர். அவருக்கு எதிர் நீச்சல் போட்டு வெளியே வரத் தெரியாது. சுழலுடன் சுழன்று தானாக வெளியே வரவேண்டிய மனோபாவம் படைத்தவர். ஆண்டவன் செயல் எப்படி நடக்கிறதோ நடக்கட்டும் என்று மனத்தைத் தேற்றிக்கொண்டார்.

ராகவனின் மேற்பார்வையில் வெகு மும்முரமாகப் பட வேலை நடந்து வந்தது.

ஒவ்வொரு ஆயிரமடி படம் எடுக்கப்பட்டதும் 'ரஷ்' என்று படம் போட்டுப் பார்ப்பார்கள். ராம்லால்சேட் படத்தைப் பார்க்கையில் ""சபாஷ்"" என்று சொல்லிக் கொள்வார். கனகசுந்தரம் பேயறைந்தவர் போல் உட்கார்ந்திருப்பார். சுந்தரி முகத்தைப் புதைத்து விம்மி அழுதுகொண்டே வெளியேறுவாள். அடுத்த நாள் படப் பிடிப்புக்கு வரமாட்டேன் என்பாள்.

"மக்கள் — லட்சோப லட்சம் மக்கள் உன் நடிப்புக் கலையைப் பார்க்க விரும்பவில்லை. இதைத்தான் விரும்புகிறார்கள் வா, சுந்தரி" என்பார் ராகவன்.

"முடியாது."

"ஒப்பந்தப்படி வரவில்லையானால் சிறைக் கூடம்தான்" என்று சேட் மிரட்டுவார்.

'ஐயோ' என்று அலறிக்கொண்டே செட்டுக்கு வருவாள் சுந்தரி.

ஃ ஃ ஃ

படம் முடிந்து திரையிடப்படும் நாள் வந்தது. சேட் ஒரே குதூகலத்திலிருந்தார்.

"திரைப்பட உலகில் புத்தம் புதிய படைப்பு. அற்புதமான சித்திரங்கள் தந்த டைரக்டர் ராகவனின் அதிதமான கற்பனையில் உதித்த அற்புதச் சித்திரம்" என்றெல்லாம் விளம்பரம் செய்யப்பட்டிருந்தன.

பொதுமக்கள் மிக ஆவலுடன் படத்தை வெள்ளித் திரையில் பார்க்கக் காத்திருந்தார்கள்.

அன்று காலைப் பத்திரிகையில் திடுக்கிடும் செய்தி வெளியாகியிருந்தது.

**பிரபல நடிகை சுந்தரி**
**தற்கொலை செய்து கொண்டார்**

என்று கொட்டை எழுத்துக்களில் பிரசுரமாகியிருந்தது. அதனடியில் சுந்தரி எழுதி வைத்திருந்த கடிதமும் பிரசுரமாகியிருந்தது.

"கலைக்குச் சேவையாய்ச் சினிமாவில் சேர வந்தேன். என்னைக் காம உணர்ச்சி தூண்டும் பேதையாக்கிவிட்டார்கள். என்னால் இனிவாழ முடியாது" என்று குறிப்பிட்டிருந்தாள்.

டைரக்டர் ராகவனின் தற்கொலைச் செய்தி மற்றோர் இடத்தில் பிரசுரமாகியிருந்தது.

"இயற்கை உணர்ச்சிகளுக்கு அப்பாற்பட்டுத் தெய்விக உணர்ச்சிகளுக்கு மனிதன் அடிபணிய வேண்டும் என்று குறிக்கோள் கொண்டிருந்தேன். மக்கள் அதனை விரும்பவில்லை. இனி நான் ஏன் வாழ வேண்டும்?" என்று குறிப்பு எழுதி வைத்திருந்தார்.

படத்தை ஒருமுறை பார்த்த மக்கள் பன்முறை பார்க்க வருவார்கள் என்று ராம்லால் சேட் எதிர்பார்த்தது தோல்வி அடைந்தது. மக்கள் முதல் தடவையே படத்தைப் பார்க்க விரும்பவில்லை.

மக்கள் அப்படியொன்றும் தாழ்ந்து போய் விடவில்லை என்பதைக் கண்ட கனகசுந்தரம் தம் மனத்தில் ஒருவித மகிழ்ச்சியடைந்தார். அடுத்த கணம் ராகவனுக்காகவும் சுந்தரிக்காகவும் அவர் கண்களில் நீர் பெருகியது.

## திருமணம்



கல்கத்தா ஸ்ரீ கே. ஈ. வைத்யநாதன் அவர்கள் குமாரி சௌ. விசாலாக்ஷிக்கும் கல்கத்தா ஸ்ரீ என். கணபதி அய்யர் குமாரர் ராஜகோபால் என்கிற சிரஞ்சீவி G. சங்கரநாராயணன் B. Sc., A. M. I. E. T. (London) அவர்களுக்கும் 24-5-63 அன்று சென்னை மயிலாப்பூரில் திருமணம் வெகு சிறப்பாக நடைபெற்றது.

வாழ்க மணமக்கள்

# இருமலை அகற்றச்

சாப்பிடுங்கள்

## வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் | சிவப்பு லேபில்

—வெறும் மருந்துமட்டுமல்ல, நம்பிக்கைக்குப் பாத்திரமான டானிக்குமாகும்!




வாழையடி வாழையாகக் குடும்பத்தினர் நல்லதென நம்பிக்கைகொள்ளச் செய்யும் பல நல்ல காரணங்களுள் நாலு இதோ:

1. இருமலை இமைப்பொழுதில் கச்சிதமாய்க் கரைக்கிறது வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்.

2. கபம் அறுத்து, நுரையீரலைச் சுத்தப் படுத்தும் கிரியோஸோட், க்வயகால் அடங்கியது வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்.

3. வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் நோய் நிவாரணியும், நம்பிக்கைக்குகந்த டானிக்கும் ஆகும். நோயை எதிர்க்கும் சக்தியை உடலுக்கு உதவுகிறது.

4. வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் பசியைத் தூண்டி, ஜீரண சக்தியை வளர்ப்பதுடன், ரத்தத்தைச் சுத்தப்படுத்தி, தாதுப் பொருள் நஷ்டத்துக்கு ஈடுசெய்கிறது.

## வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் | சிவப்பு லேபில்



வார்னர்-லாம்பர்ட் பார்மஸூடிகல் கம்பெனி (வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ்.ஏ.வில் இணைக்கப்பெற்றது)

# சர்க்கார் தராத புள்ளி விவரங்கள்

"இங்கிலாந்தில், தேசிய வருமானத்தில் 27 சத விகிதம் வரிகளாக ஜனங்களிடமிருந்து வசூலிக்கப்படுகிறது. இங்கே 11 சதவிகிதமே நம் ஜனங்களால் கொடுக்கப்படுகிறது" என்று நம் நிதி அமைச்சர் மொரார்ஜி தேசாய் அவர்கள் அண்மையில் கூறினார்.

கடந்த வருஷத்தில் ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் 745 கோடி ரூபாய்கள் பெறுமான பாலிஸிகள் கொடுத்துள்ளதாகவும் இது முந்திய வருஷத்தை விட 137 கோடி ரூபாய்கள் அதிகமாயுள்ளது என்றும் விவரங்கள் சமீபத்தில் வெளியிடப்பட்டன.

மேற்கண்ட புள்ளி விவரங்கள் கொஞ்சமும் சரியல்லவென்பது 'ஸ்வராஜ்யா' 25-5-63 இதழிலிருந்து நன்கு தெரிய வரும். புள்ளி விவரங்கள்தான் நம் சர்க்காரின் பிரசார இலாகாவில் முக்கிய ஆயுதங்கள். அவைகளைக் கொண்டு எதையும் நம்பும் பாமர மக்களைக் குழப்ப முடியும்.

இதோ நம் சர்க்கார் தராத சில புள்ளி விவரங்கள்:

இரண்டாம் திட்டத்தில் மூன்று வருஷங்கள் கழிந்த பிறகுதான் உணவுப் பற்றுக் குறை இருப்பதைக் கண்டு பிடித்தார்கள். உணவு மந்திரி பாட்டில் அவர்கள் இருவோடு ஏந்தி அமெரிக்கா சென்று "பி.எல். 480" உணவுக் கடன் திட்டத்துடன் வெற்றிகரமாய்த் திரும்பினார். மிகப் பெரிய கடன் திட்டமிது — "17 மிலியன் டன்கள்." சில வார்த்தைகளில் அடங்கிவிட்ட இந்தக் கடன் திட்டம் எவ்வளவு பிரும்மாண்டமானது தெரியுமா? சாதாரணமாக மதராஸ் துறைமுகத்தைத் தொடும் சிறு வியாபாரக் கப்பல்களில் (பத்தாயிரம் டன் வரை ஏற்றும் வசதி உள்ளவை) இந்த அளவு தானியத்தை ஏற்றி வருவதானால் ஒரு நாளைக்கு ஒரு கப்பல் வீதம் வந்தாலும் முழு அளவும் வந்து சேரச் சுமார் 1700 நாட்கள் ஆகும்! நமது தேசத்தில் பெருமளவுக்கு உபயோகப்படும் லாரிகள் எல்லாம் ஐந்து டன் நிறைவரை சுமக்கக் கூடியவை; சுமார் 22 அடி நீளம் உள்ளவை. மேற்படி தானியத்தை இம்மாதிரி ஐந்து டன் லாரிகளில் நிரப்பி ஒன்றுடன் ஒன்று இணைத்தாற்போல் அனுப்புவதானால் அந்த லாரித் தொடரின் நீளம் எவ்வளவு ஆகும், தெரியுமா? சுமார் 14,166 மைல்கள்! இந்த லாரித் தொடரின் முதல் வண்டி சான்பிரான்ஸிஸ்கோ துறைமுகத்திலிருந்து, பஸிபிக் மகா சமுத்திரத்தைக் கடந்து, மதராஸ் துறைமுகத்தை வந்து தொடும்போது, மேற்படி தொடரின் கடைசி வண்டி இன்னும் அமெரிக்கா கண்டத்தை விட்டுப் புறப்பட்டிராது!

இந்தத் திட்டம் முதல் நான்கு வருஷங்களுக்கு (1960–64) மட்டும்தான் என்றும், மறுபடியும் அடுத்த நான்கு வருஷங்களுக்கு (1964–68) மேலும் 10 மிலியன் டன் தானியக் கடன் தேவைப்படும் என்றும் உணவு மந்திரி ஸ்ரீ பாட்டில் அவர்கள் அண்மையில் தெரிவித்தார். சரி; பழையபடி இந்தப் பத்து மில்லியன் டன் தானியத்தையும் ஐந்து டன் லாரிகளில் ஏற்றிப் பார்ப்போம்! இந்தப் புது லாரித் தொடரை முதல் லாரித் தொடரோடு ஒட்டினாற்போல் நிறுத்துவோம். இப்போது லாரித் தொடரின் மொத்த நீளம் எவ்வளவு இருக்கும் தெரியுமா? நானே சொல்லுகிறேன்.— 22,500 மைல்கள்! அதாவது, கிட்டத்தட்ட நம் பூமியை ஒரு தடவை சுற்றிவரப் போதுமானது! இவ்வளவு பிரும்மாண்டமான கடனைத் திருப்பித் தருவது எப்படி?

பங்களூர்
30–5–63

கார்த்கேயன்




## ஊசியும் நடிப்பும்

தங்கள் 'கல்கி' இதழில் மறக்க முடியாத திரைப் படங்களைப் பற்றி வருகின்றமைக்கு மகிழ்ச்சி. ஆனால் கண்ணகி படத்தைப் பற்றி எழுதுகையில் சின்னப் பாவைச் சோக கட்டங்களில் நடிக்க வைப்பது மிகுந்த கஷ்டம் என்றும், டைரக்டர் ஆர். எஸ். மணி அவர்கள் நடிகர் சின்னப்பாவின் காலில் தாம் ஊசி குத்தி, அதன் மகிமையால் அவர் நடித்ததாகச் சொன்னதாகவும் குறிப்பிட்டிருக்கிறீர்கள். இது சின்னப்பாவுக்குச் சோக நடிப்பு தெரியாது என்று அவமதிப்புச் செய்ததாகும்.

மிளகாய் இன்றால் வீர நடிப்பும், மிட்டாய் இன்றால் காதல் நடிப்பும், ஊசி குத்திக் கொண்டால் சோக நடிப்பும் வருமானால் எல்லாரும் நடிகர் ஆகிவிடலாமே?

வேலூர்
20-5-63

ஜி. வி. அர்த்தநாரி

[திரு பி. யு. சின்னப்பா அவர்களை அவமதித்ததாக நேயர் அர்த்தநாரி கோபத்துடன் கூறுவதை நாம் ஏற்றுக் கொள்வதற்கில்லை. மாறாக அச்சம்பவம் சின்னப்பாவின் சிறப்புக்குச் சான்று பகர்வதாகவே கருதுகிறோம். வீரம், காதல் போன்ற உணர்ச்சிகளை அநாயாசமாக வெளியிட்ட சின்னப்பா சோக கட்டங்களில் சிரமப்பட்டார். ஆனாலும் தமது சோக நடிப்பு உன்னதமாக அமைய வேண்டும் என்பதற்காக உண்மையான துன்பத்தை அநுபவிக்கச் சித்தமாயிருந்தார். டைரக்டர்கள் என்ன சொன்னாலும் அதன்படி கேட்டு நடிக்கத் தயாராயிருந்த அக்காலத்திய நடிகர்களின் உயரிய பண்பையே விளக்குகிறது அந்நிகழ்ச்சி. இதே போல நடிகர் எம். கே. ராதாவுக்கு அந்த நாளில் ஏற்பட்ட ஓர் அநுபவத்தை இவ்விதழின் வேறொரு பக்கத்தில் காணலாம்.

— ஆசிரியர்.



கோடையில் சருமப் பாதுகாப்பு
சூரிய வெப்பத்தினால் சருமத்திற்கு
ஏற்படும் உபாதைகளிலிருந்து பாது
புத்துணர்ச்சியுடன் திகழவும்
லாவண்டர் வாட்டர்
ஆப்கன் ஸ்னோ
ஆப்கன் டால்கம் பவுடரை
உபயோகியுங்கள்




ஆப்கன்
ஸ்னோ
அழகு சாதனங்கள்

நாட்டின் முன்னேற்றத்துக்காகவும் விடுதலைக்காகவும் பாடுபட்டுப் பணிபுரிந்த பெருமகனார் திரு வி. கிருஷ்ணசாமி அய்யர். அவரது புகழை நிலைநாட்டும் வகையில் சென்னை சம்ஸ்கிருதக் கல்லூரியும் வேங்கடரமண ஆயுர்வேத வைத்தியசாலையும் இயங்கிவருகின்றன. ஜூன் மாதம் 15உ அவரது நூறாவது பிறந்த தின விழா. அவரது நினைவைப் போற்றும் வகையில் டாக்டர் வே. ராகவன் அவர்களது இக்கட்டுரையை வெளியிடுகிறோம். — ஆசிரியர்

# தமிழகம் கண்ட தர்மசீலர்

டாக்டர் வே. ராகவன்

ஸ்ரீ வி. கிருஷ்ணஸ்வாமி அய்யருடன் நேரிடையாகப் பேசிப் பழகி அவரைத் தெரிந்து கொண்டிருப்பதற்கான வயதெனக்கில்லை. என் துறையில் என்னை உருவாக்கிய என் குரு மஹா மஹோபாத்தியாயர் பேராசிரியர் எஸ். குப்புஸ்வாமி சாஸ்திரிகளை வக்கீல் தொழிலில் செல்லாமல் ஸம்ஸ்கிருதக் கல்விக்காகக் கண்டெடுத்துக் காப்பாற்றித் தந்தவர் ஸ்ரீ வி. கிருஷ்ணஸ்வாமி அய்யர். ஆகையால் அவர் எங்களுக்குப் பரம குரு எனலாம். 1906ல் மயிலையில் அவர் ஸம்ஸ்கிருதக் கல்லூரியை ஸ்தாபித்த போது குப்புஸ்வாமி சாஸ்திரிகளையே அதன் தலைவராய்த் தேர்ந்தெடுத்தார். ஸம்பிரதாயப்படி சாஸ்திரங்களில் தேர்ச்சி பெற்றவர்கள், ஆங்கிலமும், சமஸ்கிருதமும் சேர்ந்து படித்தவர்கள், இன்று நாடெங்கும் தங்கள் புகழ் பரவித் திகழ்வதைக் காணும் பண்டிதர்கள், ஆசிரியர்கள் ஆகியோர் மயிலாப்பூர் சம்ஸ்கிருதக் கல்லூரியுடனும் குப்புஸ்வாமி சாஸ்திரிகளுடனும் தொடர்பு கொண்டிருந்தவர்களாகவே இருப்பார்கள்.

பண்டையப் பாரதப் பண்பாட்டிலும், சம்ஸ்கிருதக் கல்வியிலும் தமக்கிருந்த ஊக்கத்தைப் பல்வேறு வகைகளில் ஸ்ரீ வி. கிருஷ்ணஸ்வாமி அய்யர் அவர்கள் வெளிப்படுத்தினார். கவர்னர் ஜெனரலாயிருந்த கர்ஸான், கல்கத்தா சர்வ கலா சாலையில் 1905ல் பட்டமளிப்பு விழா சொற்பொழிவில் இந்தியருக்கு ஒழுக்கம், உண்மை முதலியன இல்லை என இழிவாகப் பேசியதைப் பொறுக்காமல் நாட்டில் பெரும் குழப்பம் ஏற்பட்டுப் பல இடங்களில் மறுப்புக் கூட்டங்கள் நடந்தன. இதில் பங்கெடுத்துக் கொண்ட ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி அய்யர் இந்திய மக்களின் மேலான நடத்தைக்கு ஆதாரமான உண்மை, கற்பு முதலிய குணங்களைக் கற்பிக்கும் இதிகாச புராணக் கதைகளைத் தொகுத்து 'ஆரிய சரித்திரம்' என்ற பெரும் நூலை வெளியிட்டார். இவருடன் நெருங்கிய நட்புக் கொண்ட சென்னை பிஷப் ஒயிட்ஹெட்டின் மனைவி, 'மிஷனரி' மனப்பான்மையுடன் இந்தியப் போக்கையும் பழக்க வழக்கங்களையும் கண்டிக்கும்போது அதற்குத் தக்க பதிலளித்து, நம் பண்பாட்டின் உட்கருத்துக்களையும் உயர்ந்த எண்ணங்களையும் உடனடியாகவே எடுத்துக் காட்டினார்.



விவேகாநந்தர் அமெரிக்காவுக்குப்போவது, காசியில் மாளவியா ஹிந்து விசுவ வித்தியாலயத்தை ஏற்படுத்துவது போன்ற எல்லாக் கலாசார இயக்கங்களுக்கும் அக்காலத்தில் உறுதுணையாயிருந்து உதவினார். மசலியில் நண்பர் ஹனுமந்தராவ் ஆந்திர ஜாதிய கலாசாலை ஒன்றைத் தொடங்க விரும்பிய போது உதாரமான நன்கொடை வழங்கினார்.

நாட்டு வைத்தியம் வளர என்று 1905ல் வேங்கடரமண ஆயுர்வேத வித்தியாசாலையை ஏற்படுத்தினார். இந்த சம்ஸ்கிருத ஆயுர்வேதப் படிப்புகளையும் அதன் பரீட்சைகளையும் சென்னை சர்வகலாசாலை ஒப்புக்கொண்டு நடத்தும்படி அதன் 'ஸெனடிகேட்'டில் ஆர்வத்துடன் போரிட்டு வெற்றி பெற்றார்.

இதற்கெல்லாம் அடிப்படையாக இருந்தது அவரது தேச பக்தி. அக்காலத்தில் அவர் மிதவாதி கட்சியைச் சார்ந்திருந்தார். காங்கிரஸும் மிதவாதிகளின் கையிலிருந்தபோது அதன் மகாநாடுகளில் பெரும் பங்கெடுத்துக் கொண்டு, நாட்டின் விடுதலைப் போரின் தோற்றுவாயில் இயக்க வீரர்களாய் விளங்கிப் புகழ்பெற்ற பி. ஷா. மேடா, டி. இ. வாசா, கோகலே, ஸுரேந்திரநாத் பானர்ஜி, பெபின் சந்திரபால், ராஷ்பிஹாரி கோஷ் முதலியவர்களோடு நெருக்கமாய் உழைத்து வந்தார். முக்கியமாக, கோகலேக்கும் இவருக்கும் அதிகமான தொடர்பு ஏற்பட்டது. 'ஸர்வெண்ட்ஸ் ஆப் இண்டியா சொஸைட்டி'யில் ஸ்ரீ வி. எஸ். ஸ்ரீநிவாஸ சாஸ்திரி சேர்ந்ததிலும் இவருக்கு ஒரு பங்கு உண்டு. பல காரணங்களால் இவர் சென்னை ஹைகோர்ட்டில் ஜட்ஜு பதவியையும் அதனுடன் கவர்னரின் கௌன்ஸிலில் அங்கத்தினர் பதவியையும், அரசாங்கத்தின் பெரும் பட்டங்களையும் கௌரவங்களையும் ஏற்கும்படி ஆயிற்று.

மிதவாதிகளைச் சார்ந்தவரென இவரைத் தீவிரவாதிகளைச் சார்ந்த கவி சுப்பிரமணிய பாரதியார் தாக்கி வந்தார். ஆனாலும் ஜி. ஏ. நடேசன் மூலம் பாரதியை ஒரு நாள் கிருஷ்ணஸ்வாமி அய்யர் தமது வீட்டுக்கு அழைத்து உபசரித்தார். பாரதி 'வந்தேமாதரம்' முதலிய கீதங்களைப் பாடியதும் பரவசமடைந்து, பாரதி பாடல்களை முதன் முதலாக அச்சிட்டு வெளிவருவதற்கான பொருளுதவியையும் உடனேயே செய்தார்.

சென்னையில் அறிவு, பொதுப் பணி, கலை முதலியன பல வகைகளிலும் சிறப்புறும்படி பல ஸ்தாபனங்களை நிறுவுவதற்கு அவர் அன்று காரணமாயிருந்தார். ராணடே ஹால், ஸௌத் இந்தியன் அஸோஸியேஷன், மயிலாப்பூர் கிளப், மகாஜன சபை, ஸுகுண விலாஸ ஸபை இவை எல்லாவற்றுக்கும் வித்திட்டவர் இவர்தான்.

இவை யனைத்தையும் விட முக்கியமான பொதுநல ஸ்தாபனம் இவர் ஏற்படுத்திய இந்தியன் பாங்க். அர்பத்நாட் பாங்க் விழுந்ததால், மக்களுக்கு ஏற்பட்ட கஷ்ட நஷ்டங்களைக் கதையாகக் கேட்டிருக்கிறோம் நாம். அர்பத்நாட் வழக்கில் பொதுநலங்கள் பக்கம் இருந்து வழக்கை நடத்தியதுடன் நில்லாமல், உடனடியாகவே இந்தியன் பாங்கையும் ஏற்படுத்தினார்.

நம் ஆச்சார்ய ஸ்வாமிகள் ஸம்ஸ்கிருதக் கல்லூரி உபன்யாசமொன்றில் சொன்னபடி கிருஷ்ணசாமி அய்யர் நிறுவிய ஸ்தாபனங்கள் மக்களின் ஆத்மிக நலனையும், தேக நலனையும், பொருளாதார நலனையும் பாதுகாக்கும்படி வாய்த்திருக்கின்றன.

இவரது அரிய சொற்பொழிவுகளில் 1911ம் வருஷத்திய சென்னை சர்வ கலாசாலை பட்டமளிப்பு விழா பேச்சு குறிப்பிடத் தக்கது. இதைக் கேட்டுக்கொண்டு அன்றைய பட்டதாரிகளுள் ஒருவராய் வீற்றிருந்தார் நமது ராஷ்டிரபதி ராதாகிருஷ்ணன்.

இவரது சொற்பொழிவுகளைக் கேட்டுப் பயனடைந்தவர்கள், இவருடன் கூடப் பழகியவர்கள், எல்லோரும் புகழுடன் வாழ்கிறார்கள். இந்த அபூர்வ கைராசிக்காரர் அமைத்த ஸ்தாபனங்களெல்லாம் புகழுடன் இன்றும் திகழ்கின்றன.

முதலில் அதிகமாக வேலையில்லாமலிருந்த இவருக்கு, நாளாக ஆக, ஏராளமாய்த் தம் வக்கீல் துறையில் வேலை வந்து குவிந்தது. பின்னால் பிரபல வக்கீல்களாயும், நீதிபதிகளாயும், காங்கிரஸ்வாதிகளாயும், எக்ஸிக்யூடிவ் கௌன்ஸிலர்களாயும், திவான்களாயும், மந்திரி சபையினராயும் விளங்கிய புகழ்பெற்ற நம் பெருமக்களில் பலர் கிருஷ்ணஸ்வாமி அய்யரிடம் ஜூனியராயும் அப்ரெண்டிஸாயும் இருந்தவர்களே. உதாரணமாக ஸி. பி. ராமஸ்வாமி அய்யர், அல்லாடி கிருஷ்ணஸ்வாமி அய்யர், என். கோபால ஸ்வாமி அய்யங்கார், எஸ். ஸ்ரீநிவாச அய்யங்கார் முதலியவர்களைச் சொல்லலாம். கிருஷ்ணஸ்வாமி அய்யருடன் கூடப் படித்துச் சென்னையில் இவருடன் கூடச் சட்டத் துறையில் சிறப்பான பணியாற்றியவர்கள்—பி.எஸ். சிவஸ்வாமி அய்யர், டாக்டர் நாயர், பி.ஆர். சுந்தரமய்யர், மணி அய்யர் ஆகியோர். எல்லோரும் சென்னைப் பொது வாழ்வின் மகாபுருஷர்கள் என்று போற்றப்படுபவர்கள்.

சட்டத் துறையில் பிரகாசித்து, ஏராளமாய்ப் பொருள் வருமானம் பெற்றவர் பலர். ஆனால் பொருளைப் பொருட்படுத்தாமல், தயங்கினால் தடைப்படும் என்று நினைத்துத் தோன்றியவுடனேயே பெரும் தொகைகளைப் பிறருக்கு அளித்து, தாமும் நிதிகளை ஒதுக்கி வைத்து, அதைக் கொண்டு மக்களின் நல்வாழ்வுக்கான பெரும் ஸ்தாபனங்களை நிலைநாட்டிய வள்ளல்களில் கிருஷ்ணஸ்வாமி அய்யர் முதலில் விளங்குபவர். அவர் வாழ்க்கை, சிந்தனை, இவற்றின் வேகமே அவரை நம்மிடையே அதிக ஆண்டுகள் விட்டு வைக்காமல் நாற்பத்தொன்பது வயதிலேயே இவர் உடலை விழுங்கி விட்டது. இருந்த ஒவ்வொரு நாளிலும் பேராற்றல்களைக் காட்டிப் பெரிய சாதனைகளைப் புரிந்து, புயல் போல் வீசி, அலை போல் மோதி அமைதி அடைந்தது இந்த மகானின் ஆத்மா. இவர் ஆரம்பித்து வைத்த ஸ்தாபனங்களும் இவர் முழு ஆர்வத்துடன் பாடுபட்டால் புத்துயிர் அடைந்து நம் பண்பாடும் மடியாப் புகழுடன் ஓங்கி வளரட்டும்.

# தளவாடங்கள் / இயந்திரங்கள் வாங்க தவணைகளில் செலுத்தும் கடனுதவி

இந்தத் திட்டம் ஏற்றுக்கொள்ளப்பட்ட உற்பத்தி விவகாரங்களில் ஈடுபட்டிருக்கும் சிறு, நடுத்தரத் தொழில்களுக்குத் தளவாடங்கள்/இயந்திரங்கள் வாங்குவதற்குப் பண உதவி செய்வதற்கென்றே ஏற்படுத்தப்பட்டதாகும்.

உங்களுக்கு உற்பத்தியைப் பெருக்கவோ அல்லது மிக முக்கியமான காரணத்திற்காகவோ தளவாடங்கள்/இயந்திரங்கள் வாங்க கடனுதவி தேவைப்பட்டால், தயவுசெய்து அடுத்துள்ள பாங்கின் கிளையை அணுகுங்கள். அவர்கள் எல்லா விவரங்களையும் உங்களுக்குக் கூறி உங்களுக்குத் தேவையான கடன் பெறுவதற்கான வழிவகைகளையும் மகிழ்ச்சியோடு செய்வார்கள்.



**ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியா**

நாட்டின் தலைசிறந்த பாங்க்

உற்பத்தியைப்
பெருக்கி
பாதுகாப்பு
முயற்சிக்கு
உதவுங்கள்

SISTAS — SB. 74a

## எழுத்தும், தொழிலும்



# கல்லூரி அவியல்!

நான் தமிழில் கதை, கட்டுரைகள் வரைந்ததெல்லாம் அந்தக் காலத்திலே. அதாவது, கல்லூரிகள் பலவற்றில் ஆங்கிலப் பேராசிரியராகப் பணியாற்றின பொற்காலத்திலே. இன்று நான் பார்க்கும் தொழிலுக்கும், பேராசிரியர் வேலைக்கும் ஸ்நானப் பிராப்திகூடக் கிடையாது. இருந்த போதிலும், சர்வகலாசாலைகள் அவ்வப்போது என்னை 'லெக்சர்' பண்ணும்படி கட்டாயப்படுத்தத்தான் செய்கின்றன. உள்ளூர் சர்வ கலாசாலை ஆங்கிலப் பேராசிரியர்களுக்குப் போறாதும் போறுர், என்னைப் பிடித்துப் பாடம் நடத்தச் சொல்லி விட்டார்கள். சில சர்வகலாசாலைகளுக்கு நான் இன்னும் பரீட்சாதிகாரியாகப் பணியாற்றி வருவதும் உண்மை.



அந்தக் காலத்தில் கல்லூரிகளில் நான் கண்டதையும், காதுதையும் கேட்டதையும் ஒன்றுசேர்த்து அவியலாக்கிக் கதைகள் சமைத்தேன். நகைச்சுவையை விரும்பின மாணவ உலகம் என்னைப் பாராட்டியது. என் ஹாஸ்யக் கதைகளைப் படித்து மகிழ்ந்த மாணவி ஒருத்தி என்னையே தான் மணந்து கொள்வேன் என்று ஒற்றைக் காலில் தவம் இருந்த தென்னவோ உண்மை! (இது காணுமலே காதல்! நேரில் என்னைச் சந்தித்தபின் அவள் ஆர்வம் குறைந்து விட்டதாக என் நண்பர்கள் சொல்வதைக் கேட்காதீர்கள்!) சிரிக்கத் தெரிந்த பிரின்ஸிபால்கள் என் மேதாவிலாசத்தை மெச்சினுர்கள். நான் அவர்கள் முகத்தைக் கோணலாக்கிச் சித்திரித்துக் காட்டினதில் அவர்களுக்குப் பெரு மகிழ்ச்சி. ஆனால் ஹாஸ்ய உணர்ச்சி கொஞ்சமேனும் இல்லாத கல்லூரி அதிகாரிகளோ என்னைப் பார்த்துச் சீறினுர்கள். 'அதிகப் பிரசங்கி', 'தான்தோன்றி' என்றுகூட என்னைத் தலைப் பட்டார்கள். நகைச் சுவையின் எதிரிகளான இந்தப் பிரகிருதிகளிடம் அகப்பட்டுக் கொண்டு நான் திண்டாடினது தனிக் கதை.



கல்லூரிகளில் வேலை பார்க்கையில் எனக்கு ஏற்பட்ட அநுபவங்கள் பல. மறக்க முடியாத சம்பவங்கள் எத்தனையோ. சிரிப்பூட்டும் நிகழ்ச்சிகளுக்கும் கணக்கில்லை.

கேரளத்தில் ஒரு கல்லூரி. அங்கே ஒரு மலையாளப் பேராசிரியர். வயது அறுபது. நல்ல சிடுமூஞ்சி. அவர் பாடம் நடத்தும் அறைக்குப் பக்கத்தில் இருந்தது ரசாயன 'பிராக்டிகல்' அறை. மலர்களின் நறு மணத்தைத் துஞ்சத்து எழுத்தச்சன் வர்ணித்திருப்பதை மலையாள ஆசிரியர் வர்ணஜாலங்களுடன் விளக்க



கல்லூரி வாழ்க்கையில் எத்தனை எத்தனையோ வேடிக்கை நிகழ்ச்சிகளும், ரஸமான சம்பவங்களும் மலிந்து கிடக்கின்றன. அவற்றை அனுபவித்து ரசித்த கல்லூரி ஆசிரியரால் தானே அவற்றைத் திறம்பட விவரிக்க முடியும்! இதோ கல்லூரி அவியல் தயார்! சுவைத்துப் பாருங்கள்.

மூலனும் போதெல்லாம், சொல்லி வைத்தாற் போல் பக்கத்து அறையிலிருந்து துர்நாற்றம் எழும். எல்லாம் அந்த ரசாயனப் பேராசிரியரின் 'பிராக்டிகல்' வகுப்பிலிருந்து பொங்கி எழும் 'ஹைட்ரஜன் ஸல்பைடு'ன் வாசனைதான்! மலையாள ஆசான் பிரின்ஸிபாலிடம் அடாத குறையாக முறையிட்டார், ரசாயன வகுப்பை அல்லது தம்முடைய வகுப்பை அங்கிருந்து நகர்த்திவிடும்படியாக. ஆனால் கண்டிப்புக்குப் பெயர் போன தலைப்பாகைப் பிரின்ஸிபால் கையை விரித்து விட்டார். ரசாயனப் பிராக்டிகல் நாறத்தான் செய்யும் என்றும், அதை மலையாள ஆசான் பொறுத்துக் கொண்டு தானாக வேண்டும் என்றும் மொழிந்தார். விடுவாரா மலையாள ஆசிரியர்? அவர்தான் பிரின்ஸிபால் பிறப்பதற்கு முன்னாலேயே அந்தக் கல்லூரியில் சேர்ந்தவராயிற்றே!

மறு நாள் பத்து மணியிருக்கும். ரசாயனப் பேராசிரியர் ஆர்வத்துடன் 'பிராக்டிகல்' வகுப்பைத் தொடங்கினார். பக்கத்து அறையிலிருந்து ஊதுகுழலின் ஒலி கேட்டது. தொடர்ந்து 'மலையாளச் செண்டை' முழங்கியது. அது மட்டுமா? இன்னொரம் 'ஜிங் ஜிங்' என்று சத்தமிட்டது. யாரோ பிளாட்பாரத்தின் மீது நடனம் பயிலும் ஓசை. மலையாள கீதம் வேறு.

அதிகம் வளர்ப்பானேன்! ஐந்து நிமிஷங்களில் கல்லூரியே மலையாள வகுப்புக்கு முன் கூடிவிட்டது. தம்மை மறந்து தாண்டவமாடிக் கொண்டிருந்தார் மலையாள ஆசிரியர். குரு பக்தியுடைய அவருடைய மாணவர்கள் பல்வேறு வாத்தியங்களைக் கர்மசிரத்தையுடன் முழக்கித் தள்ளிக் கொண்டிருந்தார்கள். விழுந்தடித்துக் கொண்டு ஓடி வந்தார் தலைப்பாகைப் பிரின்ஸிபால். ஆத்திரம் காரணமாக அவருடைய நெற்றித் திருமண் அடித்தது. ''மிஸ்டர் குரூப்! இதெல்லாம் என்ன?'' என்று சிம்ம கர்ஜனை செய்தார்.

''இதுவா? இதுதான் மலையாளம் பிராக்டிகல்! நேற்று ஓட்டம் துள்ளல் 'தியரி' வகுப்பு நடத்தினேன். இன்று 'பிராக்டிகல்' நடக்கிறது:::: என்ன, இரைச்சல் காது செவிடுபடுகிறதே என்று பார்க்கிறீர்களா? நான் என்ன செய்யட்டும்? நாறுகிறது என்பதற்காக ரசாயனப் பிராக்டிகலை நிறுத்திவிட முடிகிறதா? காது செவிடுபடுகிறது என்பதற்காக மலையாளம் பிராக்டிகலை நிறுத்துவது முறையா?'' என்று கேட்டுவிட்டு மீண்டும் ஆடத் தள்ளினார் மலையாள ஆசான். மறு நாளே அவருக்கு வேறு அறை தரப்பட்டது என்று சொல்லவும் வேண்டுமா?

இன்னொரு கல்லூரியில் மாணவர்களிடம் மாட்டிக் கொண்டு முழித்த கைரேகை சாஸ்திரியை நினைத்தால் சிரிப்பு பீறிட்டுக் கொண்டு வருகிறது. அவருக்கு மகாராஜாக்களும், திவான்களும் மெடல்களும், நற்சாட்சிப் பத்திரங்களும் தந்திருந்ததென்னவோ உண்மை. பிள்ளையாண்டான்களின் கைரேகையைப் பார்த்து விட்டு, ''நீ கண்டிப்பாக டாக்டராவாய்'', ''நீ போலீஸில் சேருவதற்காகவே அவதரித்தவன்'', நீ வக்கீல் வேலையில் பிரமாதமாக வெற்றி பெறுவாய்'', ''நீ ரயில்வே கார்டாக மாறுவாய்'' என்று சந்தேகம் கொஞ்சமுமின்றித் திருவாய் மலர்ந்து கொண்டிருந்தார் அவர். தப்பித் தவறிக்கூட ஒரு பையன் இன்ஜினியராவான் என்று சொல்லவில்லை அவர். அது ஓர் இன்ஜினியரிங் கல்லூரி என்று முன்கூட்டியே தெரிந்திருந்தால் அவர் உளறியிருக்க மாட்டார்தான்!

பரீட்சை ஹாலில் மாணவர்கள் காப்பி அடிக்காமல் பார்த்துக் கொள்ளும் பொறுப்பு தரப்பட்டிருந்தது ஓர் ஆசிரியருக்கு. அவர் கடமையே கண்ணாகப் பரீட்சை நடக்கும் அறையில் மேலும் கீழும் நடந்து கொண்டிருந்தார். துண்டுக் காகிதமொன்றிலிருந்து அவசர அவசரமாகக் காப்பி அடித்துக்கொண்டிருந்தான் ஒரு பிள்ளையாண்டான். ஆசிரியர் திரும்பிப் பார்த்தார். அவன் மேஜையருகில் அடிக்கடி நின்று பார்த்தார். ஆனால் கல்லுளி மங்கனான மாணவன் விடாது காப்பி அடித்துக் கொண்டிருந்தான். பிடித்துக் கொடுப்ப



தைத் தவிர வேறு வழியில்லை என்று தீர்மானித்தார் பிள்ளை குட்டிக்காரரான ஆசிரியர். ஆனால் அவர் அவனை நெருங்கி வினவுவதற்குள் பிள்ளையாண்டான் துண்டுக் காகிதத்தை விழுங்கி விட்டான்! சிஷ்யனின் தீரமான சக்தியை மெச்சி விட்டு மேலே சென்றார் ஆசிரியர். வேறு என்ன செய்ய முடியும்?

முத்துக் கல்யாணி என்ற ஆசிரியையின் வரவை ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள் மாணவர்கள். எப்படி இருந்தாலும் ஓர் இளம் பெண்ணிடம் பாடம் படிக்கக் கொடுத்து வைத்திருக்க வேண்டுமே! புது ஆசிரியர் வரப் போகிற தினத்தன்று ஹாஸ்டலில் ஒரே பரபரப்பு. நவயுவர்களான பிள்ளையாண்டான்கள் ஜோராக டிரஸ் செய்து கொண்டதுடன், கொஞ்சம் அதிகப்படியாகவே 'செண்ட்' பூசிக் கொண்டார்கள். பன்னிரண்டு மணி வரையில் போர்த்துக் கொண்டு தூங்கும் போக்கிரிப் பிள்ளைகள்கூட அன்று மணி அடிப்பதற்கு முன் வகுப்புக்கு வந்து விட்டார்கள். ஆனால் பிள்ளைகளின் குதூகலத்தில் மண்ணை அள்ளிப் போட வந்து சேர்ந்தார் முத்துக் கல்யாணி என்ற மீசைக்காரர்! அவருடைய முழுப் பெயர் முத்துக் கல்யாணி முதலியார் என்று தெரிந்ததும் பிள்ளைகள் அடைந்த ஏமாற்றம் கொஞ்சமா என்ன?

தனிப்பட்டோர் நடத்தும் கல்லூரிகள் பலவற்றில் பிரின்ஸிபாலுக்கு ஒருவிதமான சுதந்திரமும் கிடையாது. பிழைக்க வேண்டுமென்றால், அவர் கல்லூரி நிர்வாகிகள் போடும் தாளத்துக்குத் தகுந்தபடி கதகளியோ, பரதமோ பயில வேண்டும்.

தனிப்பட்டோர் நடத்தும் ஒரு கல்லூரி. பிரின்ஸிபால் பி. எச்டி. பட்டம் பெற்ற அறிஞர். கல்லூரிக் கமிட்டியின் தலைவர் ஒரு வெங்காய வியாபாரி. காரியதரிசி ஓர் எண்ணெய் வியாபாரி. கல்லூரி அங்கத்தினர்களில் பலருக்குக் கையெழுத்துப் போடத் தெரியாது. விரல் அடையாளம்தான் வைப்பார்கள். கீழ்க் காணும் சம்பாஷணையைக் கவனிக்கவும்.

கல்லூரித் தலைவர்: என்ன ஐயா பிரின்ஸிபால்? சௌக்கியமா இருக்கீரா? கல்லூரி ஒழுங்காக நடக்கிறதா, இல்லே, தீப்பிடிச்சுப் போச்சா....? வந்து உங்ககிட்டே முக்கியமான ஒரு சமாசாரம் பேசணும். நம்ம கல்லூரியிலே பௌதிக விரிவுரையாளர் வேலே காலியாக இருக்கு பாருங்க. அதுக்கு நம்ம பையன் ஒருத்தன் இருக்கான். எசக்கிமுத்துன்னு பேரு. அவனைப் பிடிச்சுப் போட்டாகணும். கல்லூரிக் கமிட்டியின் தலைவன் என்ற முறையிலே நான் பகிரங்கமாக அந்தப் பையனை 'சப்போர்ட்' பண்ண மாட்டேன். எல்லாம் நீங்க கவனிச்சுக்க வேண்டியது; தெரிஞ்சுதாவே? நீர் மட்டும் இந்த உபகாரம் பண்ணினால் உம்ம 'எக்ஸ்டென்ஷன்' வருகையில் சாதகமாகப் பேசுவேன். 'ஙண ஙண'ன்னு எதுனாச்சும் உளறினீரோ, ஐம்பத்தைந்திலேயே சீட்டுக் கிழிச்சுடுவேன். அதோ காரியதரிசி ஐயாவும், கமிட்டி அங்கத்தினர்களும் வர்றாக: அவங்ககிட்டே ஏற்கனவே சொல்லி வைச்சிருக்கேன்.

பிரின்ஸிபால்: ஆனால் நீங்க சொல்ற பையன் மூணாங் கிளாஸ் எம். ஏ.யாச்சே!

காரியதரிசி: அட, போய்யா! கிளாசும் மண்ணாங்கட்டியும்! மார்க் கீர்க்கெல்லாம் ஏதோ தராசுலே அளந்து போடற மாதிரி பேசறீரே! என்ன வெங்காயமா அளந்து போட? வீட்டுக்காரியிடம் கோபித்துக் கொண்ட தினம் பேப்பர் திருத்தினால் அத்தனை பசங்களும் 'கோட்' அடிப்பான்கள். அதே பேப்பரை அக்கார வடிசல் சாப்பிட்ட பிறகு திருத்தினால் நூற்றுக்கு நூற்றிருபது மார்க்குத் தருவீர்கள். வாத்திகள் விஷயம் தெரியாதா? இதோ, பாரும்! பேசாமல் தலைவர் ஐயா சொல்றபடி எசக்கிமுத்துவைத் தேர்ந்தெடுத்து விடும். ஏதாவது எடக்குப் பண்ணினால் வைஸ் பிரின்ஸிபாலை அடுத்த வருஷத்தில் பிரின்ஸிபாலாக்கி விடுவோம்!

பிரின்ஸிபால்: ஆனால் டாக்டர் பட்டம் இருப்பவனெல்லாம் மனுப் போட்டிருக்கையில், ஒரு மூணாங் கிளாஸ் எம். ஏ. ஐத் தேர்ந்தெடுப்பது முறையா? மனசாட்சி அதற்கு இடந் தராதே!

மிஸ்டர் விரல் அடையாளம்: பெரிய மனசாட்சியைக் கண்டவர் இவர்! டாக்டர் பட்டம் பெற்றவனெல்லாம் போய் ஆஸ்பத்திரியில் மருந்து தரச் சொல்லும். நம்ம பிள்ளைகளுக்குப் பாடம் சொல்லித் தர எசக்கிமுத்து எதேஷ்டம்! கிளாஸாவது, ஒண்ணாவது! எனக்கு ஏ. பி. ஸி. டி. தெரியாது. நான் இந்தப் பெரிய கல்லூரியின் நிர்வாகக் கமிட்டியில் பணியாற்றவில்லையா? உம்மைப் போன்ற பிரின்ஸிபால்களைப் பொறுக்கி எடுக்கும் குழுவில் அங்கத்தினராக உட்காரவில்லையா? ஏட்டுப் படிப்புத்தானா முக்கியம்?

பிரின்ஸிபால் என்ன செய்ய முடியும்?

கல்லூரி ஆசானாகப் பணியாற்றப் போன ஜன்மத்திலே புண்ணியம் செய்திருக்க வேண்டும். என்னைக் கேட்டால் எல்லாத் தொழில்களிலும் மிகச் சிறந்தது ஆசிரியரின் தொழில்.

'இருளிலிருந்து ஒளிக்கு அழைத்துச் செல்' என்ற வாக்கியத்தைக் கடைப் பிடித்து, உண்மை ஆர்வத்துடன் பாடம் நடத்தும் பேராசிரியரைப் போன்ற பாக்கியசாலி யார்? ஞான ஒளியைப் பரப்பும் இலட்சியவாதியான இன்னொரு ஆசிரியர்தான்.

நான் பேராசிரியராகப் பணியாற்றிய காலத்தைப் பொற்காலம் என்றேன். துள்ளும் இளமையுடனும், துடிப்புடனும் விஷமங்கள் பல செய்த மாணவ மாணவிகள்தான் என்னுடைய கல்லூரிக் கதைகளின் ஆதார சுருதி. ஆசிரியர் வேலைக்கு என்று முழுக்குப் போட்டேனோ, அன்றே என் உணர்ச்சி வாழ்வுக்கும் சமாதி கட்டி விட்டேன். அதற்குப் பின் நான் அடிக்கடி கதைகள் எழுதவில்லை. கற்பனை ஓடினால்தானே? பணமும், பதவியும் இலக்கியம் சமைக்க உதவமாட்டா. அதற்கு ஒரு தனியான சுற்றுப்புறமும், மனப்பான்மையும் தேவை. ஆம்! இரண்டும் ஒன்றையொன்று தழுவினால்தான் கற்பனையில் ஒளி பிறக்கும்.

# பத்தினிக் கோட்டம்

### அத்தியாயம் இருபத்து மூன்று

## நிலவில் மறைந்த பரிதி

தீக்குழம்பில் குளிப்பாட்டி நிறுத்திய திருமால் சிலைபோல் சிவந்து நிமிர்ந்து நின்ற பரமேசுவரவர்மன், "என்ன நடந்ததென்று கேட்கிறாய், இளவரசி? அதோ பார்! என் மணித்திரு நாட்டு மக்கள், தம் வீடு, வாசல், கைப்பொருள் அனைத்தையும் அக்கினிக்கு இரையாக்கி விட்டு அநாதைகள்போல் அழுது புலம்பிக் கொண்டு ஓடுகிறார்களே, அந்த அவலக் காட்சியை நீ பார்க்க வில்லையா? அவர்கள் வாழ்ந்த அந்தச் சிற்றூர் அதோ, அநியாயமாக எரிந்து சாம்பலாகிக் கொண்டிருக்கிறதே, அதைக் கூட நீ பார்க்கவில்லையா?" என்று அடித் தொண்டையில் படபடத்



துச் சொன்னவன் தன் கண்களை இறுக மூடிக் கொண்டு, "ஐயோ! இந்த வேதனைக் காட்சிகளை யெல்லாம் பார்த்துக் கொண்டு ஏதும் செய்யச் சக்தியற்ற வெறும் மனிதனாய் நிற்கிறேனே! இறைவா, என்னை ஏன் இப்படிச் சோதிக்கிறாய்?" என்று கண்டம் விம் மிப் புடைக்கப் பொருமிக்கொண்டே தலையை இரு கைகளாலும் அழுத்திப் பிடித்துக் கொண்டான்.

குழம்பித் தவித்து நின்ற உத்தமசீலி சட்டென்று திரும்பிப் பல்லவ மன்னன் காட்டிய திசைப் பக்கம் தன் பார் வையை ஓட்டினாள். அங்கே, தீப்பற்றி எரிந்து கொண்டிருந்த சிற்றூர் இப் போது வெறும் பொட்டல் காடாய்ப் புகை சூழ்ந்துகொண்டு காணப்பட்டது. அந்த நெஞ்சுருத்தும் காட்சியையே சிறிது நேரம் பார்த்துக் கொண்டிருந்த உத்தமசீலி தனக்குள் ஏதோ ஒன்றைத் தீர்மானித்துக் கொண்டவள் போல் மெல்லத் தலையசைத்துத் திரும்பி, "என்ன இது, அரசே? ஏன் அந்தச் சிற்றூர் அப்படி எரிந்து கொண்டிருக் கிறது? தீப்பற்றிய குடில்களை அணைக் காமல்கூட மக்கள் ஏன் தலைதெறிக்க ஓடுகிறார்கள்?" என்று அமைதியாக வினவினாள்.

பரமேசுவரவர்மனின் கண்கள் சிவந் தன. பொங்கி வரும் ஆத்திரத்தை அடக்கிக்கொண்டு, "காரணம் கேட் கிறாயா, இளவரசி? எல்லாம் உன் பெரிய தந்தை விக்கிரமாதித்தனின் இதய மற்ற வரித் தண்டல் அதிகாரிகளுடைய வெறியாட்டக் காட்சி அது! வரி கொடாத மக்களின் வீடு வாசல்களை இப்படித் தீயிட்டுப் பொசுக்கிவிட்டுப் போவது அவர்களுக்கு ஒரு விளையாட் டுக் காரியம்! அந்த அக்கிரம விளை யாட்டைத்தான் இப்போதும் அங்கே நடத்தியிருக்கிறார்கள்!" என்று கூத்த லும் குமுறலுமாகப் பொரிந்தான் அவன்.

உத்தமசீலியின் முகம் ஜிவ்வென்று வெளுத்துச் சிறுத்தது. தன் உதடுகளை மடித்துக் கடித்தவாறு தலைகுனிந்து ஒரு கணம் மௌனமாயிருந்த அவள், "ஆமாம்; அரசன் விதித்த வரிகளை மறுக்காமல் செலுத்த வேண்டியதுதானே நியாயம்? இந்த ஊர் மக்கள் ஏன் அந்த நியாயத்துக்கு விரோதமாக நடந்து கொண்டார்களாம்?" என்று வெகு அலட்சியமாகக் கேட்டாள்.

ஒரு விநாடி திக்கித் திணறிய பரமேசுவரவர்மன் அவளை எரித்துவிடுவது போல் விழித்துப் பார்த்துக் கடுகடுத்த குரலில் கூறினான்: "ஏன் என்று கேட் கிறாய், இளவரசி? இந்தப் பல்லவ நாடெங்கிலும் சளுக்கிய வரித் தண் டல் அதிகாரிகள் செய்து வரும் அட் டூழிய அநியாய வரி விதிப்புக் கெடு பிடிகளை இதயமுள்ள எந்த மனிதன் கேள்விப்பட்டாலும் இரத்தக் கண் ணீர் வடிக்காமல் இருக்க மாட்டான். 'அரசன் விதிக்கும் வரிகளை மக்கள் செலுத்த வேண்டியது நியாயம்' என்று

நியாயம் பேசுகிறாயே, என்னுடைய நாட்டின் வரி விதிப்பு நியாயத்தைச் சொல்கிறேன், கேள்: ஊரவையாராலும், அற மன்றத்தாலும், அரசனாலும், கோயிலதிகாரிகளாலும், சிற்றூர்த் தலைவனாலுமே வரிகள் விதிக்கப்பட வேண்டும் என்பது எங்கள் அரசியல் தர்மத்திலுள்ள ஒரு பிரதான நெறி முறை. இந்த நெறி முறையை முற்றிலும் தகர்த்து விட்ட சளுக்கிய வரித் தண்டல் அதிகாரிகள், எல்லா வரிகளையும் தாமே விதிக்கும் அதிகாரத்தை மேற்கொண்டுவிட்டிருக்கிறார்கள். இதனால் இங்கே



இதுவரையில் கேள்விப்படாத வரிகளெல்லாம் இப்போது மக்கள் தலை மீது சுமந்து விட்டிருக்கின்றன. இறை வழிபாட்டுக்குப் பயன்படும் நீலோத்பலம், செங்கழுநீர் முதலான மலர்ச் செடிகள் பயிரிடவும் வரிகள் விதிக்கப் பட்டிருக்கிறது. சீன தேசத்திலிருந்து கொண்டு வரப்பட்டதும் — மங்கையர் சூடிக்கொள்வதுமான — மருக்கொழுந்து செடிக்குக்கூட வரி விதித்தாகிவிட்டது. கல்லால மரம் வளர்க்க வரி; கருஞ் சராங்கண்ணி பயிரிடவும் வரி; திருமணம் செய்து கொள்ளக் 'கண்ணாலக் காணம்' என்பதாக ஒரு வரி. இவை தவிர, தரிசு நிலம், ஊர்ப் பொது நிலம், ஊர்க்களம், நத்தப்பாழ், கடைத் தெரு, கோயில், குளம், குட்டை, மடம், சத்திரம், பள்ளி, நந்தவனம், மந்தைப் பட்டி, கன்றுமேய் பாழ், பெருவழி, ஓடை, ஊடறுத்துப்போன வாய்க்கால், பாறை, ஆற்றுப் படுகை, உடைப்பு, இடுகாடு, சுடுகாடு, இவ்விரண்டுக்கும் செல்லும் வழி முதலானவையெல்லாம் வரி நீக்கம் செய்யப்பட்டவையாகும்; ஆனால் இவை அனைத்துக்குமே இப்போது தீர்வை விதிக்கப்பட்டிருக்கிறது. பிரமதேயம், தேவதானம், பட்ட விருத்தி, பள்ளிச் சந்தம், முற்றூட்டு நிலம் முதலான அறக் கட்டளைகளும் பறிக்கப்பட்டு விட்டன. தென்னை, பனை மரங்களை வெட்டினால் அவற்றின் அடிப் பாகங்களை அரசாங்கத்துக்குக் கொடுத்துவிட வேண்டும் என்பது சளுக்கியர் விதித்திருக்கும் ஒரு புதிய சட்டம். அறுவடை சமயத்தில் வரி வசூல் செய்ய வரும் அதிகாரிகளின் உணவுக்காக 'நெடும்பறை' என்று ஒரு புது வரி. இதுவும் தவிர, ஆவணக் களரிகளில் பதிவு செய்து வைத்துக் காப்பாற்றப் பெறும் நிலவுடைமைக்குரிய மூல பத்திரங்களைச் சளுக்கிய அதிகாரிகள் அழித்தும் எரித்தும் விடுகிறார்கள். அவற்றின் அனுபோகப் பற்றெழுக்கையொட்டிப் புதிய பத்திரங்கள் எழுதிக் கொள்ளவும் அவர்கள் தடுக்கிறார்கள். இப்படி வரிக்கு மேல் வரியாகப் போட்டு அதர்ம வழிகளில் அவற்றை வசூலிக்க முற்படுவதால்தான் மக்கள் அவ்வரிகளைச் செலுத்தச் சக்தியின்றிக் கைவிரிக்கிறார்கள். உடனே அவர்களுடைய சொத்துக்கள் சூறையாடப்படுகின்றன; நிலங்களும், தொழிற் பட்டறைகளும் பறிமுதலாகின்றன; வீடு வாசல்கள் தீக்கிரையாகின்றன...''

துக்க மேலீட்டால் தொண்டை கம்மிக் கரையப் பெருமூச்சுவிட்டு ஒரு விநாடி மௌனமாயிருந்த பரமேசுவர வர்மன் தழுதழுத்த குரலில் மேலும் கூறினான்: ''இந்த விவரங்களையெல்லாம் நான் சொல்வதற்கு ஒரு முக்கிய காரணம் இருக்கிறது, இளவரசி! மொழித் துறையில் பல மாபெரும் சாதனைகளை நிகழ்த்தித் தமிழகத்துக்கு உயர்வு தேடித் தந்த பெருமை பாண்டியருக்கு உண்டு; சமூகத் துறையில் பல நாகரிகச் சீர்திருத்தங்களைச் செய்து செம்மைப்படுத்திய புகழ் சோழருக்கு உண்டு; அரசியல் துறையில் மனிதாபிமான கண்ணோட்டத்துடன் தர்க்க ரீதியான பல சட்ட திட்டங்களை வகுத்து, முறைப்படுத்திக் கொடுத்த கீர்த்தி பல்லவருக்கே உரியது. அந்தச் சிறப்பு மிக்க கீர்த்தியின் அஸ்திவாரத்தையே அரசியல் நாகரிகம் அறியாத சளுக்கியர்கள் இப்போது ஆட்டி அசைத்துத் தகர்த்தெறிந்து கொண்டிருக்கிறார்கள் என்பதை நினைக்கும் போதுதான் என் மனம் எரிமலையாகக் குமுறுகிறது. இறைவன் அருளால் எனது நாட்டினின்றும் சளுக்கியரின் ஆதிக்கத்தை அழித்தொழிப்பேன் என்ற நம்பிக்கையில் இருந்து வரும் நான், அவர்களுக்குப் பின் அவர்களால் விதிக்கப்பட்ட அநியாய வரிகளையும் அநாகரிகச் சட்டங்களையும் அறவே நீக்கிவிடலாம் என்றாலும், அவற்றின் துன்பமயமான வடுக்களை மக்கள் மனத்திலிருந்து அகற்றுவதென்பது மட்டும் அத்தனை எளிதான காரியமாயிராதென்றே நினைக்கிறேன். ஏனென்றால், என்னையறியாமலே-எனக்குத் தெரியாமலே - அந்தக் கொடுமையான வரி விவரங்கள் கல்வெட்டுக்களிலும், பட்டய சாசனங்களிலும் இடம் பெற்று விடலாம். என் காலத்துக்குப் பின் வரப்போகிற பல்லவ மன்னர்களும் பிற தமிழரசர்களும் அவற்றைக் கண்ணுற்று என்னால் அவை விதிக்கப்பட்டதாக எண்ணி மீண்டும் அவ்வரிகளை நடைமுறைக்குக் கொண்டு வர முயற்சி செய்யலாம். ஆயிரம் ஆண்டுகளுக்குப் பின்னால் வரப்போகிற தமிழ் சமூகம் இதனை அறிய நேர்ந்தால் பல்லவரது ஆட்சி முறையைப் பற்றி என்ன நினைக்கும்? உலகிலேயே பல்லவர்கள்தாம் மிக மிகக் கொடிய ஆட்சி நடத்தியவர்கள் என்று அது தூற்றிப் பேசும். இப்படி எனக்குப் பின் வரப்போகிற அரசர்களுக்கு ஒரு தவறான முன்மாதிரியாகவும், அப்போதைய குடி மக்களுக்கு ஒரு மாபெரும் தீங்காகவும், அவர்களுக்குப் பின்னால் வரப் போகிற நாகரிக உலகத்துக்கு எங்களைப் பற்றிய ஒரு பழிப்புப் பேச்சாகவும் அமையும் வகையில் இன்றைய பல்லவ நாட்டின் அரசியல் நிலை பாழ்பட்டுக் கொண்டு போகிறதே என்பதை எண்ணித்தான் மனம் புண்ணாகிக் கொண்டிருக்கிறேன்.''

# தினமும் உங்கள் உணவு






அறுசுவை விருந்தாக
அமைய




டபிள் ரிபைன்ட்

## எடிபிள் ஆயில்

உபயோகித்து
சமையல் செய்யுங்கள்.

தித்திப்பு, கார வகை உணவுகள்
தயாரிப்பதற்கு மிகவும் சிறந்தது

அது ஆரோக்யத்திற்கு ஏற்றது:
வைட்டமின்கள் A மற்றும் D யுடன் கூடியது
சுத்தமாகப் பாக் செய்யப்பட்டு 3 வசதியான
குடும்பத்திற்கேற்ற சைஸ்களில்
கிடைக்கின்றது




**தி ஈஸ்ட் ஏஷியாடிக்
கம்பெனி (இந்தியா)
பிரைவேட் லிமிடெட்.,
சென்னை-1**

EP-EAC 17

அவன் பேசி முடிப்பதற்குள் ஜல தரங்கத்தைச் சுண்டிவிட்டாற் போல் கலகலவென்று நகைத்தாள் ஆந்திர இளவரசி உத்தமசீலி. மமதையும், மிடுக்கும், குறும்பும், குத்தலுமாக அவனைப் பார்த்துக் 'கலீர் கலீ'ரெனப் பலமாகச் சிரித்தாள் அவள்.

ஏற்கனவே கோபத்தால் சிவந்து பழுத்து நின்ற பரமேசுவர வர்மன் அவளுடைய இந்த ஏகத்தாளச் சிரிப்பைக் கேட்டு மேலும் சினமுற்றவனாய் அவளை விழித்து நோக்கினான்.

''நல்ல நியாயம் இது! நகைக்கத் தெரியாதவர்கள்கூட இந்தப் பேச்சைக் கேட்டால் கைகொட்டி நகைக்க ஆரம்பித்துவிடுவார்கள்!'' என்று கூறித் தானே கைகொட்டிப் பலமாக நகைத்தாள் உத்தமசீலி.

பரமேசுவரவர்மனின் கண்களில் அக்கினி ஜ்வாலை வீசியது. ''என்ன சொன்னாய்? என் பேச்சு உனக்கு நகைப்பாகவா இருக்கிறது?''

''ஆமாம், அரசே! நீங்களே சிந்தித்துப் பாருங்கள்.. படை கொண்டு தாக்கிக் கைப்பற்றிய ஒரு நாட்டில், பல காலம் வஞ்சம் வைத்துக் குமுறிக் கொண்டிருந்த ஒரு மன்னன், தரும ஆட்சியா நடத்துவான்? தன் எதிரி நாட்டு மக்களிடம் அன்பும் பரிவும் கொண்டு, சத்தியத்துக்கும் நேர்மைக்கும் கட்டுப்பட்டு, விதிகளையும் சட்ட திட்டங்களையும் அவன் மதிக்க வேண்டும் என்று நீங்கள் எப்படி எதிர்பார்க்கலாம்? இதுவரையில் எந்த ஒரு நாட்டிலும் எந்த ஒரு மன்னனும் அப்படி நடந்திருக்கிறானா? வஞ்சம், பொறாமை, மண்ணாசை, பொன்னாசை, பெண்ணாசை, பதவி வெறி, மத வெறி இவைதாமே ஒரு நாடு இன்னொரு நாட்டின் மீது போர் தொடுப்பதற்கு அடிப்படைக் காரணங்களாக இருக்கின்றன? இந்த அதர்ம நோக்கங்களால் உந்தப்பட்டுப் போர் தொடுத்த ஒருவன் வெற்றியும் பெற்றுவிட்டால், அவனிடம் அடிமைப்பட்ட நாட்டில் செங்கோல் ஆட்சியை எதிர்பார்க்க முடியுமா? கைப்பற்றிய நாடு தன் வசமே இருந்தாலாவது அவன் தனது சுயநலத்துக்காகவேனும் ஓரளவு தர்மத்துக்கும் நியாயத்துக்கும் கட்டுப்பட்டு நடப்பான். அந்த நம்பிக்கையே இல்லையென்றால், எரிகிற வீட்டில் பிடுங்கியவரையில் ஆதாயம் என்று பேயாட்டம் போடத்தானே செய்வான்?''

பனிப் பாறையில் மோதுண்டவன் போல் அப்படியே வெலவெலத்துப் போன பரமேசுவரவர்மன் அவளை விழியசைக்காமல் நோக்கினான்.

''அரசே! தங்களிடம் இந்தக் கசப்பான உண்மையை எடுத்துச் சொல்வதற்காக மன்னிக்க வேண்டும்!.... தங்கள் மதிப்புக்குரிய பாட்டனாரான நரசிம்மவர்மர் பழி தீர்க்கும் எண்ணத்தோடு சளுக்கியப் புலிகேசியின் மேல் படையெடுத்துச் சென்று வாதாபி நகரைக் கைப்பற்றினாரே, அப்போது அங்கே அவர் தர்மத்துக்கும் நியாயத்துக்கும் கட்டுப்பட்டா நடந்துகொண்டார்? அந்த அழகிய நகரின் மாடமாளிகைகளையும், கூடகோபுரங்களையும் இடித்துத் தரைமட்டமாக்கியதோடு நில்லாமல் அந் நகரையே தீயிட்டுப் பொசுக்கிச் சாம்பலாக்கி, அந்தக் கடுகாட்டின் மத்தியிலே தமது வெற்றி வாசகம் பொறித்த கல்தூணை நாட்டிவிட்டு வரவில்லையா? அவரது படை வீரர்கள் இன்னும் ஒரு படி மேலே சென்று, பொன்னையும் பொருளையும் கொள்ளையிட்டு, புகழ் மிக்க கலைஞர்களையும் எழில் வாய்ந்த கன்னியர்களையும் சிறைப்படுத்திக்கொண்டு வந்தார்களே, இவையெல்லாம் தர்மத்துக்கும் நீதிக்கும் சத்தியத்துக்கும் உட்பட்ட செயல்கள்தாமா? உண்மை இவ்வாறிருக்க, தங்கள் பாட்டனார் நரசிம்ம

வர்மரைப் போலவே வஞ்சினம் கொண்டு படை பலத்தால் பல்லவ நாட்டைக் கைப்பற்றிக் கொண்டிருக்கும் சளுக்கிய விக்கிரமாதித்தர் இங்கே தர்ம ஆட்சி நடத்துவார் — அல்லது நடத்த வேண்டும் — என்று நீங்கள் எப்படி எதிர்பார்க்கலாம்? அப்படி நடத்தவில்லை என்பதை அறிந்து துக்கப்படுவதில் அர்த்தம் இல்லையே!''

வாயடைத்துப் போய் நின்ற பரமேசுவரவர்மன் வெட்கத்தால் தலை குனிந்துவிட்டான்.

## அத்தியாயம் இருபத்து நான்கு

# உயிரின் ஆராதனை

ஆடி வரும் பொன் விளக்குப்போல் அழகாக நடந்து வந்து பரமேசுவரவர்மவின் முகத்தைக் குறும்புப் புன்னகையுடன் சாய்ந்து நோக்கிய உத்தமசீலி, ''இதோடு நான் உங்களை விடப் போவதில்லை, அரசே! இன்னுமொரு கேள்வியையும் கேட்டு உங்களையே குற்றவாளியாக்கப் போகிறேன்!'' என்றவள் சட்டென்று நிமிர்ந்து, நறுக்குத் தெறித்தாற்போல் சொற்களை வீசினாள்: ''தங்களுக்குச் சொந்தமான நாட்டில் தங்களால் இரட்சிக்கப்பட வேண்டிய மக்களை ஓர் அந்நியன் வந்து வரிக் கொடுமைகளாலும், நெஞ்சிரக்கமற்ற நீசத்தனமான கட்டளைகளாலும் அலங்கோலப்படுத்திச் சீரழிக்கிறான் என்பதை நேருக்கு நேர் பார்த்துக் கொண்டும் கேட்டுக் கொண்டும் இத்தனை காலமாக உங்களால் எப்படிச் சும்மா இருக்க முடிந்தது? உங்களைப் பத்து மாதம் சுமந்து பெற்றெடுத்த அன்னை சிறைப்பட்டுக் கிடப்பதைக்கூட நீங்கள் இந்நாள் வரையில் எண்ணிப் பார்த்துக் கவலைப்பட்டதாகத் தெரியவில்லையே! சளுக்கிய விக்கிரமாதித்தரின் இப்போதைய கொடுங்கோலாட்சி, தங்களது புகழ் மிக்க பல்லவ குலத்தின்மீது பழிக் கறையைப் பூசி விடுமே என்றுதான் தாங்கள் கவலைப்படுகிறீர்களே தவிர, இன்று கண்ணெதிரேயுள்ள உங்கள் நாடும் அதன் மக்களும் சொல்லொணா நரக வேதனைகளை அநுபவிப்பதுபற்றித் துயரப்படுவதாகவோ துடிப்புக் கொள்வதாகவோ தோன்றவில்லையே! ஒரு மாபெரும் நாட்டின் மன்னர் இப்படி ஆண்டி மனம் கொண்டு அடங்கிக் கிடப்பது ஏன்?''

நெருப்புக் கணைகளால் துளைக்கப்பட்டவன்போல் உடம்பை நெளித்துக் கொண்டு பின்னால் நகர்ந்த பரமேசுவரவர்மன், '''எதிர்காலச் சரித்திரத்தை மனிதன் எழுதுவதில்லை; விதியே அதன் முழுப் பொறுப்பையும் ஏற்றுக் கொள்கிறது; விதியை எதிர்த்து நிற்க நான் யார்?' என்று இத்தனை காலமும் வாளா இருந்து விட்டேன், இளவரசி!'' என்று அடைத்த குரலில் முணுமுணுத்தான்.

உத்தமசீலி இதைக் கேட்டுக் கலுக்கென்று சிரித்தாள். ''இன்றைய மனிதனின் சிந்தனைகளும் முடிவுகளும் செயல்களுமே நாளைய சரித்திரமாக உரு மாறுகின்றன அரசே!'' என்று இனிய தொனியில் மென்மையாகச் சொன்ன அவள் மேலும் கூறினாள்: ''அப்படி ஒரு முடிவுடன் நீங்கள் நீறுபூத்த நெருப்பாக இருக்கிறீர்கள் என்று தெரிந்துதான், அன்று அந்த ஜினாலயத்துக் குளக் கரையிலே உங்களிடம் சொன்னேன், 'குகையை விட்டு வெளி வரும் சிங்கத்தைப்போல், கூட்டை விட்டு வெளிப்படும் ராஜாளியைப்போல், கட்டை அவிழ்த்துக் கொண்டு பாயும் காளையைப்போல், மதர்ப்படைந்து திமிறியோடும் யானையைப்போல் நீங்களும் உங்கள் சுய உருவிலே வெளிப்பட்டு வருவதைக் காண விரும்புகிறேன்' என்று!''

ஓங்கிப் பெருமூச்சு விட்டு நிமிர்ந்த பரமேசுவரவர்மன் அவளைப் பரிதாபமாகப் பார்த்து, ''உன்னுடைய அந்தப் பொன்னான கட்டளையை ஏற்று என் துறவு மனச் சட்டையை உரித்துப் போட்டு விட்டு எழுந்து இன்றோடு மூன்று நாட்களாகின்றன, இளவரசி! ஆனால், சந்தர்ப்பமும் சூழ்நிலையும் என்னை இன்னமும் கட்டிப் போட்டு வைத்திருக்கின்றனவே, நான் என்ன செய்யட்டும்?'' என்று கரகரத்தான்.

''ஓ!.... சந்தர்ப்பத்தையும் சூழ்நிலையையும்பற்றி நீங்கள் தவறாகக் கணக்குப் போட்டு விட்டிருக்கிறீர்கள் அரசே? இப்போதுதான் அவை வெகு வாய்ப்பாகத் தங்களைத் தேடி வந்திருக்கின்றன!''

''என்ன சொல்கிறாய், இளவரசி?''

''ஆம், அரசே! யானை கொழுத்தால் தன் தலைமீது தானே மண்ணை வாரிப் போட்டுக் கொள்வது போல, மண்ணாசை தலைக்கேறி விட்ட சளுக்கிய விக்கிரமாதித்தர், முன்பின் யோசியாமல் பாண்டிய நாட்டின்மேல் படையெடுத்திருக்கிறார். நேற்றோ இன்றோ அந்தப் போர் மூண்டு விட்டும் இருக்கலாம். இத்துடன், அரசியல் ஞானமோ இராஜ தந்திரமோ சிறிதும் அறியாத




ஆணவத் திமிர் படைத்த சளுக்கியத் தளபதி வில்வேலி, காஞ்சிக் கோட்டையைக் காவல் காத்துக் கொண்டிருந்த இளவரசன் விநயாதித்தனைப் பல்லவபுரத்துக்கு அழைத்துக் கொண்டு வந்து அங்கேயே இருக்கச் செய்திருக்கிறான். இவை தவிர, பல்லவ நாட்டில் ஆங்காங்கே நிறுத்தி வைக்கப் பெற்றிருந்த சளுக்கியப் படைகளும் நெல்வேலிப் போர் முனையில் போய்க் குவிந்து விட்டன. அவர்களின் இந்த முட்டாள்தனமான செயல்களினால் இப்போது காஞ்சி மாநகர் உட்படப் பல்லவ நாட்டின் முக்கால் பகுதி எவ்விதப் பாதுகாப்புமின்றித் தாழில்லாத வீடுபோல் கட்டுக் காவலற்றுக் கிடக்கிறது. சிற்சில இடங்களில் சொற்பத் தொகையினராயுள்ள சளுக்கிய வீரர்களும், அவரவர் இஷ்டத்துக்கு வரித் தண்டல் அதிகாரிகளாக மாறிப் பொன்னையும் பொருளையும் கொள்ளையடிப்பதிலேயே குறியாயிருக்கிறார்கள். இந்நிலையில், பல்லவ நாட்டின் வடக்கு எல்லை வழியாக ஒரு சிறு படையுடன் வந்தாலும் போதும்—ஒரே நாளில் காஞ்சிமா நகரைக் கைப்பற்றிக் கொண்டு, பிறகு ஒரு சில நாட்களில் இந்தப் பெருவளநல்லூர் வரையில்கூட முன்னேறிவிடலாம். தெற்கே பாண்டியப் படைகள் தாக்க, வடக்கிருந்து இன்னொரு படை நெருக்கினால், இடையில் அகப்பட்டுக் கொள்ளும் விக்கிரமாதித்தருக்கு மூச்சு விடக்கூட முடியாமல் போய் விடும். இத்தனை அருமையான சந்தர்ப்பமும் சூழ்நிலையும் உங்களுக்கு வாய்த்திருக்கும்போது, அவை இல்லையே என்று கவலைப்படுகிறீர்களே!''

''இளவரசி! உன்னுடைய அரசியல் ஞானத்தைக் கேட்டு நான் பிரமிக்கிறேன். ஆனால், என்னுடைய நிலையை நீ இன்னமும் சரியாகப் புரிந்துகொண்டதாகத் தோன்றவில்லை. ஆமாம், இளவரசி! இதோ பார், இரண்டு கைகளையும் பரக்க விரித்துத் தட்டும் ஒரு பரதேசி போல் நிற்கிறேனே, இது உனக்குத் தெரியவில்லையா? இப்படிப்பட்ட தனி மனிதனாய் நிற்கும் நான் இந்த அரிய சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொள்வது எங்ஙனம்? கீழே விழுந்தால் தூக்கி விடக்கூட ஆள் இல்லாமல் நிற்கும் நான், படை பலம் கொண்ட விக்கிரமாதித்தனைப் படை திரட்டி வந்து தாக்குவது எப்படி? ஓர் இரகசியப் படை திரட்டும் வேலை இப்போது நடந்து கொண்டிருக்கிறது என்றாலும், அதில் பூரண வெற்றி கிடைக்குமா என்பதில் எனக்கே சந்தேகமாக இருக்கிறது. எனவேதான் சூழ்நிலை இடம் கொடுத்து விட்டால் மட்டும் போதாது, சூத்திரக் கயிறும் வேண்டும் என்கிறேன்'' என்று துவண்ட குரலில் கரகரத்தான்.

உத்தமசீலி மௌனமாக நின்றாள். செதுக்கி நிறுத்திய பொற்சிலைபோல் ஆடாது அசையாது நின்ற அவள் மெல்ல நிமிர்ந்து அவனிரு கரங்களையும் மிருதுவாகப் பற்றித் தன் நெஞ்சகத்துக்குள் வைத்துக்கொண்டு, அண்ணாந்த நிலையிலேயே அவனை ஏக்கத்துடன் பார்த்து, ''அரசே! என்னை நீங்கள் நம்புகிறீர்களா?'' என்று கண்களில் ஓர் அபூர்வ ஒளி மிளிரக் கேட்டாள்.

''என் உயிரை நான் நம்பாமல் இருக்க முடியுமா, கண்ணே? என் உயிரின் உயிரான உன்னை நம்பி, உனது அன்பையே தெய்வமென ஆராதிப்பதைத் தவிர இந்த ஜன்மத்தில் எனக்கு வேறு நினைவே இருக்க முடியாது!''

சடாரென்று அவன் அணைப்பிலிருந்து நழுவி விலகிய உத்தமசீலி எல்லையற்ற குதூகலத்துடன் கும்மாளியிட்டுச் சிரித்தாள். ''என் இலட்சியம் வெற்றி பெற்று விட்டது! அது வெற்றி பெற்றே விட்டது! வாருங்கள் பிரபு! தனி மனிதராக நிற்கும் தங்களுக்கு எது தேவையோ அதைப் பெற்றுத் தருகிறேன், வாருங்கள்!'' என்றவாறு அவனுடைய வலக் கரத்தைப் பற்றிக் கொண்டு சேதியக் கலைஞரின் இல்லத்தை நோக்கிச் செல்லத் திரும்பினாள்.

''ஹா!..... ஹயோ!''

பயங்கரமான இந்த அலறல் ஒலி திடீரென்று எழுந்து அந்தப் பிரதேசத்தையே கிடுகிடுக்கச் செய்தது. பரமேசுவரவர்மனும் உத்தமசீலியும் பரபரப்புடன் பின்னால் திரும்பிப் பார்த்தனர்.

அங்கே, அந்த வழுக்குப் பாறையின் பின்புறத்தே, தோளில் பாய்ந்த குத்து வாளுடன் இரத்தம் கொப்புளிக்க வெட்டிப் போட்ட வாழை மரம்போல் சாய்ந்து, துள்ளித் துடித்துக் கொண்டிருந்தார் சளுக்கியத் தளபதி வில்வேலி. அவருக்குப் பின்னால் யாரோ ஒரு மனித உருவம் நாணற் புதர்களுக்கிடையே **ஒளிந்து ஓடுவது தெரிந்தது! (தொடரும்)**

# அமிர்தாஞ்சனம் இப்போழுது புதியதோரு சிக்கன உறையில் கிடைக்கிறது




நாட்டின் சக்திகள் எல்லாம் தற்போது தேசப் பாதுகாப்பிற்காகத் தேவைப்படுகிறது. இக்காரணத்தினால் அமிர்தாஞ்சனம் பாக்கிங்கில் ஓரிரண்டு சிறு மாறுதல்கள் ஏற்படுத்தியுள்ளோம். இதுவரை வெள்ளீய டப்பாவில் பாக் செய்யப்பட்டு வந்த அமிர்தாஞ்சனம் சீசா இனி சாதாரண அட்டைப் பெட்டியில் பாக் செய்யப்படும். மேலும், சீசாவினுள்ளே இருக்கும் அமிர்தாஞ்சனத்தின் இரட்டிப்பு பாதுகாப்புக்காக 'அலு-காப்' சீல் செய்யப்பட்டுள்ளது. ■ தலைவலி, சுளுக்கு, மார்பில் ஜலதோஷம், கீல் வாயுவினால் ஏற்படும் வலிகள் மற்றும் எல்லா விதமான வலிகளையும் அமிர்தாஞ்சனம் போக்குகிறது. இந்த உபாதைகள் உங்கள் உடல் நலனை பாதிப்பதனால் தொழில் உற்பத்தி பாதிக்கப்படுகிறது. ஆகவே தொழில் உற்பத்தியைப் பெருக்கவேண்டிய இந் நிலையில் எப்போதையும்விட அமிர்தாஞ்சனம் இன்று அதிகமாகத் தேவைப்படுகிறது.

**அதிக சக்திவாய்ந்தது,
சிக்கனமானது, பல
உபாதைகளுக்கு சிறந்தது**

இன்று விற்பனையாகும் வலி நிவாரணிகளுள் அமிர்தாஞ்சனம் குறிப்பிடத்தக்க குணதிசயங்களுடன் கூடியது. ஏனெனில், மற்ற மருந்துகளைவிட இதில் அதிக சக்திவாய்ந்த மூலிகை சத்துக்கள் சேர்க்கப்பட்டிருக்கின்றன. ■ அமிர்தாஞ்சனத்தின் இக் கூடுதலான சக்தி, சருமத்தினுள் உடனடியாக ஊடுருவிச் சென்று, ரத்த ஓட்டத்தை ஊக்கப்படுத்துவதன் மூலம் சீக்கிரத்தில் குணமளிக்கிறது. சிறிதளவு அமிர்தாஞ்சனமே வலிகளை அகற்றப் போதுமானது. வீட்டில் அனைவரும் உபயோகப்படுத்தும்போதுகூட ஒரு பாட்டில் அமிர்தாஞ்சனம் பல மாதங்களுக்குவரும்.



## அமிர்தாஞ்சனம்

**உபாதைகளிலிருந்து
உங்களைப் பாதுகாக்கிறது**

அமிர்தாஞ்சன் லிமிடெட், 14/15 லஸ் சர்ச் ரோடு, மதராஸ் 4.

JWT/AM-2225a

# 'ஹேஸலின்' டால்க்

மழமழப்பான வெல்வெட் போன்ற பவுடர்! நீலம்-வெள்ளை-மற்றும் பொன்னிறமான, 'ஹேஸலின்' டப்பாவை எடுத்துக்கொள்ளுங்கள். அதிலுள்ள மழமழப்பான வெல்வெட் போன்ற வெள்ளைப் பவுடரை உங்கள் சருமத்தின் மேல் தூவிக்கொள்ளுங்கள். ஆகா, எத்தனை சொகுசான பராமரிப்பு உங்களுக்கு! என்ன குளுமை! என்ன புதுமை! எத்தனை நறுமணம்! எல்லாம் 'ஹேஸலின்' டால்கின் அருள். வியந்து பாராட்ட வேண்டிய பொருள்!

**ஒரு பர்ரோஸ் வெல்கம் தயாரிப்பு**



BWY-9 TAM



# நம்பிக்கை

**இந்திரன்**

மனத்தை ஒன்றில் ஈடுபடுத்தி அதிலேயே தன்னுள் ஐக்கியமாக்கிக் கொண்ட பின்பு அதனால் விளையும் பயன்களெல்லாம் நல்லனவாகத்தான் இருக்கும் என்ற பிடிப்பான எண்ணம் உதித்து விட்டால் அதுதான் நம்பிக்கை. மனசாட்சி என்ற ஒன்றை வைத்து அது கூறுவதாக உணர்வதைச் செய்வதிலும், மனக்குரலையும் ஒதுக்கி விட்டு வேறு திசையில் புலனைத் திருப்பிப் பலனை நோக்கும் போதும், எதிர்பார்த்தது இல்லை என்றால் அதன் பெயர்தான் விதி என்கிறார்களோ?

எப்படி யிருந்தாலும் பட்டாபிராமன் மனம் ஒன்றில் ஐக்கியமாகி அது பெரும் நம்பிக்கையாகப் பழுத்திருக்கிறது என்பதில் துளி யேனும் சந்தேகத்துக்கு இடமில்லை என்பது அடிக்கடி அவர் வாயிலிருந்து வெளிவரும் 'நம்மால் ஆகக் கூடியது ஒன்றும் இல்லை; எல்லாம் அவன் செய்கிறான்' என்ற வார்த்தைகள் தெள்ளெனக் காட்டி விடும். சமீபத்தில் வேலையிலிருந்து ஓய்வு பெற்ற பட்டாபி, அவர் பல நாட்கள் எதற்காக ஏங்கித் தவித்தாரோ அந்த வேலையைத்தான் இப்போது செய்கிறார். அதாவது எப்போதும் பகவத் தோத்திரங்கள், ஈசுவர தியானம் தான். அதிலே கிடைக்கிற அமைதி அவர் கழித்த வாழ்நாட்களில் மிக அருமையாகத் தான் தென்பட்டது.

ஒன்று குறைந்தால் ஒன்று வளரும் என்கிறார்களே மனித வளர்ச்சியில், அது போல் இளமை குறையக் குறைய முதுமை வளர்கிறது. முதுமை வளர வளர அஞ்ஞானம் குறைகிறது. அஞ்ஞானம் குறையக் குறைய உள்ளத்தில் இருள் நீங்கிப் போய் வெளிச்சம் அதிகரிக்கிறது.

வால்மீகியின் சுலோகங்களும் கீதையின் விரிவான உபந்நியாசங்களும் மட்டும் அவர் கையில் இருந்தால் உலகமே தமக்கு அடக்கம் என்று எண்ணும் பட்டாபிக்கு அந்த நிறைவை முழுதும் அனுபவிக்கச் சில தடைகள் இருக்கத் தான் இருந்தன. முதலாவதாகத் தம் ஒரே பிள்ளை ரகுராமன் பத்தாம் வகுப்பு முடித்து மேலே படிக்க வசதியில்லாது வேலைக்குப் போகும் நிலையில் இருக்கிறான் என்பது அவர் தெளிந்த மனத்தில் கீறலாகக் கிளம்பி விரிசலாகப் பெருகும். அப்போதும் அவர் மனம், ''ம்..... நம்மால் ஆகக் கூடியது என்ன? எல்லாம் அவன் செய்ய வேண்டியதல்லவா?'' என்றுதான் நினைக்கும். அந்த நினைவு தவறே. சரியோ எப்படியும் அதில் அவருக்கு அளவு கடந்த நம்பிக்கை. கீதையில் பகவான் உபதேசிக்கும் உன்னதமான வாக்கியங்களைப் படித்து விட்டு ஒரு கணம் தன் கண்களையே மூடி இதயத்தைத் திறந்து கிருஷ்ணனே தம் முன் நின்று கூறுவது போன்ற அந்த ரசமான பாவத்தை உள்ளுக்குள்ளே ரசித்துக்கொண்டிருந்தார். ஒரு நிமிஷம் தான், அதற்குள் அது கலைக்கப்பட்டு விட்டது.

''அப்பா... இன்னிக்குக் காலையிலே அடுத்த வீட்டு மாமா வந்திருந்தார். நீங்க கோயிலுக்குப் போயிட்டேள்......''

அவர் மகன் ரகுராமன் தான் அப்படிக் கூறிக் கொண்டு வந்தான். உள்ளத்தை மூடிக் கொண்டு கண்களைத் திறந்தார் பட்டாபி.

''எதற்கு வந்தார்? ஏதாவது விசேஷமாடா ரகு?''





"ஆமாம். எனக்காகத்தான் வந்தார். கங்காதரன் பாங்கியிலே ஒரு வேலை காலி யிருக்கிறதாம். அதற்கு அப்ளிகேஷன் போடுன்னு சொல்ல வந்தார். அந்தப் பாங்கு முதலாளி அவருக்குத் தெரிந்தவராம்....."

"ஓகோ... சரி! போடறதுதானே? இதற்கு என்னைக் கேட்கணுமா, ரகு? பேஷாப் போடு... எல்லாம் அவன் செயல். எல்லாம் அவன் அல்லவா நடத்தறான். போடு இன்னிக்கே" என்றார்.

"போடலாம்பா! அதற்கு முதலிலே ஐந்நூறு ரூபாய் டெபாஸிட் கட்டணுமாம்."

"டெபாஸிட் ஐந்நூறு ரூபாயா? ..ம்.. வேறு வேலை ஒன்றும் காலியில்லையாமா?"

"அது ஒன்றுதான் இருக்குதாம். அதற்கும் ஏகப்பட்ட போட்டியாம். சம்பளம் நூற்றைம்பது ரூபாயாம்....."

"அதெல்லாம் சரி. இப்போது மொத்தமாக எங்கே போவது ஐந்நூறு ரூபாய்க்கு?"

தலையில் கையை வைத்துக் கொண்டு ஏதோ சிந்தனையில் ஈடுபட்டிருக்கும்போது வீட்டின் உள்ளே இருந்து ஒரு குரல் சற்றுக் கோபத்துடன் கலந்து வந்ததும் பட்டாபிராமன் திரும்பினார்.

"எங்கே போவதுன்னு சொல்லிக் கொண்டிருந்தால் போதுமா? ஏதாவது வழி செய்து தான் ஆகணும். நீங்கதான் கீதையும் வால்மீகியும் வைச்சிண்டு அறையிலே தவம் கிடக்கிறீர்கள். அவனும் அப்படி இருக்கறதுயுமா? எத்தனை நாளைக்குத்தான் பின்னை வேலை யில்லாமல் சும்மா வீட்டையும் ஊரையும் சுத்திண்டிருப்பான்? எழுந்திருங்கோ முதல்லே. எங்காவது அந்தப் பணத்தைப் புரட்ட வழி பாருங்கோ. நகை நட்டை விற்று ஏதாவது செய்யலாம்னு அது தான் காலம் கருகிண்டு யிருக்கே. நீங்களா எதையும் எடுத்துச் செய்யறதில்லே. வேற்று மனுஷாள் உதவுறான்னு ஒத்தரைகூடச் செய்யக் கூடாதா? நீங்கபாட்டுக்கு இப்படியே இருந்தால் பின்னைதான் என்ன செய்வான்னு நினைக்கிறீர்கள்? முதலில் அதற்காக வேண்டியதைப் பாருங்கோ. கீதையும் வால்மீகியும் எங்கேயும் ஓடி விடாது....."

இத்தனை நாட்கள் உள்ளத்திலே போட்டு மூடி மறைத்து அடக்கி வைத்திருந்த குமைச்சலை வெளிப்படுத்தி விட்டதில் உள்ள சுமைக் குறைவோடு மீண்டும் உள்ளே சென்று விட்டாள் பட்டாபியின் மனைவி லட்சுமி.

அவள் அப்படிப் பொரிந்து தள்ளி விட்டுச் சென்றதும் பட்டாபி இருக்கையை விட்டு ஓர் இலேசான சிரிப்புடன் எழுந்தார். "நாமாக எதையும் செய்துடறதில்லே. எல்லாம் அவனுக்குத் தெரியும், எந்தக் காலத்திலே எதைச் செய்யணும்கிறது. நாம் அவசரப்படறதினாலே எல்லாம் நடந்துடறதுன்னு நினைச்சா அது முட்டாள்தனம்தான்." இதை அவர் வாய் விட்டுச் சொல்லா விட்டாலும் மனத்துக்குள் நினைத்துக் கொண்டார். "இருந்தாலும் முயற்சி எடுக்கவில்லை" என்று பிறர் குற்றம் சாட்டுவதும் ஒரு வகையில் நியாயமாகத்தானே இருக்கிறது. 'சரி... அதையும் பார்க்கலாமே....' என்று நினைத்ததும் மறுபடியும் சிந்தனையில் தேக்கம் கண்டது. யாரிடமும் இது வரையில் சென்று தமக்காக எதற்கும் கெஞ்சிக் குழைந்து நடித்துப் பழக்கமில்லை. என்றாலும் இதற்கு ஏதாவது செய்தாக வேண்டாமா? பொரிக என்றால் யாரையும் கொஞ்சம் தாராளமாக அணுகலாம். பண விஷயமாயிற்றே. அதுவும் மொத்தமாக ஐந்நூறு. யாரைக் கண்டு எப்படி வாய்விட்டுக் கடன் என்று கேட்பது? ஒரே மகளின் கலியாணம் வந்தது. அதற்கு இப்படித்தான் நல்ல வரன் என்பதற்காக மூவாயிரம் ரூபாய்க்கு நெருக்கடியில் நின்ற போது யாரையும் கண்டு கேட்க மனமில்லாமல் தமக்குப் பூர்வீகம் என்றிருந்த கொஞ்சம் நிலத்தையும் விற்றார். பிறகு மாப்பிள்ளைக்கு அவசரம் என்று பணத்துக்காகக் கண்ணீரும் குழந்தையுமாக வந்த பெண்ணுக்குத் தம் பிராவிடண்டு பண்டு பணத்தை வாங்கித் தந்தார். இப்போது மாதா மாதம் வருகிற நூறு ரூபாய் பென்ஷனில் லட்சுமியின் சிக்கனத்தால் குடும்பம் நடந்து வருகிறது. பையன் வேலைக்குப் போனால் கஷ்டம் குறையும் என்ற நம்பிக்கைதான் இவரைத் தன்மதிப்போடு வாழச் செய்தது.

அவரும் பல விதமாகக் குழம்பிப் பிறகு தமக்குத் தெரிந்த மனிதர்கள் ஓரிருவரைக் கண்டு விட்டுச் சோம்பிய முகத்துடன் திரும்பிக் கொண்டிருந்தார். அன்றைக்கு மாலைக்குள் எப்படியும் அதைத் தயார் செய்தால் தான் பையனுக்கு வேலை. இல்லையென்றால் கையின் மேல் இருப்பது போன்ற அந்த வேலை நழுவி விடும். வெயிலில் சுற்றி விட்டு வந்த பட்டாபி வீட்டுத் திண்ணையில் துண்டைப் போட்டு, "நாராயணா" என்ற பெருமூச்சோடு சாய்ந்திருக்கும்போது மகன் ரகுராமன் வந்து ஒரு யோசனை சொன்னான்.

அவருக்குத் தெரிந்த பெரிய புள்ளிகளில் அந்த ஊர் பெரிய கண்டிராக்டர் சிவசாமியும் ஒருவர். அவரிடம் எப்போதும் ரொக்கம் புரளும். சிவசாமியோடு பழகிய பத்து வருஷங்களில் இது வரை அவரிடம் சென்று காலணா கடனாகக் கேட்டதில்லை. எப்படிக் கேட்பது என்ற சலனம் இருந்தாலும் லட்சுமியின் பேச்சும், பையனின் நிலையும் தம்முடைய வெறும் கையும், குடும்பத்தின் கஷ்டம் குறையலாம் என்ற நம்பிக்கையும் அவரை இழுத்துச் சென்றன. தெரு முனையில் உள்ள பெரிய பங்களாவில் நுழைந்தார்.

"அடேடே....வாங்க பட்டாபி....வாங்க ஏது இவ்வளவு தூரம்....?"

சிவசாமிதான் அவ்வளவு உற்சாகமாக வரவேற்றார். பட்டாபி என்றுமே அவர் வீட்டுக்கு வந்ததில்லை. இத்தனைக்கும் இருவரும் சிநேகிதர்கள்தான். ஒரு வருஷத்துக்கு முன்பு தம் மகளுக்குக் கலியாணம் நடந்த போது ஒரு முறை அவர் வீட்டுக்குப் பட்டாபி போயிருக்கிறார். அநாவசியமாக எதற்கும் வரமாட்டார். ஏழை குமாஸ்தாவாக இருந்தாலும் மானஸ்தர், நாணயமுள்ளவர் என்ற நல்ல பெயரை இந்த ஐம்பது வயது தாண்டிய நிலையிலேகூட அவரால் காப்பாற்ற முடிகிறது. இருவரும் கொஞ்ச நேரம் குடும்ப விவகாரங்களைப் பற்றிப் பேசினார்கள். முடிவில் பட்டாபி தயங்கித் தயங்கி எப்படியோ விஷயத்தைக் கூறினார். பையனுக்கு வேலை கிடைக்க ஒரு சந்தர்ப்பம். ஐந்நூறு இருந்தால்




குடும்பத்திற்
கேற்ற
இணையற்ற
சோப்

# மார்கோ சோப்



மாதர் மற்றும் குழந்தைகளின் மிருதுவான சருமத்திற்குப் பாதுகாப்பு அளிக்கும் ஹானியற்ற மிருதுவான சோப். துர்க்கந்தம் நீக்கப்பெற்ற வேப்பெண்ணெயிலிருந்து தயாரிக்கப்பட்டு, வாசனையுள்ளதால், சுகாதாரத்திற்கு ஏற்றது. சருமத்தில் மாசுகளின்றி சுத்தமாக வைத்திருக்கும்.

தி கல்கத்தா கெமிகல் கம்பெனி லிமிடெட் கல்கத்தா-29
தென் இந்திய ஆபீஸ்: 5/149, பிராட்வே, சென்னை-1

---

## சமைக்கும்போதே இளைப்பாறலாம்

இந்த அற்புத மண்ணெண்ணெ அடுப்பு கண்டு பிடிக்கும் வரையில் சமையல் என்முலே மிகக் கஷ்டமான காரியம் என்று கருதப்பட்டு வந்தது. இப்பொழுது நீங்கள் சமைக்கும்போதே இளைப்பாறலாம். கரி உடைக்கும் கஷ்டமோ அடுப்பூதும் சிரமமோ, கண்ணில் புகை மண்டுதலோ இல்லை. சமையலறையில் புகைக்கரி பிடிக்காது. இந்த அடுப்பு துப்புரவானது. எளிதானது. எளிமையானது.

- தூசி, தும்பு, புகை, சத்தமின்றி
- சிக்கனமும் பாதுகாப்புமுள்ளது
- ஸ்பேர் பாகங்கள் கிடைக்கும்




# ஜாஸ் ஜனதா

மண்ணெண்ணெ அடுப்பு

சுவையான சமையல்



சுலபமான சமையல்

தயாரிப்பாளர்கள்:
தி ஓரியண்டல் மெட்டல் இண்டஸ்ட்ரீஸ் பிரைவேட் லிமிடெட்
77, பௌபஜார் தெரு, கல்கத்தா-12

நாளைக்கே வேலை. குடும்பக் கஷ்டத்தைச் சமாளிக்கப் பிரயோஜனப்படும். மாதா மாதம் தவணைகளாகக் கடனைத் தீர்த்துவிட வேண்டியது. பட்டாபியின் மகனைப் பற்றிக் கூறியதும் சிவசாமி இதுவரை ரகுவைப் பற்றி எதுவும் சொல்லாமல் இருந்ததைக் கண்டு வருத்தப்பட்டார்.

''இத்தனை நாட்கள் உங்கள் பையனைப் பற்றி என்னிடம் சொல்லவில்லையே. எனக்குத் தெரிந்தவர் கம்பெனியில் கூட இன்னும் சில நாட்களில் ஒரு வேலை காலியாகிறது. அதற்கு வேண்டுமானாலும் சொல்கிறேன்...'' என்றார் சிவசாமி.

கை மேல் இருப்பதைவிட இன்னும் சில நாட்களில் உருவாகப் போகிற வேலையில் அவ்வளவு நம்பிக்கை வைக்கலாமா என்ற சந்தேகம் எழுந்தது பட்டாபிக்கு. ''ஏதோ பையன் இதற்குப் போக வேண்டும் என்கிறான். பக்கத்து வீட்டு நண்பருக்குப் பாங்கு முதலாளி தெரிந்தவராம். டெபாசிட் பணம் மட்டும் இருந்தால் சேர்த்து விடலாம் என்று சொல்கிறார். அதனால்தான்.... அது இல்லையென்றால் ஏதாவது பிறகு பார்க்கலாம்.....''

''அப்படியென்றால் சரி. 'செக்' தரட்டுமா? அல்லது பணமாக மாற்றித் தரட்டுமா?'' என்றார்.

''நாளைக்குக் கட்ட வேண்டியிருக்கும் என்கிறான். பணமாகத் தந்தால் நல்லது. எனக்குப் பாங்கியிலே ஏது....''

''என்ன அப்படிச் சொல்லி விட்டீர்கள்? உங்கள் மனம்தான் மற்றவர்களின் நம்பிக்கைக்குப் பாங்கியாக இருக்கிறதே. சரி, நாளை காலையில் மாற்றி வைக்கிறேன். பையனை அனுப்புங்கள்'' என்றார் சிவசாமி.

'எல்லாம் நாமா செய்கிறோம்? அவனல்லவா செய்கிறான்?' என்ற முணுமுணுப்போடு சிவசாமியிடம் நன்றி செலுத்தி விட்டு வீடு திரும்பினார் பட்டாபி.

**ம**று நாள் காலையில் பக்கத்து வீட்டு மாமாவோடு சிவசாமியிடம் வாங்கி வந்த பணத்தையும் எடுத்துக் கொண்டு தகப்பனாரின் ஆசீர்வாதத்துடன் புறப்பட்டான் ரகு. 'சகுனமெல்லாம் சரியாக இருக்கிறது. போய் விட்டு வா' என்று லட்சுமியும் சொல்லி அனுப்பி வைத்தாள்.

அங்கிருந்து பஸ்ஸிலோ டாக்ஸியிலோ தான் பாங்கு முதலாளி வீட்டுக்குப் போக வேண்டும். காலை நேரமானதால் பஸ்ஸில் கூட்டம் இருக்காது. அதிலேயே போய் விடலாம் என்ற மாமாவின் யோசனைப்படி பஸ்ஸைப் பிடித்து ஏறிக் கொண்டனர். எதிர்பார்த்ததற்கு மாறாக உள்ளே ஒரே நெரிசல்.

''ரகு.... பையைப் பத்திரமாகப் பார்த்துக் கொள்.'' மாமாதான் சொன்னார்.

ரகுவும் பத்திரமாகப் பிடித்துக் கொண்டிருந்தான். கால் மணி நேரத்தில் பஸ் அந்த இடத்துக்கு வந்ததும் இருவரும் கூட்டத்தோடு நெரிசல் பட்டு ஒருவாறு இறங்கிவிட்டார்கள். எதிர்த்த வரிசையில் பாங்கு முதலாளி பராங்குசம் பங்களா. இங்கிருந்து பார்க்கும் போதே வெளியில் நின்றவர்கள் கூட்டம் நன்றாகத் தெரிந்தது. அங்கு இருந்த ஒன்பது பேரும் இந்த வேலைக்குத்தான் வந்



'' நீ எனக்கு விற்கிறது மாடுதானா? உடம்பில் உள்ள எல்லா எலும்புகளையும் விரல் விட்டு எண்ணி விடலாம் போலிருக்கே !''

''நன்னா எண்ணுங்க ! எலும்புக்கு உத்தரவாதம்! அதில் ஒரு எலும்பு குறைந்தாலும் நான் பணத்தை வாபஸ் செய்து விடுகிறேன்.''

திருப்பார்கள். ஒவ்வொருவரும் ஒரு பெரிய மனிதரைச் சிபாரிசுக்கு அழைத்துக் கொண்டு வந்திருந்தார்கள்.

''ரகு.... பார்த்தாயா கூட்டத்தை. எல்லாம் நாம் போகும் வேலைக்காகத்தான். இருந்தாலும் நான் சொன்னால் அவர் தட்ட மாட்டார்'' என்று சொல்லிக் கொண்டே போனவர் பதில் இல்லாததைக் கண்டு திரும்பியதும் ஒருகணம் திகைத்தே போய் விட்டார். பேயறைந்தது போன்ற முகத்துடன், ரகு, பஸ் சென்ற திக்கையே வெறிக்கப் பார்த்தவாறு நின்று கொண்டிருந்தான். அவன் சட்டைப் பை கிழிந்திருந்தது.

''என்னடா ரகு?.... ஏன் இப்படி நிற்கிறாய்? பையிலே என்ன கிழிசல்?.... ஆ. பணமா...?''

அதற்கு மேல் அவரால் பேசவோ, திறந்த வாயை மூடவோ நினைவில்லை. ரகுவின் கண்கள் பொல பொல வென்று நீரைக் கொட்டிக் கொண்டிருந்தன. அவன் வாய் குளறியது.

''நான் பத்திரமாகத்தான் மாமா பிடித்திருந்தேன். இறங்குவதற்குள் ஏதோ ஆகியிருக்கிறது. பையைப் பார்த்தேன் அதில்...'' அதற்கு மேல் அவனால் சொல்ல முடியவில்லை. எப்படி முடியும்? அந்தப் பணத்துக்காக வயதான காலத்தில் பட்டாபி எத்தனை சிரமங்கள் பட்டார். தம் சுய மதிப்பையே அதற்காகத் தியாகம் செய்த அந்தக் கிழவரின் ஏங்கிய முகம்தான் அவன் முன் தெரிந்திருக்க வேண்டும். பிரமை பிடித்தவன் போல் நின்ற அவனை ஏதோ தீர்மானம் செய்தபடியே சிறிது தூரத்தில் இருந்த போலீஸ் ஸ்டேஷனுக்கு அழைத்துக் கொண்டு ஓட்டமும் நடையுமாக விரைந்தார் மாமா. பஸ்ஸும் வெகு தூரம் புழுதிப் படலத்தைப் பரப்பி விட்டு அதிலேயே மறைந்து சென்று விட்டது. போலீசில் புகார் கொடுத்தார். ''நாங்கள் முடிந்தவரையில் முயற்சி எடுக்கிறோம். சார்... ஆனால்... இவ்வளவு அஜாக்கிரதையாக நீங்கள் இருந்திருக்கக் கூடாது. கூட்டமுள்ள இடங்களில் இருக்கும்போது பணத்தைக் கவனமாகப் பார்த்துக் கொள்ள வேண்டாமா?.......''

> ஞானமானது வேறு எந்த நாட்டுக்கும் செல்லுமுன் இந்தப் புராதன புண்ணிய பூமியையே தனது வீடாகக் கொண்டிருந்தது. கடலிலே கலக்கத் துள்ளியோடும் இந்த நாட்டு நதிகள் இந்த நாட்டு மக்களிடையே ஆத்மிக வெள்ளம் எப்படிப் பெருக்கெடுத்துப் பாய்கிறது என்பதை உணர்த்துகின்றன. —ஸ்வாமி விவேகானந்தர்

என்று கூறிய சப்-இன்ஸ்பெக்டர் விலாசத்தைக் கேட்டு எழுதிக் கொண்டார்.

நம் இதயக் கூண்டிலே அடைத்து வைத்திருந்த அந்த நம்பிக்கையைப் பிடித்து ஆவேசமாக உலுக்கிக் கொண்டிருந்தார் பட்டாபி. நாராசமான ஓசையும் கூச்சலும் எங்கிருந்தோ உருவாகி அமைதி நிரம்பிய அந்த இதயவெளியில் எழுந்து விஸ்வரூபம் எடுத்துக் கொண்டிருப்பதால் ஏதோ ஒன்று — இத்தனை நாட்கள் பாதுகாத்த ஒன்று தகர்ந்தெறியப் படப் போகிறது என்பது போன்ற பாவனை அடிக்கடி அவர் விடுகின்ற பெருமூச்சில் தெரிந்தது. இருந்தாலும் அவர் அதை அடக்கினார். ''எல்லாம் அவன் செயல், நம்மால் என்ன?..'' என்று நினைக்கும் போது அவருடைய எண்ணம் சற்றுத் தயங்கி எதையோ ஊடுருவிச் சென்று கொண்டிருந்தது. மேஜை மீது வைத்திருந்த கீதையும் வால்மீகியும் கண்ணில் பட்டு அனல் துண்டுகளாகத் தெறித்தன. 'ஏன் இப்படி நடந்தது? இது அவன் செயலாக எப்படி இருக்க முடியும்? ஒருகால் நாமாக முந்திக் கொண்டு அவன் கட்டளையைக் கடந்து சென்று விட்டோமா?... நாம் எப்படி முந்திக் கொள்ள முடியும்? முதலும் முடிவும் அவன் தானே? அவன்தானே அறிவு? அவன்தானே முயற்சி.... அவன்தானே பயன்?' காலையும் மாலையும் கண் குளிரக் கண்டு வாய் குளிரப் படித்து மனம் குளிர நினைத்து மகிழ்ந்த இரண்டு புத்தகங்களையும் எடுக்க அவரது கரங்கள் கூசின. இது வெறும் எழுத்தும் காகிதமும் சேர்ந்த உயிரற்ற உணர்வற்ற கட்டுதானா? இதில் உள்ளத்தைப் பதித்து உணர்வைக் கிளப்பி ஊனை உருக்கி உள்ளொளியைப் பெருக்கி அதில் ஒன்றித் திளைத்ததெல்லாம் கனவா?... கற்பனையா?....

அவர் குழம்பிய மனத்தில் எழுந்த உணர்ச்சிக் குமிழிகள் கேள்விகளாகத்தான் பரிணமித்தன. அதற்குப் பதில் தருகின்ற அறிவு, தாங்க முடியாத தாக்குதலால் மழுங்கி மறைந்து கிடந்தது.

ஒரு வாரம் அந்த வீடு சோக லட்சுமியின் வாசஸ்தலமாகக் காட்சியளித்தது.

அன்று காலையில் வழக்கம் போல் அறைக்குள் சென்ற பட்டாபியின் கண்கள் எதிர் அலமாரியில் உள்ள இரண்டு புத்தகங்களில் பட்டுத் திரும்பின. அதை எடுக்க அவரது கரங்களும் உள்ளமும் நடுங்கியதை அவரால் உணர முடிந்தது. ''எல்லாம் அவன் செயல்'' என்ற நம்பிக்கையை மனத்தில் உருப் போட்டாலும் நடந்த நிகழ்ச்சி அதைத் திரையிட்டு மறைத்து விளையாடியது. எதற்கும் இதுவரை கலங்காத பட்டாபி அதில் கலங்கித்தான் நின்றார். மகனுடைய வேலைக்கு முயன்ற முதல் முறையிலேயே பலத்த ஏமாற்றத்தோடு பெருத்த நஷ்டம். அவரது மென்மையான உள்ளம் யாரைச் சபிக்க முடியும்? நாம் வைத்திருக்கும் நம்பிக்கைதான் அவர் முன்னால் அவருடைய சாபத்துக்கு வந்து நிற்பது போல் தோன்றியது. கண்களை மூடியவாறு கீதையை மடியில் வைத்துக் கொண்டே உறங்கி விட்டார் பட்டாபி. தாங்க முடியாத அளவுக்குப் பாரத்தைத் இடரென்று சுமக்க முடியாத அவர் உள்ளத்தோடு உடலும் சோர்ந்ததில் வியப்பில்லை. மூடியவிழிகளில் அவர் நம்பிக்கைக்குப் பாத்திரமாக இருக்கும் வேத வித்தகன் தோன்றியிருப்பான். அதனால்தான் அடிக்கடி அவர் முகம் முறுவலில் அமிழ்ந்து எழுகிறது போலும்.

''சார்.... பட்டாபி சார்....''

''யாரது?....'' கண்களை இலேசாகத் திறந்த பட்டாபி வாசலில் பக்கத்து வீட்டு மாமா நிற்பதைக் கண்டு ''வாங்கோ, சார்'' என்று தெம்பிழந்த குரலோடு வெளியே வந்தார்.

'' இன்றைக்குப் பேப்பர் பார்த்தீர்களா?''

''என்ன விசேஷம்?....'' உற்சாகமில்லாத கேள்வியாக வெளி வந்தது.

''நாம் வேலைக்கு முயற்சி செய்தோமே பாங்கு, அதில் பெரிய திருட்டு நடந்து விட்டது. ஐம்பதினாயிரத்துக்கு இருக்கும் என்கிறார்கள்.''

''என்ன..... என்ன சொல்கிறீர்கள்?...''

''ஆமாம், சார்! இன்னும் வெளியிலே வேறு மாதிரியாகக் கூடப் பேச்சு அடிபடுகிறது. யாரோ அந்த பாங்கியில் வெகு நாட்களாக ஒரு காஷியர் இருந்தானாம். அவன் தான் சாமர்த்தியமாகப் புது ஆள் தலையிலே இதைப் போட்டு விட்டுத் தப்பித்துக் கொண்டு விட்டானாம். நம் ரகு அங்கிருந்திருந்தால்.....'' அவர் அந்தக் கேள்வியை முடிக்கவில்லை.

''நாராயணா....!'' இதுதான் பட்டாபியின் வாயிலிருந்து வெடித்த சொல். அதனுள் தான் எத்தனை விதமான பொருள்கள் பொதிந்திருந்தன. இதய கமலத்தில் சிரிக்கும் ஏதோ ஒரு கீத நாதம் அவர் ஐம்புலன்களிலும் புகுந்து வியாபித்துத் தம்மை மறக்கும்படி நம்பிக்கைக்குப் பாத்திரமானவனின் தேஜஸைக் கண்டு ரசித்தார்.

ரகுராமன் அவசரமாக உள்ளே வந்தான். ''போலீஸ் ஸ்டேஷன்லே வந்து பார்க்கச் சொன்னார் சப் இன்ஸ்பெக்டர்.....''

பட்டாபி மூடிக் கொண்ட கண்களிலிருந்து வெளி வந்த நீர்க் கோடு கன்னத்தின் வழியாக இறங்கிக் கையில் பிடித்திருந்த கீதையின் பட்டுத் தெறித்தது. நம்பிக்கை வீண் போகவில்லை என்ற அசாதாரண உதவி அவர் உயிரில் கலந்து உடலுக்கு வெளியே ஒளி மயமாய்க் காட்சியளித்ததைக் கண்ட லட்சுமியின் கண்கள் உள்ளே இருந்த புத்தக அலமாரியை நோக்கி நிலைகுத்தி நின்றன.

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press Kilpauk Madras-10
Managing Editor T. Sadasivam.

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon